# தொடர்பாடலும் ஊடகவியற் கற்கையும்

## தரம்
## 11

கல்வி வெளியீட்டுத் திணைக்களம்



சகல பாடநூல்களையும் இலத்திரனியல் ஊடாகப் பெற்றுக்கொள்வதற்கு
www.edupub.gov.lk வலைத்தளத்தை நாடுங்கள்.

## தேசிய கீதம்

சிறீ லங்கா தாயே - நம் சிறீ லங்கா
நமோ நமோ நமோ நமோ தாயே

நல்லெழில் பொலி சீரணி
நலங்கள் யாவும் நிறை வான்மணி லங்கா
ஞாலம் புகழ் வள வயல் நதி மலை மலர்
நறுஞ்சோலை கொள் லங்கா
நமதுறு புகலிடம் என ஒளிர்வாய்
நமதுதி ஏல் தாயே
நம தலை நினதடி மேல் வைத்தோமே
நமதுயிரே தாயே - நம் சிறீ லங்கா
நமோ நமோ நமோ நமோ தாயே

நமதாரருள் ஆனாய்
நவை தவிர் உணர்வானாய்
நமதேர் வலியானாய்
நவில் சுதந்திரம் ஆனாய்
நமதிளமையை நாட்டே
நகு மடி தனையோட்டே
அமைவுறும் அறிவுடனே
அடல் செறி துணிவருளே - நம் சிறீ லங்கா
நமோ நமோ நமோ நமோ தாயே

நமதார் ஒளி வளமே
நறிய மலர் என நிலவும் தாயே
யாமெலாம் ஒரு கருணை அனைபயந்த
எழில்கொள் சேய்கள் எனவே
இயலுறு பிளவுகள் தமை அறவே
இழிவென நீக்கிடுவோம்
ஈழ சிரோமணி வாழ்வுறு பூமணி
நமோ நமோ தாயே - நம் சிறீ லங்கா
நமோ நமோ நமோ நமோ தாயே

ஒரு தாய் மக்கள் நாமாவோம்
ஒன்றே நாம் வாழும் இல்லம்
நன்றே உடலில் ஓடும்
ஒன்றே நம் குருதி நிறம்

அதனால் சகோதரர் நாமாவோம்
ஒன்றாய் வாழும் வளரும் நாம்
நன்றாய் இவ் இல்லினிலே
நலமே வாழ்தல் வேண்டுமன்றோ

யாவரும் அன்பு கருணையுடன்
ஒற்றுமை சிறக்க வாழ்ந்திடுதல்
பொன்னும் மணியும் முத்துமல்ல - அதுவே
யான்று மழியாச் செல்வமன்றோ.

ஆனந்த சமரக்கோன்
கவிதையின் பெயர்ப்பு.



''புதிதாகி, மாற்றமடைந்து சரியான அறிவின் மூலம்
நாட்டுக்குப் போன்றே முழு உலகிற்கும் அறிவுச் சுடராகுங்கள்''

## கௌரவ கல்வி அமைச்சரின் செய்தி

கடந்து சென்ற இரு தசாப்தங்களுக்கு அண்மிய காலமானது உலக வரலாற்றில் விசேட தொழினுட்ப மாற்றங்கள் நிகழ்ந்ததொரு காலமாகும். தகவல் தொழினுட்பம் மற்றும் ஊடகங்களை முன்னணியாகக் கொண்ட பல்வேறு துறைகளில் ஏற்பட்ட துரித வளர்ச்சியுடன் இணைந்து மாணவர் மத்தியில் பல்வேறு சவால்கள் தோன்றியுள்ளன. இன்று சமூகத்தில் காணப்படும் தொழில்வாய்ப்பின் இயல்பானது மிக விரைவில் சிறப்பான மாற்றங்களுக்கு உட்படலாம். இத்தகைய சூழலில் புதிய தொழினுட்ப அறிவையும் திறனையும் அடிப்படையாகக் கொண்டதொரு சமூகத்தில் வெவ்வேறு விதமான இலட்சக்கணக்கான தொழில்வாய்ப்புகள் உருவாகின்றன. எதிர்கால சவால்களை வெற்றிகொள்ளும் பொருட்டு நீங்கள் பலம்பெற வேண்டுமென்பது கல்வி அமைச்சரென்ற வகையில் எனதும் எமது அரசினதும் பிரதான நோக்கமாகும்.

இலவசக் கல்வியின் சிறப்புமிக்கதொரு பிரதிபலனாக உங்களுக்கு இலவசமாகக் கிடைத்துள்ள இந்நூலை சீராகப் பயன்படுத்துவதும் அதன்மூலம் தேவையான அறிவைப் பெற்றுக்கொள்வதுமே உங்கள் ஒரே குறிக்கோளாக இருக்க வேண்டும். அத்துடன் உங்கள் பெற்றோர்களுட்பட மூத்தோரின் சிரமத்தினதும் தியாகத்தினதும் பிரதிபலனாகவே இலவசப் பாடநூல்களை அரசினால் உங்களுக்குப் பெற்றுத்தர முடிகிறது என்பதையும் நீங்கள் விளங்கிக்கொள்ள வேண்டும்.

ஓர் அரசாக நாம், மிக வேகமாக மாறி வரும் உலக மாற்றத்திற்குப் பொருந்தும் விதத்தில் புதிய பாடத்திட்டத்தை அமைப்பதும் கல்வித் துறையில் தீர்க்கமான மாற்றங்களை மேற்கொள்வதும் ஒரு நாட்டின் எதிர்காலம் கல்வி மூலமே சிறப்படையும் என்பதை மிக நன்றாகப் புரிந்து வைத்துள்ளதனாலேயேயாகும். இலவசக் கல்வியின் உச்சப் பயனை அனுபவித்து நாட்டிற்கு மாத்திரமன்றி உலகுக்கே செயற்றிறன்மிக்க ஓர் இலங்கைப் பிரசையாக நீங்களும் வளர்ந்து நிற்பதற்கு தீர்மானிக்க வேண்டியுள்ளது. இதற்காக இந்நூலைப் பயன்படுத்தி நீங்கள் பெற்றுக்கொள்ளும் அறிவு உங்களுக்கு உதவுமென்பது எனது நம்பிக்கையாகும்.

அரசு உங்கள் கல்வியின் நிமித்தம் செலவிடுகின்ற மிகக் கூடிய நிதித்தொகைக்கு பெறுமதியொன்றைச் சேர்ப்பது உங்கள் கடமையாவதுடன் பாடசாலைக் கல்வியூடாக நீங்கள் பெற்றுக்கொள்ளும் அறிவு மற்றும் திறன்கள் போன்றவையே உங்கள் எதிர்காலத்தைத் தீர்மானிக்கின்றன என்பதையும் நீங்கள் நன்கு கவனத்திற்கொள்ள வேண்டும். நீங்கள் சமூகத்தில் எந்த நிலையிலிருந்தபோதும் சகல தடைகளையும் தாண்டி சமூகத்தில் மிக உயர்ந்ததொரு இடத்திற்குப் பயணிக்கும் ஆற்றல் கல்வி மூலமாகவே உங்களுக்குக் கிடைக்கின்றது என்பதை நீங்கள் நன்கு விளங்கிக்கொள்ள வேண்டும்.

எனவே இலவசக் கல்வியின் சிறந்த பிரதிபலனைப் பெற்று, மதிப்பு மிக்கதொரு பிரசையாக நாளைய உலகை நீங்கள் வெற்றி கொள்வதற்கும் இந்நாட்டில் மட்டுமன்றி வெளிநாடுகளிலும் இலங்கையின் நாமத்தை இலங்கச் செய்வதற்கும் உங்களால் இயலுமாகட்டும் என கல்வி அமைச்சர் என்ற வகையில் நான் பிரார்த்திக்கின்றேன்.

**அகில விராஜ் காரியவசம்**
**கல்வி அமைச்சர்**

# முன்னுரை

உலகின் சமூக, பொருளாதார, தொழினுட்ப, கலாசார விருத்தியுடன் சேர்ந்து கல்வியின் நோக்கங்கள் மிக விரிந்த தோற்றமொன்றைப் பெற்றுள்ளன. மானிட அனுபவங்கள், தொழினுட்ப மாற்றங்கள் ஆராய்ச்சி மற்றும் புதிய குறிகாட்டிகளின்படி கற்றல் கற்பித்தல் செயற்பாடும் நவீனமயமாக்கப்பட்டுள்ளது. அதன்போது மாணவர் தேவைக்குப் பொருந்தும் விதமான கற்றல் அனுபவத்தை ஒழுங்கமைத்து கற்பித்தல் செயற்பாட்டை நடைமுறைப்படுத்திச் செல்வதற்கு பாடத்திட்டத்தில் காணப்படுகின்ற நோக்கங்களிற்கிணங்க பாடம் தொடர்பான விடயங்களை உள்ளடக்கிப் பாடநூல்களை ஆக்குவது அவசியமாகும். பாடநூல் என்பது மாணவரின் கற்றல் சாதனம் மாத்திரமல்ல. அது கற்றல் அனுபவங்களைப் பெறுவதற்கும் அறிவு, பண்பு விருத்திக்கும் நடத்தை மற்றும் மனப்பாங்கு வளர்ச்சியுடன் உயர்ந்த கல்வியொன்றை பெற்றுக் கொள்வதற்கும் மிகவும் உதவக்கூடியதுமாகும்.

இலவசக் கல்விக் கருத்திட்டத்தை நடைமுறைப்படுத்தும் நோக்கிலேயே தரம் 1 முதல் தரம் 11 வரையிலான சகல பாடநூல்களும் அரசினால் உங்களுக்கு வழங்கப்படுகின்றன. அந்நூல்களிலிருந்து உயர்ந்தபட்சப் பயன்களைப் பெற்றுக்கொள்வதுடன், அவற்றைப் பாதுகாப்பதும் உங்களது கடமையாகும் என்பதையும் நினைவூட்டுகின்றேன். பூரண ஆளுமைகொண்ட நாட்டிற்குப் பயனுள்ள சிறந்தொரு பிரசையாகுவதற்கான பயிற்சியைப் பெற்றுக்கொள்வதற்கு இப்பாடநூல் உங்களுக்குக் கைகொடுக்கும் என நான் எண்ணுகிறேன்.

இப்பாடநூலாக்கத்தில் பங்களிப்புச் செய்த எழுத்தாளர், பதிப்பாசிரியர் குழு உறுப்பினர்களுக்கும் கல்வி வெளியீட்டுத் திணைக்கள உத்தியோகத்தர்களுக்கும் எனது நன்றிகள் உரித்தாகட்டும்.

**டபிள்யூ. எம். ஜயந்த விக்கிரமநாயக்க**
கல்வி வெளியீட்டு ஆணையாளர் நாயகம்
கல்வி வெளியீட்டுத் திணைக்களம்
இசுருபாய
பத்தரமுல்ல.
*2019.04.10*

| | |
|---|---|
| **கண்காணிப்பும் மேற்பார்வையும்** | **டபிள்யூ. எம். ஜயந்த விக்கிரமநாயக்க**<br>கல்வி வெளியீட்டு ஆணையாளர் நாயகம்<br>கல்வி வெளியீட்டுத் திணைக்களம் |
| **வழிகாட்டல்** | **டபிள்யூ. ஏ. நிர்மலா பியசீலி**<br>கல்வி வெளியீட்டு ஆணையாளர் (அபிவிருத்தி)<br>கல்வி வெளியீட்டுத் திணைக்களம். |
| **இணைப்பாக்கம்** | **லெனின் மதிவானம்**<br>பிரதிக் கல்வி வெளியீட்டு ஆணையாளர்,<br>கல்வி வெளியீட்டுத் திணைக்களம்.<br><br>**யூ. எல். உவைஸ்**<br>கல்வி வெளியீட்டு உதவி ஆணையாளர்<br>கல்வி வெளியீட்டுத் திணைக்களம். |
| **பதிப்பாசிரியர் குழு** | **பேராசிரியர் ரோஹன லக்ஷ்மன் பியதாஸ**<br>பீடாதிபதி,<br>ஊடகவியற்கற்கைப் பிரிவு,<br>களனிப் பல்கலைக்கழகம்.<br><br>**கலாநிதி எஸ். ரகுராம்**<br>சிரேஸ்ட விரிவுரையாளர்,<br>தொடர்பாடல் கற்கைப் பிரிவு<br>திருகோணமலை பல்கலைக்கழகம்<br>நிலாவெளி, திருகோணமலை.<br><br>**தியூடர் வீரசிங்க**<br>மண்டபாதிபதி - ஶ்ரீபாளி மண்டபம்,<br>கொழும்புப் பல்கலைக்கழகம்.<br><br>**செனானி ஹரிச்சந்திர**<br>சிரேஸ்ட விரிவுரையாளர்,<br>சிங்களம் மற்றும் ஊடகவியற்கற்கைப் பிரிவு,<br>ஸ்ரீ ஜயவர்தன பல்கலைக்கழகம்.<br><br>**ஏ. நீலமணி**<br>சிரேஸ்ட விரிவுரையாளர்,<br>தேசிய கல்வி நிறுவகம்,<br>மஹரகம. |

**எழுத்தாளர் குழு**

**ஜீ. போல் அன்ரனி**
பிரதி பரீட்சை ஆணையாளர் (ஓய்வு)
இலங்கை பரீட்சைகள் திணைக்களம்.

**எஸ். சேதுரட்ணம்**
ஆசிரியர், ப/ தமிழ் மத்திய மகா வித்தியாலயம்,
பண்டாரவளை.

**எஸ். குமார்**
ஆசிரியர்,
ஹைலன்ஸ் கல்லூரி,
ஹட்டன்.

**மனோஜ் ஹேவகே**
ஆசிரியர்,
ஒருபெந்திவெவ மத்திய மகா வித்தியாலயம்,
மகியங்கனை.

**கலனி இரோஜா தர்மசிரி**
ஆசிரியர்,
ரத்ன கனிஷ்ட வித்தியாலயம்,
ஹோகந்தர.

**கிருஷாந்த சம்பத் பண்டார**
ஆசிரியர்,
மகுளுகஸ் வெவ மகா வித்தியாலயம்,
தேவகுவ.

**வத்சலா கமகே**
ஆசிரியர்,
ஸ்ரீ ராகுல மகா வித்தியாலயம்,
முல்லேரியா, நவநகரய.

**குமதினி பிரேமரத்ன**
ஆசிரியர்,
புனித அக்னஸ் மகளிர் மகா வித்தியாலயம்,
பலாங்கொட.

**கங்கா ஹரோஷனி சமரசேகர**
ஆசிரியர்,
குமரவித்தியாலயம், இரத்தினபுரி.

| | |
|---|---|
| **பதிப்பாசிரியர் (மொழி)** | **பி. இராஜேஸ்வரன்**<br>விரிவுரையாளர்,<br>தேசிய கல்வியியற் கல்லூரி,<br>யாழ்ப்பாணம். |
| **சரவை பார்ப்பு** | **வி. எஸ். இதயராஜா**<br>உதவிக் கல்விப் பணிப்பாளர்,<br>கல்வி அமைச்சு. |
| **சித்திரம்** | **எப். எம். எஸ். கே. கருணாரத்ன**<br>ஆசிரியர்,<br>டட்லி சேனாநாயக்க மத்திய மகா வித்தியாலயம்,<br>தொலங்கமுவ. |
| **கணினி வடிவமைப்பு** | **ஆர். கவியாழினி**<br>கணினி வடிவமைப்பாளர்,<br>கல்வி வெளியீட்டுத் திணைக்களம். |

# உள்ளடக்கம்

# 01 தகவல் அறிக்கையிடல்



## குறிக்கோள்

நாம் வாழ்கின்ற சமூகத்தில் ஒவ்வொரு கணத்திலும் பல்வேறு நிகழ்வுகள் நிகழ்கின்றன. சில நிகழ்வுகள் முறைசார்ந்து அறிக்கையிடப்படுவதோடு பெரும்பாலானவை முறைசாரா விதத்தில் தொடர்பாடப்படுகின்றன. சமூகம் நிகழ்வுகள், தகவல்கள் மற்றும் செய்திகளினால் நிரம்பியுள்ளபோதிலும் அவற்றை அறிக்கையிடுவதற்காகப் பல்விதமான நுட்பமுறைகள் பயன்படுத்தப்படுகின்றன.

இந்த அத்தியாயத்தில் உங்களுக்கு தகவல்கள் என்றால் என்னவென்பதை இனங்கண்டுகொள்ள முடிவதோடு, நிகழ்வுகள், தகவல்கள் மற்றும் செய்திகளுக் கிடையேயுள்ள தொடர்பினைப் பற்றியும் கற்றுக்கொள்ளமுடியும். அவ்வாறே இதனூடாக தகவல்களைச் சேகரித்தல் மற்றும் தகவல்களை அறிக்கையிடல் சம்பந்தமான விளக்கத்தையும் பெற்றுக்கொள்ள முடியும்.

## 1.1 தகவல்கள் அறிமுகம்

தகவல் என்பது என்ன? இக்கேள்விக்கான விடையைக் குறிப்பிடுவது சற்றுக் கடினமான செயலாகும். ஏனென்றால் தகவல்களுக்கு இருக்கும் பெறுமதியானது ஒப்பீட்டளவிலேயே மதிப்பிடப்படுகிறது. ஒருவருக்கு அதிகம் அவசியப்படும் ஓர் தகவல், மற்றையவருக்கு தேவையற்றதாகவுள்ளது.

எளிமையாகக் கூறுவதாயின், தகவல் என்பது, தயாரிக்கப்பட்ட தரவுகளின் ஓர் தொகுப்பாகும். இங்கு தகவலின் பண்புத்தரத்தை நிலைத்துநிற்கச் செய்யும் காரணிகளை கண்டறிதல் அவசியமாகும். அவற்றின் உண்மைத் தன்மையும் உறுதித் தன்மையும் முக்கிய அம்சங்களாகும். இவ்வாறாக ஒழுங்கமைக்கப்பட்ட தக வல்களின் பெறுமானம் அதிகமாகும். மேலும் ஏதேனுமொரு சந்தர்ப்பத்தில் மிகவும் அவசியப்படும் தகவலுக்குரிய பெறுமதி அதிகமாகும். அதேபோல் அதிக பண்புத்தரம் வாய்ந்த தகவல்கள் எமது அறிவை விருத்தி செய்கிறது.

எல்லா தொடர்பாடல் சந்தர்ப்பங்களிலும் நாம் பரிமாற்றிக்கொள்ளும் விடயங்கள் ஏதேனுமொரு தகவலாகவே இருக்கும். நாம், ஒருவருடையபெயரை, அல்லது விலாசத்தைக் கேட்டறிந்து கொண்டால், எமது தொலைபேசி இலக்கத்தை யாருக்கேனும் வழங்கினால், கடிதம் எழுதினாலும் இவ்வெல்லா சந்தர்ப்பங்களிலும் தகவலே பரிமாற்றப்படுகிறது. இதன்காரணமாகவே தொடர்பாடல் என்பது 'தகவல் பரிமாற்றம்' என்றும் இனங்காணப்படுகிறது.

### 1.1.1 மனிதனுக்கும் தகவல்களுக்குமிடையேயுள்ள உறவு

தகவல்கள் மற்றும் மனிதனுக்கிடையே பிரிக்கமுடியாததொரு உறவு காணப்படு கின்றது. மனிதன் பிறப்பு முதல்கொண்டே உரிமையாக்கிக்கொண்ட அறியும் அவா காரணமாக, தன்னைச்சுற்றியுள்ள உலகில் காணப்படும் தகவல்கள் பற்றிய அக்கறை யுடையவனாக உள்ளான். இந்த அக்கறை காரணமாகவே மனித உறவுகளைப் பேணுகின்றமையில் தகவல்கள் முக்கிய பணியை ஆற்றுகின்றன.

தகவல்களைப் பெறுவதற்காக பல்வித நுட்பமுறைகள் பயன்படுத்தப்படுகின்றன. அவதானிப்பதால், வாசிப்பதனால்; ஆட்களுக்கிடையே நிகழ்கின்ற தொடர்பாடல் வழியாக மற்றும் நவீன தொழில்நுட்பமுறைகளைப் பயன்படுத்துவதன் மூலமாக தகவல்களைப் பெற்றுக்கொள்ள முடிகின்றன.

மனிதனுக்கும் தகவலுக்கும் இடையே நிலவும் தொடர்பானது முக்கியம் பெறுகின்ற விதங்கள் பலவற்றை இனங்காணமுடியும். அவற்றுள் சில கீழே தரப்பட்டுள்ளன.

1. தனிநபர் தேவைகளை நிறைவேற்றுவதற்கு
2. தீர்மானமெடுத்தலுக்கு
3. தனிநபர் தொடர்பினைக் கட்டியெழுப்புவதற்கு
4. கல்வி நடவடிக்கைகளுக்கு
5. பிரச்சினை தீர்த்தலுக்கு
6. ஆக்கபூர்வ சிந்தனைக்கு

## 1.1.2 தகவல் பணிகள்

கடந்தகாலம் முதல் தற்காலம் வரை சமூக மாற்றங்களின்போது மனிதன் தகவல்களை அறிந்துகொண்ட விதத்தைப்போலவே தகவல்களூடாக நிறைவேற்றிய சமூகக்கடமைகளும் படிமுறையொழுங்கில் வளர்ந்து வந்துள்ளன. இப்பகுதியின் விபரங்கள் விளக்கமாக உங்களது 10 ஆம் தரப் பாடப்புத்தகத்தில் ''மனிதத் தொடர்பாடலின் வெளிப்பாடு'' என்னும் பகுதியில் உள்ளடக்கப்பட்டுள்ளது.


உரு 1.1


உரு 1.2


உரு 1.3


உரு 1.4

அங்க அசைவு, முகபாவம் மற்றும் முகத்திலிருந்து வெளிப்படும் ஒலி

↓

நெருப்பு, புகை, பறையொலி, இலை கிளை பயன்பாடு

↓

குகைச்சித்திரங்கள் மற்றும் குறிப்புகள்

↓

பேச்சு மொழி

↓

படவுரு எழுத்து மற்றும் குறியீட்டெழுத்து

↓

அரிச்சுவடி ஆரம்பம்

↓

பல்விதமானவற்றை பயன்படுத்தி எழுதுதல் (மரப்பலகை பத்திரம், கல், பாய்கள் போன்றவை)

↓

கடதாசி ஆக்குதல்

↓

கையால் பிரதிசெய்யப்பட்ட புத்தகம் தயாரித்தல்

↓

அச்சடிப்பதற்கான பலகை அச்சு/ களிமண் அச்சு பயன்பாடு

↓

மனிதர் அல்லது பிராணிகளூடாக தகவல் பரிமாற்றம்

↓

அச்சு இயந்திரம் கண்டுபிடித்தல்

↓

மின்சார மற்றும் இலத்திரனியல் சமிக்ஞைத் தொழில்நுட்பங்கள் உருவாகுதல்

↓

தொலைபேசி, வானொலி, தொலைக்காட்சிகளின் ஆரம்பம்

↓

கணினி வலைப்பின்னல் மற்றும் அதனோடிணைந்த புதிய ஊடகங்கள் தோன்றுதல்

### 1.1.3 தகவல்களை அறிந்துகொள்ள வேண்டியதன் அவசியம்

மனித சமூகத்திற்கு தகவல்கள் எத்துணை முக்கியத்துவம் வாய்ந்தவை என்பதை இப்போது நீங்கள் நன்கு விளங்கிக் கொண்டிருப்பீர்கள். ஒவ்வொரு தனியாளுக்கும் தனித்தனியாகத் தமது வாழ்க்கையை நடத்திச் செல்வதற்கும், ஒரு சமூகமாக, பொதுவான சமூக செயற்பாடுகளில் ஈடுபடவும் தகவல்கள் பாரியளவில் தேவைப்படுகின்றன. தனிநபர் என்பவன் சமூகத்தின் ஒரு பங்காளியாதலால் தனியாளையும் சமூகத்தையும் இரண்டு பிரிவுகளாகப் பிரித்துப்பார்ப்பது இலகுவான விடயமல்ல. இருப்பினும் கற்றலின் வசதிக்காக தகவல்களை அறிந்து கொள்ள வேண்டியதன் அவசியத்தைக் கீழ்வருமாறு முக்கிய இரண்டு பிரிவுகளில் முன் வைக்க முடியும்.

1. தகவல்களை அறிந்துகொள்வதன் தனியாள் தேவைப்பாடு அல்லது அவசியம்
2. தகவல்களை அறிந்துகொள்வதன் சமூகத்தேவைப்பாடு அல்லது அவசியம்

### தகவல்களை அறிந்துகொள்வதன் தனியாள் தேவைப்பாடு

தனியாளைப் பொறுத்தமட்டில் அவருக்குத் தனது அடிப்படைத்தேவைகளை நிறைவேற்றிக்கொள்வதற்காக தனிப்பட்ட விதத்தில் தகவல்களை சேகரித்துக் கொள்ளவேண்டிய தேவைப்பாடு உள்ளது. அதற்காக அவர் பல்வேறு முறைகளி னூடாகவும், பல்வித மூலாதாரங்களின் வழியாகவும் தகவல்களை சேகரித்துக் கொள்கின்றார். தனிநபர் சேகரித்துக் கொள்கின்ற தகவல்களை, அவர் அவற்றின் வழியாக நிறைவேற்றிக் கொள்கின்ற தேவைகளை அடிப்படையாகக்கொண்டு இனங்காண்பது இலகுவானதாயிருக்கும். அதன்படி பின்வரும் தேவைப்பாடுகளை தனியாள் கொண்டுள்ளார்.

1. உணவு, உடை, உறையுள் ஆகிய அடிப்படைத் தேவைப்பாடுகளைப் பூர்த்தி செய்வதற்கு
2. அன்றாட வாழ்க்கைச் செயற்பாடுகள் தொடர்பான தீர்மானங்களை மேற்கொள்வதற்கு
3. சமூகத்தோடு இடைத்தொடர்புகளைப் பேணுவதற்கு
4. நாளாந்தம் எழுகின்ற பிரச்சினைகளைத் தீர்ப்பதற்கு
5. கல்வி, மற்றும் தொழில் நடவடிக்கைகளுக்கு

தனியாளுக்குத் தகவல்கள் தேவைப்படுகின்ற மேற்கூறப்பட்டவை போன்ற பல்வேறு சந்தர்ப்பங்களை சூழவுள்ள சமூகத்தை அவதானித்துப்பார்த்தால் உங்களால் இனங் கண்டுகொள்ளமுடியும். அவ்வாறு இனங்காணப்பட்ட ஒரு சந்தர்ப்பத்தை மேலும் பல உபபிரிவுகளாக வகுத்துக்கொள்ள முடியுமென்பதையும் விளங்கிக்கொள்ள இயலும்.

**உதாரணம் –** 1. கல்வித்துறை தொடர்பான தகவல்கள்
1.1. எங்கு கல்வி கற்பது ?
1.2. எந்தப் பாடநெறியை பின்பற்றுவது ?

தனிநபர் ஒருவர் நேர்முகத் தேர்வொன்றுக்குச் செல்வதற்கு ஆயத்தமாகும் சந்தர்ப்பமொன்றை எடுத்துக்கொள்வோம். இதன்போது உரியதினத்தன்று அவர் அணியப் பொருத்தமான ஆடை, எடுத்துச் செல்லவேண்டிய ஆவணங்கள், அத்தினம் தேர்வு நடைபெறும் இடத்திற்குப் போய்ச்சேர வேண்டிய பொருத்தமான நேரம், போக்குவரத்து முறை, பயணவழி, சுவாத்திய நிலைமை, மற்றும் பல விடயங்கள் தொடர்பான தகவல்கள் தேவைப்படும். பயணவழியைத் தீர்மானிக்கின்ற போது, பயணவழியின் நிலைமை, தெரிவுசெய்த வழியில் பயணிக்கும்போது போகவேண்டிய தூரம், பயணவழி நெரிசல்கள் போன்ற உபவிடயங்கள் பலவற்றைப் பற்றியும் கவனம் செலுத்தவேண்டியேற்படும்.

## தகவல்களை அறிந்துகொள்வதன் சமூகத்தேவைப்பாடு

ஒவ்வொரு தனிநபருக்கும் தனித்தனியாக தேவைப்படாத, ஆனால் அவர் அங்கத்தவராக உள்ள குறிப்பிட்ட சமூகத்துக்கு, நிறுவனத்துக்கு, குழுவுக்குப் பொதுவாக தேவைப்படுகின்ற தகவல்கள் உள்ளன. இத்தகவல்களை சமூகத்தேவைகளை அடிப்படையாகக்கொண்டு வேறுபடுத்தி இனங்காணமுடியும்.

அவற்றுள் சில கீழே காட்டப்பட்டுள்ளன.

- ★ அரச நிறுவனங்களில் நடவடிக்கைகளை மேற்கொள்வதற்கு.
- ★ தனியார் வியாபார முயற்சிகள் மற்றும் வேறு நிறுவன நடவடிக்கைகளை மேற்கொள்வதற்கு.
- ★ சமூக நலன்புரி அமைப்புகளின் நடவடிக்கைகளுக்கு.
- ★ பலவித அரசியல் நிறுவனங்களின் செயற்பாடுகளுக்கு.
- ★ பல்வேறு இனக்குழுமங்களின் பண்பாட்டுப் பெறுமானங்களைப் பேணிநடத்து வதற்காக
- ★ பல்வேறு சமயக் குழுக்களின் நடவடிக்கைகளைத் தொடர்வதற்கு
- ★ எல்லா நிறுவனங்கள், ஒழுங்கமைப்புகள், சமூகக்குழுக்கள் மற்றும் அரசாங்கத்துக்குமிடையில் அந்நியோன்னிய உறவினைப்பேணி நடத்திச் செல்வதற்கு.

பாடசாலையில் நிகழும் பல்வேறு செயற்பாடுகள் மத்தியில், காலை ஒன்றுகூடலை ஏற்பாடு செய்யும் சந்தர்ப்பத்தை கருத்திற் கொள்வோம். அதை ஒருங்கிணைக்கும் குழுவுக்கும் பல்வேறு தகவல்கள் தேவைப்படும். ஒன்றுகூடல் இடம்பெறும் காலவரையறை, பங்குபற்றவேண்டியவர்களது எண்ணிக்கை, ஒன்றுகூடலின்போது உரையாற்றுபவர்கள் யாவர், ஒன்றுகூடல் இடம்பெறும் இடம், அவ்விடத்தை ஒழுங்கமைக்கவேண்டிய விதம், பயன்படுத்தவேண்டிய வளங்கள், அவற்றைப் பெற்றுக்கொள்ள வேண்டிய வளங்கள், அவற்றைப் பெற்றுக்கொள்ள வேண்டிய முறைகள் முதலான பாரியளவு தகவல்கள் அவசியப்படும்.

தகவல்கள், தனிப்பட்ட ரீதியாக ஒரு தனிநபருக்கும் பொதுவாக சமூகத்துக்கும் மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தவை என்பது இப்போது உங்களுக்கு மேலும் நன்றாக விளங்கிக்கொண்டிருக்கும். இத்தேவைகளை முழுமையாக்கிக் கொள்ளும்போது அவற்றை வெற்றிகரமாக நிறைவேற்றிக்கொள்வதற்கு பெறப்படும் தகவல்களில் நம்பகத்தன்மை, தகுதி, பண்புத்தரம், பொருத்தப்பாடு, மற்றும் பிழையின்மை ஆகியன இருத்தல் வேண்டும்.

நீங்கள் ஒரு பாடசாலை மாணவர் என்ற அடிப்படையில் ஏதேனும் தேவைக்காக தகவல்களை சேகரிக்கும் போது, அத்தகவல்களில் மேலேயுள்ள குணாம்சங்கள் உள்ளனவா என்பதைக் கவனத்தில் கொள்ளும்போது, அதிக வெற்றியினை உங்களால் பெற்றுக் கொள்ளமுடியும்.

## 1.2 நிகழ்வுகள், தகவல்கள் மற்றும் செய்திகள்

**உலகக் கிண்ண வலைப்பந்தாட்டப் போட்டியில் பங்குபற்றுவதற்காக இலங்கை அணி இன்று புறப்பட்டது.**

| | |
|---|---|
| இம்மாதம் 7ம் திகதி நடைபெறவுள்ள உலகக் கிண்ண வலைப்பந்தாட்டப் போட்டியில் பங்குபற்றுவதற்காக 12 வீராங்கனைகள் மற்றும் 7 அதிகாரிகள் உள்ளடங்கிய குழு இன்று (3ம் திகதி) காலை நாட்டிலிருந்து புறப்படத் தயாராகியுள்ளது. | மு.ப 7.25 இற்கு 'ஸ்ரீ லங்கன்' விமானம் மூலம் சிங்கப்பூர் செல்லும் இலங்கை அணி சிட்னி நோக்கிச் செல்வதற்கு முன்பதாக சிங்கப்பூர் விமான நிலையத்தில் 9 மணித்தியாலங்கள் தங்கிச் செல்ல வேண்டும். இதன்படி அவர்கள் மறுநாள் 4ம் திகதி காலை வேளை சிட்னி நகரை அடைவர். |

**தகவல் மூலாதாரம்** - திவயின பத்திரிகை
2015 ஆகஸ்ட் 3
(பெயர், இடம் மாற்றப்பட்டுள்ளது.)
செய்தி தமிழுக்கு மாற்றப்பட்டுள்ளது.

அக்கா: தங்கச்சி, இதோ, இவர்கள் வெளிநாடு சென்றுவிட்டதாக செய்தித்தாள் கூறுகிறது.

தங்கை: யார் அக்கா சென்றுள்ளார்கள்? ஏன், எங்களோட பெரிய மாமியும் வெளிநாடு போனார் தானே? அதை பத்திரிகையில் போடவில்லையா?

அக்கா: அது ஒரு செய்தி அல்லவே தங்கச்சி! இங்கே, தேசிய வலைப்பந்தாட்ட அணியினர் அல்லவா போயிருக்கிறார்கள்!

தங்கை: ஏன் அது மட்டும் எப்படி ஒரு செய்தியாகும்?

அக்கா : தங்கச்சி, ஒரு கணப்பொழுதில் நாட்டிலும் உலகத்திலும் பல இடங்களில் எத்தனை விடயங்கள் நிகழ்கின்றன தெரியுமா? அவற்றை நாங்கள் 'நிகழ்வுகள்' என்று சொல்கிறோம். அவை ஒவ்வொன்றுமே தகவல் ஆவதில்லை. செய்தி ஆவதும் இல்லை.

தங்கை: சரி, அக்கா அப்படியென்றால் நிகழ்வுகள் தகவல்களாக ஆவது எப்படி, அவை செய்திகளாக ஆவது எப்படியென்பதை எனக்கு சொல்லித்தாருங்களேன். அப்போ நான் அது பற்றி சிறுகட்டுரை யொன்றை 'சுவர் செய்தி மடலுக்கு' எழுதலாம்.

அக்கா: அது நல்லது. **ஏதேனும் ஒரு இடத்தில் நடந்த நிகழ்வொன்றை யாராவது அவதானித்து அதை இன்னொருவருக்கு தொடர்பாடல் செய்வாராயின் அதனை நாங்கள் தகவல் என்று சொல்வோம்.**

தங்கை: அப்போ செய்தி என்றால்?....

அக்கா: 'செய்தி' என்பது பற்றி பல்விதமான கருத்துக்கள் கூறப்பட்டுள்ளன. எளிமையாகச் சொல்வதாக இருந்தால், **அறிக்கையிடுமளவிற்கு முக்கியத்துவமுடைய, சமூகத்தின் கவனத்தை ஈர்க்கக்கூடியதான, சமூகத்தில் ஒரு அக்கறையை ஏற்படுத்தக்கூடிய தகவல் ஒன்றையே 'செய்தி' என்று கூறமுடியும்.**

தங்கை: நல்லது இப்போது நன்றாக விளங்கிவிட்டது அக்கா!

அக்கா: செய்தியைப் பற்றி பல்வேறு புலமைசார்ந்தவர்கள் வெளியிட்ட கருத்துக்கள் பலவற்றை நான் சேர்த்து வைத்துள்ளேன். உங்களுக்கு இதுபற்றி மேலும் விடயங்கள் அறிந்துகொள்ள வேண்டுமாயின் அவற்றுள் சிலவற்றை வாசிக்க தருகின்றேன்.

தங்கை: ஆகா! அது நல்ல விடயம் அப்படியென்றால் இப்போதே தாருங்கள் அக்கா நான் உடனடியாக கட்டுரையை எழுதி உங்களுக்கு காட்டு கின்றேன்.

**செயற்பாடு 1**

நிகழ்வுகள், தகவல்கள் மற்றும் செய்திகளுக்கிடையே உள்ள வேறுபாட்டை விளக்கி, ''சுவர்ப் பத்திரிகைக்கு'' கட்டுரையொன்றைத் தயாரிக்குக.

### 1.2.1 செய்திகளை இனங்காணல்

***''செய்தி என்பது, மக்களுக்கு பாதிப்பையேற்படுத்துவதும் அவர்களிடம் ஆர்வத்தை ஏற்படுத்துகின்றதுமான கடந்தகால முக்கிய சம்பவமொன்றுடன் தொடர்புடைய ஒரு புதிய தகவலாகும்''***

- போல் டி மெசுனியர் -

***" நாயொன்று ஒரு மனிதனைக் கடிக்கும்போது அது ஒரு செய்தியாகாவிடினும் மனிதன் ஒரு நாயைக் கடிக்கும் போது அது ஒரு செய்தியாகின்றது"***

*- சார்ள்ஸ் அண்டர்ஸன் டானா -*

***"எல்லா உத்வேகமான புதினங்களும் செய்திகளே"***

*- மில்ரன் பிரஷ் -*

செய்தியொன்றின் உள்ளடக்கம் மற்றும் இயல்பு பற்றி கவனத்தில் கொள்ளும்போது, பிரதானமாக செய்தி வகைகள் இரண்டினை இனங்காணமுடியும்.

### 1. வன்செய்திகள்

பாரிய அளவினருக்குத் தாக்கத்தையேற்படுத்தக்கூடிய, தேசிய அல்லது சர்வதேச மட்டத்தில் முக்கியத்துவம் கொண்ட, நடப்புப்பெறுமதியுடைய செய்திகள் 'வன் செய்திகள்' என அழைக்கப்படும். பெரும்பாலும் நாளாந்தச் செய்தித் தாள்களில் முன்பக்கத்தில் இடம்பெறுபவை இத்தகைய வன்செய்திகளாகும். அரசாங்கத்தால் மேற்கொள்ளப்படும் தீர்மானங்கள், பிரபல்யமான குற்றங்கள் பற்றிய தகவல்கள், திடீர் விபத்துகள், திடீர் அனர்த்த நிலைமைகள், அரசியல், பொருளாதார மற்றும் பண்பாடு பற்றிய முக்கியத்துவம் பெற்றவை, ஆகியனவற்றை இதற்கு உதாரணங்களாகக் காட்டலாம்.

### 2. மென்செய்திகள்

சமூகத்துக்கு அதிக பாதிப்பை ஏற்படுத்தாத ஆனால் பலரது கவனத்தையும் விருப்பத்தையும் பெற்ற, மானுட உணர்வுகளைத் தூண்டுகின்ற செய்திகளை 'மென்செய்திகள்' என அழைப்பர். அன்பு, கருணை, துக்கம், வைராக்கியம், குரோதம், போன்ற உணர்வுகளை அடிப்படையாகக் கொண்ட செய்திகளை வெளியிடுதல் இப்பிரிவில் அடங்கும். இங்கு மொழியானது படைப்பாற்றல் மிக்கதாயிருக்கும். பெரும்பாலும் இத்தகைய செய்திகளை வாசிப்பதை வாசகர்கள் மிகவும் இரசிப்பர்.

### 1.2.2 செய்தியொன்றின் பெறுமதியைப் பாதிக்கும் காரணிகள்

ஊடகங்கள் வழியாக எத்துணை செய்திகள் வெளியிடப்பட்டபோதிலும் எல்லா செய்திகளுக்கும் சமமான பெறுமதி உரித்தாவதில்லை. செய்தியொன்றின் பெறுமதியைத் தீர்மானிப்பதில் தாக்கம் செலுத்தும் காரணிகள் பலவற்றை இனங்காண முடியும் அவற்றுள் சில கீழே தரப்பட்டுள்ளன.

1. காலத்தோடு இயைந்திருத்தல் (Timeliness)
2. அண்மித்த தன்மை (Proximity)
3. தொடர்புபடுதல் (Relevance)
4. வெளிப்படையாகத் தெரிதல் (Prominence)
5. முரண்பாடுகள் (Conflicts)
6. மானுட விருப்புகள் (Human Interest)
7. தாக்கமும் முக்கியத்துவமும் (Impact and Importance)
8. அசாதாரணமான தன்மை (Unusualness)

செய்தி ஒன்றினுள் இக்காரணிகளுள் ஒன்று அல்லது பல உள்ளடங்க முடியும்.

1. **காலத்தோடு இயைந்திருத்தல்** (Timeliness)

செய்தியொன்றிற்கு உயர்பெறுமதி உரித்தாகிட வேண்டுமாயின் அது புதியதாக இருத்தல் வேண்டும். அவ்வாறே அதுமுன்வைக்கப்படுகிற காலத்துக்குப் பொருத்தமான நிகழ்வாக அமைதல் வேண்டும். பெரும்பாலும் காலஞ் செல்லச் செல்ல குறிப்பிட்ட நிகழ்வொன்றின் செய்திசார் பெறுமதி குறைந்துபோதல் நிகழக்கூடும்.

2. **அண்மித்த தன்மை** (Proximity)

மனிதன் தான் வாழும் பிரதேசத்தில், பண்பாட்டில், தனது நாட்டில் நன்கு அறியப்படும் அல்லது மதிக்கப்படுகின்ற நபர்களுடன் சம்பந்தப்பட்ட தகவல்களை அறிந்துகொள்ள விருப்பமுடையவனாக இருக்கிறான். வாசகனுக்கு குறிப்பிட்டதொரு செய்தியில் உள்ள இந்த அண்மித்ததன்மை அதிகரிக்கின்ற அளவுக்கு அதன் செய்தி சார் பெறுமதி அதிகரிக்கின்றது. உதாரணமாக, வேறொரு நாட்டில் பாடசாலை மாணவனொருவன் உலகப் போட்டியொன்றில் பங்குபற்றிப் பெற்றவெற்றி பற்றி நம் நாட்டு மாணவன் ஒருவன் காட்டுகின்ற அக்கறை குறைவானதாகவே இருக்கும். ஆனால் அதே மாணவன் தனது பாடசாலை சகபாடி மாணவன் ஒருவன் பெற்றுக்கொண்ட அகில இலங்கை ரீதியான வெற்றியில் அதிக கவனத்தைச் செலுத்துவான்.

3. **தொடர்புபடுதல்** (Relevance)

மனிதர்களது வாழ்க்கையில் தாக்கமேற்படுத்தும் செய்தி பற்றி மக்கள் அதிக அக்கறை காட்டுவார்கள். குறிப்பிட்ட தகவல் ஒன்று செய்தியாக மாற்றமடைய

வேண்டுமாயின், பெறுநருக்கு அது தொடர்புபட்டதாகக் காணப்பட வேண்டும். செய்திகளின் பெறுமதி உயர்வடைவதில் இந்தத் தொடர்புபடுதல் நேரடியான தாக்கத்தையேற்படுத்துகிறது. உதாரணமாக சாதாரணதரப்பரீட்சையின் பெறுபேறுகள் வெளியாதல் பரீட்சைக்கு தோற்றிய மாணவர்களுக்கும், அவர்களது உறவினர்களுக்கும், பாடசாலைகளக்கும் அயலவர்களுக்கும், தொடர்புபட்டதாகும். ஆனால் அச்செய்தி பொதுவாக சகலருக்கும் தொடர்புபட்டதாகமாட்டாது.

4. **வெளிப்படையாகத் தெரிதல்** (Prominence)

சமூகத்தின் பிரசித்தமான நபர் மற்றும் இடம் பற்றியதாக ஆக்கப்படுகின்ற தகவல்கள் உயர் பெறுமதியுடையனவாகும். ஜனரஞ்சக நடிகர் நடிகைகள், விளையாட்டு வீரர்கள், அரசியல் தலைவர்கள் ஆகிய சமூகத்தின் பிரசித்திபெற்ற நபர்களைப் பற்றிய தகவல்களின் துணையோடு செய்திகள் உருவாகின்றன. அவ்விதமே சர்வதேச மற்றும் உள்ளூர் சார்ந்ததான சமூகத்துக்கு பாதிப்பை ஏற்படுத்தக்கூடிய மற்றும் பிரசித்திபெற்ற நிறுவனங்கள், ஒழுங்கமைப்புகள் பற்றிய தகவல்களும் செய்திகளாக முன்வைக்கப்படுகின்றன. இச்செய்திகளை அறிந்துகொள்ள தனிநபர்கள் விருப்பத் தோடு முனைகின்றனர். இதற்குக் காரணம், ''வெளிப்படையாகத் தெரிதல்'' எனும் பெயருடைய காரணியூடாக செய்தியின் பெறுமதி அதிகரிக்கப்படுகின்றமையாகும்.

5. **முரண்பாடுகள்** (Conflicts)

முரண்பாடுகள் எப்போதுமே செய்திக்கான பெறுமதியைக் கொண்டுள்ளன. செய்திக்காக முரண்பாடுகள் முக்கிய மூலாதாரமாக செயற்படுகின்றன. அதற்கான காரணம், முரண்பாடுகள், தனிநபருக்கு, நாட்டுக்கு, சமூகத்துக்கு தாக்கத்தை ஏற்படுத்து கின்றமை ஆகும். சில வேளைகளில் அவை சமூக, பண்பாடு, அரசியல், பொரளாதார கருத்துக்கள் காரணமாக எழுகின்ற கொள்கை முரண்பாடாகவும் இருக்க முடியும், அல்லது வன்முறை, யுத்தம் தொடர்பான முரண்பாடாகவும் இருக்கமுடியும்.

6.**மானுட விருப்பங்கள்** ( Human Interest )

மானுட விருப்பங்களைப் பெறும் சம்பவங்கள் செய்திகளாக முன்வைக்கப் படும். பெரும்பாலானோர் மனதை உலுக்குகின்ற செய்திகளுக்கு அதிக விருப்பத்தைக் காட்டுகின்றனர். இங்கு அன்பு, கருணை, துக்கம் போன்ற மெய்ப்பாடுகளை முன்னிலைப்படுத்திக்கொள்வர். ஏதேனும் செய்தியொன்றில் இக்காரணி மிகவும் அதிகமாக முன்வைக்கப்பட்டிருந்தால், அதனூடாக சமூகத்துக்கு பெரும் பாதிப்பு ஏற்படாதபோதும் செய்திகளின் பெறுமதியைக் கூட்டுவதற்கு அது காரணமாக அமையும்.

7. **தாக்கமும் முக்கியத்துவமும்** (Impact and Importance)

செய்தியொன்றின் பெறுமதி கூடிக் குறைதலுக்கு அச்செய்திவழியாக சமூகத்தில் ஏற்படுத்தப்படுகின்ற தாக்கங்களின் அளவு காரணமாகின்றது. அதிகமானோருக்கு அதிகளவில் தாக்கமேற்படுத்துகின்ற செய்தியொன்றின் செய்திசார் பெறுமதி அதிகமாகும். புதியதொரு அரசியல் மாற்றம், புத்தாக்க நடைமுறையாக்கப்பட்ட

சட்டம், பிறப்பிக்கப்பட்ட வரி நடைமுறை, சம்பள உயர்வு, எரிபொருள் விலையுயர்வு போன்ற நிகழ்வுகளைத் துணையாகக் கொண்டு எழுதப்படுகின்ற செய்திகளை இதற்கு உதாரணமாகக் காட்ட முடியும்.

8. ***அசாதாரண தன்மை*** ( Unusualness)

உலகில் நிகழுகின்ற விந்தையான, நம்பமுடியாத சம்பவங்கள் பற்றிய தகவல்கள் செய்திசார் பெறுமதிமிக்கவைகளாக உள்ளன. அதற்குக்காரணம் அவ்விதமான செய்தியில் காணப்படுகிற ‘அசாதாரண தன்மை’ எனப்படும் காரணியாகும். முதன்முறையாக நிகழ்ந்த சம்பவமொன்று, எந்தவகையிலுமே எதிர்பார்க்க முடியாத விதத்திலான சம்பவமொன்று, சாதாரணமாக நடந்ததென நம்பவே முடியாத நிகழ்வொன்று ஆகியவற்றில் இந்த குணவியல்பு உள்ளடங்குகின்றது.

## 1.3 தகவல்களைத் திரட்டுதல்

### 1.3.1 **தகவல் மூலாதாரங்கள்**

தகவல் பெற்றுக் கொள்வதற்காக அடிப்படையாகப் பயன்படுத்தப்படும் விடயங்களை தகவல் மூலாதாரங்களாக அறிமுகப்படுத்திடமுடியும். தகவல்கள் சேகரிக்கப்பட்டுள்ள எந்தவொரு பௌதீக முறையொன்றும் அல்லது எந்தவொரு தனிநபரும் இதற்கு உரியவர்கள் ஆவார்கள்.

தொடர்பாடல் பணிக்குத் தேவையான தகவல்களைப் பெற்றுக்கொள்வதற்காக பயன் படுத்தக்கூடிய தகவல் மூலாதாரங்கள் சில இங்கே காட்டப்பட்டுள்ளன.




**தனிநபர் மூலாதாரம்**

ஏதேனும் ஒரு தேவைக்குத் தகவலொன்றைச் சேகரிக்கும்போது, அத்தகவலை வழங்குபவர் தனிநபர் எனின், அதனை **தனிநபர் மூலாதாரமாக** அறிமுகம் செய்யமுடியும்.

**உதாரணம்** :- **ஆசிரியர்கள்** **கிராம அதிகாரி** **அரசியல்வாதிகள்** **பெற்றோர் மற்றும் பெரியோர்** **நிபுணர்கள்**

***நிறுவன மூலாதாரம்***

தகவல்களைப் பெற்றுக்கொள்ள நிறுவனங்கள் பயன்படுத்தப்படுதலை இது குறிக்கிறது. தகவல்களைப் பெற்றுக்கொள்வதில் பயன்படுத்தப்படும் நிறுவனம்சார் மூலாதாரங்கள் இதன்கீழ் அடங்கும். இந்த நிறுவனங்கள், அரசாங்க, தனியார் அல்லது வேறு சமூக அமைப்புக்களாக இருக்கமுடியும்.

**உதாரணம்** :- ***அரச அமைச்சுக்களும் திணைக்களங்களும்***
***தனியார் தொழிற்சாலைகள்***
***நலன்புரிச் சங்கங்கள்***
***அரசசார்பற்ற அமைப்புக்கள்***
***நிதி நிறுவனங்கள்***

***ஊடக மூலாதாரங்கள்***

தொலைக்காட்சி, வானொலி ஆகிய பொதுசன ஊடகங்கள் போலவே புதிய ஊடகங்களும் ஊடக மூலாதாரங்களின் கீழ் உள்ளடக்கப்படும். இவை தகவல்களைப் பெற்றுக்கொள்வதற்காகப் பயன்படுத்தப்படுகின்ற ஜனரஞ்சக மூலாதார வகையாகும்.

**உதாரணம்** :- ***தொலைக்காட்சி செய்திகள்***
***சமூகவலைத் தளங்கள், இணையத்தளங்கள்***
***வானொலி நிகழ்ச்சிகள்***
***செய்தித்தாள் விசேட அம்சங்கள்***

***எழுத்து மற்றும் இலக்கம்சார் மூலாதாரம்***

எழுத்து/ இலக்கம்சார் (Digital) முறைகளில் தகவல்களாகக் களஞ்சியப்படுத்தப் பட்டுள்ளவை. இவ்வெழுத்து/ இலக்கம்சார் பிரிவில் உள்ளடங்கும். எழுத்து இலக்கம் சார் மூலாதாரம், இறுவட்டு (CD), உடனொளிர் இயக்கிகள் (Flash drives) போன்ற நவீன ஆவணக்காப்பு முறைகளிலிருந்து பண்டைக்காலத்தில் குறிப்புகள் வைக்கப்பட்ட ஓலைச்சுவடிகள் வரையுள்ள அனைத்தையும் இது உள்ளடக்கும்.

**உதாரணம்** :- ***சுயசரிதைகள்/நூல்கள்***
***சஞ்சிகைகள்***
***இறுவட்டுகள்***
***ஆவணக்கட்டுகள்***
***ஓலைச்சுவடி நூல்கள்***
***கல்வெட்டுகள்***

### 1.3.2 தகவல்களை சேகரிப்பவரிடத்தில் இருக்கவேண்டிய பண்புகள்

தகவல் சேகரித்தல் அவதானமாகச் செய்யப்பட வேண்டிய செயற்பாடாகும். அது வெற்றியளிக்க வேண்டுமாயின் தகவல் சேகரிப்பவர் ஆற்றல்மிக்கவராகக் காணப்பட வேண்டும். அதேபோல் சேகரிக்கும் தகவலானது உண்மையானதாக, தரம் சார்ந்ததாக, நம்பகத்தன்மை மிக்கதாகக் காணப்படவேண்டும்.

இப்பண்புகளைக் கவனத்திற்கொண்டு செயற்படுகின்ற நபர் சிறந்த தகவல்களை சேகரிக்கின்ற ஒருவராக விளங்குவதோடு வெற்றிகரமாக தனது பணியை நிறைவேற்றுவதிலும் சித்தி அடைகின்றார். தகவல்களை சேகரிக்கின்ற ஒருவரிடம் இருக்கவேண்டிய அடிப்படைப் பண்புகள் சில கீழே தரப்பட்டுள்ளன.




## தகவல்களை சேகரிக்கின்ற நுட்பமுறைகள்

ஒருவர் தமக்குத் தேவைப்படும் தகவல்களை பல்வேறு மூலாதாரங்களைப் பயன்படுத்தி சேகரித்துக் கொள்வதை நீங்கள் அறிவீர்கள். அவ்விதமாக தகவல்களை சேகரிப்பதற்காக பல்வேறு நுட்ப முறைகளைப் பயன்படுத்துவர். பயன்படுத்தும் நுட்பமுறையானது தேவைப்படும் தகவல்களின் இயல்பு, பயன்படுத்துகின்ற மூலாதாரம், தேவைப்படும் தகவல்களின் அளவு, தகவல்கள் தேவைப்படும் காரணங்கள், ஆகியவற்றோடு தகவல் சேகரிப்பவரின் இரசனை மற்றும் இயல்புகளுக் கேற்ப வேறுபடும்.

தகவல்கள் சேகரிப்பதற்காக பயன்படுத்தப்படும் நுட்பமுறைகள் சில கீழே தரப்பட் டுள்ளன.

- ★ குழு கலந்துரையாடல்
- ★ அவதானிப்பு
- ★ வினாக்கொத்து
- ★ மூளைப்புயல் (Brain storm)
- ★ ஆவணப் பரிசீலனை

**குழுக் கலந்துரையாடல்**

தனியாட்கள் இருவரிடையே அல்லது பலரிடையே நிகழ்கின்ற கருத்துப் பரிமாறலின் வழியாக தகவல்கள் சேகரித்தல் இங்கு நடைபெறுகின்றது. இது நேருக்கு நேர் நிகழ்கின்ற உரையாடலாக, தொலைபேசியூடான சம்பாஷணையாக வேறு ஏதாவதொரு விதத்தில் நிகழ்த்தப்படுகின்ற கலந்துரையாடலாக இருக்கலாம்.

**வினாக்கொத்து**

வினாக்கொத்து என்பது நிச்சயமானதொரு தலைப்பின்கீழ் கட்டியெழுப்பப் படுகின்ற வினாக்கள் அடங்கிய எழுத்திலான குறிப்பு ஆகும். இங்கு புள்ளிவிபரங்களின் பங்களிப்போடு வினாக்களுக்கு விடைகளைப் பெற்றுக்கொள்ளல் நிகழ்கிறது.

**அவதானிப்பு**

தகவல்களைத் திரட்டுவதற்காக அவதானிப்பு முறையையும் பயன்படுத்த முடியும். இது இரண்டு பிரதான பகுதிகளைக் கொண்டது.

அவை :-

1. நேரடி அவதானிப்பு
2. பங்குபற்றல் அவதானிப்பு

**ஆவணங்களைப் பரிசீலித்தல்**

பல்வேறு ஆவணங்களைப் பயன்படுத்தி தகவல்களைப் பெற்றுக்கொள்வது முக்கியமானதும் நம்பிக்கையானதுமான ஒரு நுட்பமுறையாகும். வரவு இடாப்பு, சம்பவப்பதிவு புத்தகம் (Log book), புள்ளிவிபரந்திரட்டும் படிவங்கள் ஆகிய ஆவணங் களைப் பயன்படுத்தி தகவல்களைப் பெற்றுக்கொள்ளலை இதற்கு உதாரணமாகக் காட்டமுடியும்.

**மூளைப்புயல்**

ஏதேனும் கருப்பொருள்/ குறிக்கோள் பற்றிய பல்வேறு கருத்துக்களைக் கொண்ட தனிநபர்களின், குழுவொன்றினது கருத்துக்களை ஒன்று சேர்த்துக் கொள்வதன் மூலம் தகவல்களை சேகரிப்பதை இதுகுறிக்கின்றது. பல்வித கருத்துக்கள் யாவற்றையும் குறித்துக்கொண்டு கருத்துக்களை விசாரித்து, கலந்துரையாடி தகவல்கள் வெளிக்கொண்டு வரப்படுகின்றன.

## தகவல்களைத்திரட்டும் போது கவனத்திற் கொள்ளவேண்டிய விடயங்கள்

தகவல்களைத் திரட்டுதல் என்பது மிகவும் கவனத்தோடு செய்யவேண்டிய பணியாகும். அவ்வாறே எந்த நுட்பமுறையை பயன்படுத்தியபோதும் தகவல்களின் உறுதித்தன்மையைப் பாதுகாத்திட மேற்கொள்ள வேண்டிய செயலொழுங்கினைப் பின்பற்றவேண்டும். இதற்காக வீடியோ கருவி, ஒலிப்பதிவுக் கருவி, நிழல் படக் கருவி என்பனவற்றை பயன்படுத்த முடியும். அவை தகவல்களைப் பெற்றுக் கொடுப்பவரின் சம்மதத்துடன் நிகழ்த்தப்படுவதோடு அது தொடர்பாக எழுத்துமூல அனுமதியைப் பெற்றுக்கொள்ளல் பொருத்தமானதாகும். தகவல்

திரட்டுகின்ற செயன்முறையில் மற்றும் திரட்டுகின்ற தகவல்களின் பண்புத்தரத்தை பாதுகாத்தலுக்காக பயன்படுத்துகின்ற ஒழுக்கநெறி மற்றும் முக்கிய விடயங்கள் யாவற்றையும் இங்கு இனங்காண முடியும். அவற்றுள் சில கீழே தரப்படுகின்றன.

- ★ முன் அனுமதியைப் பெற்றுக்கொள்ளல்.
- ★ தனியாள் தன்மைக்கு அல்லது தனிநபரது அந்தரங்கத்திற்கு (privacy) தீங்கு விளைக்கும் அல்லது வெளிப்படுத்த விருப்பமில்லாத தகவல்களை கேட்காதிருத்தல் வேண்டும்.
- ★ தகவல்களைப் பெற்றுக்கொள்ளும் நபர், தரவுகளின் பங்காளியை, தரவுகள் தருபவரைக் களைப்புள்ளாக்காதிருத்தல் வேண்டும்.
- ★ பெறப்படும் தகவல்களின் இரகசியத் தன்மையைப் பாதுகாக்க வேண்டும்.
- ★ உரிய தகவல்களை மட்டும் விசாரிக்க வேண்டும்.
- ★ தகவல்களைத் திரட்டும்போது உண்மைத்தகவல்கள் அல்லாத தனது கருத்துக்களை உறுதிப்படுத்தும் தகவல்களை திரட்டக்கூடாது.
- ★ ஓரிடத்திலிருந்து பெயர்ப்பு செய்த தகவல்களெனில் அவ்வாறு பெயர்ப்புச் செய்த மூலாதாரத்தைச் சரியாகக் காட்டவேண்டும்.
- ★ பாரம்பரியத்திற்குப் பாதிப்பேற்படுத்தும் தகவல்களைப் பெறுவதிலிருந்து விலகியிருத்தல்.
- ★ எல்லாத் தனிநபர்களினதும் நற்பெயருக்கு மதிப்பளித்து, அநாவசிய தூண்டல்களுக்குப் புறம்பாக தகவல்களைப் பெற்றுக்கொள்ள வேண்டும்.
- ★ ஒருவரின் தனிப்பட்ட வாழ்க்கைக்குத் தீங்குதரும் தகவல்களைத் திரட்டுவதிலிருந்து விலகியிருக்க வேண்டும்.
- ★ இன, மத பேதங்களைத் தூண்டிவிடும் தகவல்களைப் பெறுவதிலிருந்து தவிர்த்துக் கொள்ள வேண்டும்.
- ★ தனிப்பட்ட நன்மைகளை விரும்பித் தகவல்களை திரட்டக்கூடாது.
- ★ பெற்றுக்கொண்ட தகவல்களைக் குறித்த தேவைக்கு மாத்திரம் பயன்படுத்தல்.

## 1.4 தகவல்களை அறிக்கையிடல்

தகவல்களை அறிக்கையிடலுக்கு இரண்டு பிரதான சந்தர்ப்பங்கள் உள்ளன. அவை, சாதாரண சமூகத்தில் தனிநபர்களுக்கிடையே தகவல்களைப் பரிமாறுதல் மற்றும் செய்தி அறிக்கையிடல் ஆகும். இவ்விரு சந்தர்ப்பங்களிலும் பெரும்பாலும் பயன்படுத்தப்படும் அறிக்கையிடல் முறைகள் இரண்டினைக் காணமுடியும்.

1. நேரடி அறிக்கையிடல்
2. படைப்பாக்கவழி அறிக்கையிடல்

### நேரடி அறிக்கையிடல்

ஏதேனும் சம்பவமொன்று அது நிகழ்ந்த விதத்திலேயே முன்வைக்கப்படுவது நேரடி அறிக்கையிடல் எனப்படும். சாதாரண சமூகமொன்றில் சம்பவமொன்று தொடர்பாக, சுருக்கமாக மற்றும் விரைவாக தம்மைச் சூழவுள்ளோருக்கு அறியச் செய்ய வேண்டிய சந்தர்ப்பமொன்றில் நேரடி அறிக்கையிடலைப் பயன்படுத்துகின்றனர். செய்தி முன்வைப்புகளில் காணமுடிவது இத்தகைய நேரடி அறிக்கையிடலாகும்.

### படைப்பாக்கவழி அறிக்கையிடல்

சம்பவமொன்றை முன்வைக்கும்போது நேரடி அறிக்கையிடலிலிருந்து மீண்டு, கவர்ச்சியான விதத்தில் முன்வைப்பதே படைப்பாக்கவழி அறிக்கையிடலாகும். சாதாரண சம்பாஷணையொன்றின் போது, சம்பவமொன்று தொடர்பாக தகவல்களை முன்வைக்கும் போது, முன் அனுபவங்களையும் துணையாகக் கொண்டு விளக்கமாக அறிவிப்பதை இதற்கு உதாரணமாகக் கொள்ளலாம். சமூக அனுபவம், சிறுகதை, கட்டுரை, சித்திரமொன்று, திரைப்படமொன்று, செய்தித்தாள் சிறப்புக்கட்டுரை போன்ற முறைகளினூடாக முன்வைப்பதை படைப்பாக்கவழி அறிக்கையிடலில் உள்ளடக்கலாம்.

பாடசாலை மாணவர் என்ற அடிப்படையில் உங்களுக்குப் பல சந்தர்ப்பங்களில் தகவல்களை அறிக்கையிட வேண்டிய தேவையேற்படலாம். காலைக்கூட்டத்துக்கு அல்லது பாடசாலை சுவர்ப் பத்திரிகைக்கு செய்திகளை முன்வைக்கும் பொறுப்பு உங்களிடம் ஒப்படைக்கக்கூடும். அல்லது பாடசாலை சஞ்சிகையொன்றுக்கு ஆக்க பூர்வமான ஒரு கட்டுரை எழுதுவதற்கு ஒப்படைக் கப்பட்டுள்ள சந்தர்ப்பங்களில் செய்திகள், அறிக்கையிடல் மற்றும் ஆக்கபூர்வ கட்டுரைக்காக பயன்படுத்துகின்ற நுட்பமுறை தொடர்பாக அடிப்படை விளக்க மொன்றைப்பெற்று வைத்திருத்தல் முக்கியமானதாகும்.

### செய்தி அறிக்கையிடல்

செய்தியறிக்கையிடல் அதிகளவானோரை நோக்காகக் கொண்டு இடம்பெறும் இங்கு சமூகத்தின் பல்வேறு மட்டத்தில் உள்ளவர்களை, பல்வேறு வயதினரை குறிப்பிட வேண்டி இருக்கும். அவற்றுள் உள்ளடக்கும் விடயங்கள் அதிக சிரமமின்றி, எளிமையான முறையில் குறுகிய காலத்தில் பெற்றுக் கொள்ளக் கூடிய விதத்தில் செய்தி தயாரிக்க வேண்டும். வரையறுக்கப்பட்ட இடத்தைப் பயன்படுத்திட, செய்தி அறிக்கையாளர்கள் தலைகீழ் பிரமிட் வடிவத்தில் தகவல்களை அறிக்கையிடுவர்.




உரு 1.1 : **தலைகீழ் பிரமிட்**

செய்தியொன்றில் மிகவும் முக்கியமான விடயங்கள் முதலாவது பந்தியில் காட்டப்படும். அது **தலைமைச்செய்தி** (Lead) என அழைக்கப்படும். நிகழ்வின் சாராம்சம் அதில் உள்ளடக்கப்படும். இங்கு, யார், என்ன, எப்போது, எங்கே, எவ்வாறுமற்றும் எப்படி இது நடந்தது போன்ற விடயங்கள் சுருக்கமாகக் காட்டப்படும். அதன் பின்பு எழுதப்படும் பந்தியானது **'உடல்'** எனப்படும். மேலே இரண்டாவது முக்கிய விடயமாக, மிகமுக்கிய விடயத்தில் மேலிருந்து கீழாக முக்கியத்துவம் குறைந்து செல்வதாக அமைக்கப்பட்டுள்ளது. கடைசிப் பந்தியாகின்ற போது சம்பவத்துக்குப் பின்புலமாக உள்ள தகவல்கள் உள்ளடக்கப்படும்.

செய்தி அறிக்கையிடுபவர் படிமுறை ஒழுங்கில் தனது விடயங்களை முன்வைக்க முடியும். செய்தியின் கருப்பொருளுக்குப் பாதிப்பு ஏற்படாதவண்ணம் இறுதிப் பகுதியை நீக்குவதற்கும் முடியும். இத்தகைய செய்தி அறிக்கையிடலானது, வாசகனுக்குப் பயனுள்ளதாயிருப்பது, மிகவும் முக்கிய விடயங்களிலிருந்து சாதாரண விடயம் வரை தகவல்களை அறிந்துகொள்ள இயலுமாயிருப்பதனாலேயே ஆகும். இம்முறையைப் பயன்படுத்தி பாடசாலையின் வானொலிச் சேவை நிகழ்ச்சி களுக்கு அல்லது சுவர்ப்பத்திரிகைக்கு செய்திகளை அறிக்கையிட இந்த 'தலைகீழ் பிரமிட்' முறை உங்களுக்கு சிறந்த வழிகாட்டியாக இருக்கும்.

### படைப்பாக்க ரீதியான கட்டுரைகளை அறிக்கையிடல்

செய்தி அறிக்கையிடலைப்போல சிறப்பு அம்ச அறிக்கையிடல் செய்யப்படுவதில்லை. உதாரணமாக செய்தித்தாளிலே உள்ள நாவலானது சிறப்பு அம்சக்கட்டுரை வடிவில் அறிக்கையிடப்பட்டிருக்கும். இது முன்னையதிலும் வேறுபாடான ஒன்றாகும். இங்கு தலைமேல் பிரமிட் எண்ணக்கரு பயன்படுத்தப்படும். இம்முறையிலே கட்டம் கட்டமாக ஒரு ஒழுங்குமுறையில் கதை உரைநடைப் படுத்தப்படும்.



உரு 1.2. : **தலைமேல் பிரமிட் படிவம்**

சிறப்பு அம்சக்கட்டுரையில் உரிய தலைப்பினைப் பற்றி வெற்றிகரமான அறிமுகமொன்றுடன் ஆரம்பிக்க வேண்டும். அதன்பின்பு கதையின் ஆரம்பத்தில் உரிய அம்சத்துடன் தொடர்பு படுத்தி விபரங்களை முன்வைக்க வேண்டும். இறுதியில் முடிவானது உச்ச கட்டமாக முன்வைக்கப் படும். சுவர்ப் பத்திரிகைக்கு அல்லது செய்தி மடலுக்கு, இலக்கியம்சார் சிறப்பம்சக் கட்டுரைகளுக்கு தலைமேல் பிரமிட்வடிவ எண்ணக்கரு உங்களுக்கு வழிகாட்டும்.

### 1.4.1 தகவல்களை வெற்றிகரமாக முன்வைக்கும்போது கவனத்தில் கொள்ள வேண்டிய விடயங்கள்

தாம் முன்வைக்கின்ற தகவல்களுக்கு கிடைக்கக்கூடிய பெறுமதியாவது அத்தகவல்களைப் பயன்படுத்தும்போது கட்டியெழுப்பப்படுகின்ற நம்பிக்கையாகும். எந்தவொரு தகவலுக்கும் சிறந்த வரவேற்பு கிடைப்பதற்கு அத்தகவல் பின்வரும் பண்புகளை உள்ளடக்கியதாக இருக்கவேண்டும்.

1. துல்லியம் (Accuracy)
2. நடுநிலை (Balance)
3. தெளிவானதன்மை ( Clarity)
4. நம்பகத்தன்மை (Credibility)

1. **துல்லியம்**

தகவலோடு சம்பந்தப்பட்ட சகல விடயங்களும் உண்மையானவை யாயிருத்தல், உறுதிப்படுத்தப்பட்ட முக்கிய விடயங்களை வெளிப்படுத்திக் காட்டுதல், சரியானவையாயிருத்தல் ஆகியன துல்லியமான அறிக்கையிடலில் அடங்கும்.

தகவல்களை முன்வைக்கும்போது, அத்தகவல்களின் உண்மை இயல்புகள் உள்ளது உள்ளவாறே முன்வைக்கப்படல் வேண்டும். மக்கள் சமூகத்துக்கு வெளிப்படுத் தப்படுகின்ற செய்திகள், பொறுப்புக் கூறலுடையதாக இருப்பதற்கு அவை சரியான வைகளாக, உண்மையானவையாக இருத்தல் அவசியமாகும். தகவல்களின் உள்ளடக்கத்தில் சம்பந்தப்பட்ட நபர்களின் பெயர், ஊர், தராதரம், காலவிரயம் போன்ற வெளியிடப்படும் சகல தகவல்களும் சரியானவைகளாக உண்மையானவைகளாக இருத்தல் வேண்டும். தகவல்களின் உண்மை நிலைமையை வெளிப்படுத்துவதை உறுதிப்படுத்திக் கொள்வதற்கு வேண்டிய வெளி இருத்தல் வேண்டும்.

2.**நடுநிலை**

நடுநிலைத் தன்மை என்பது, தனிப்பட்ட விருப்புகள், நன்மைகள், குறிக்கோள்கள், அபிப்பிராயங்கள், ஆழமான பற்று போன்றவற்றை கொண்டிராதவகையில் அனைத்துத் தரப்பினரையும் பிரதிநிதித்துவப்படுத்தும் விதத்தில் அறிக்கையிடுதலைக் குறிக்கின்றது.

சமனிலையான தன்மை அல்லது நடுநிலையான தன்மை என்பது, தகவல்களில் இருக்கவேண்டிய குணாம்சமாகும். முன்வைக்க எதிர்பார்க்கும் தகவல்களில் பிரிவுகள் பல இருக்கக்கூடும். கருத்து வேறுபாடுகளுக்கு இடமளிக்கக்கூடிய விடயங்கள் அதில் உள்ளடங்கியிருக்கக்கூடும். எனினும் அதில் அனைத்தையுமே சமன்படுத்தி தகவல்களை எழுத்தாக்கம் செய்தல், தகவல்களின் பெறுமதியை உயர்த்திட ஏதுவாக இருக்கும். அவ்வாறே, நிகழ்ந்து கொண்டிருக்கும் முக்கியமான விடயங்களில் அவதானத்தைச் செலுத்தாமல், பயன்தரும் தகவல்களில் மட்டும் தமது அவதானத்தை செலுத்தும்போது சமனிலைத்தன்மை வீழ்ச்சியடைகின்றது. தகவல்களின் பண்புத்தரமானது ஒளிவீசி பிரகாசிப்பதில் தனிநபரின் அறிவு, தீட்சண்யம், அக்கறை என்பன செல்வாக்குச் செலுத்துகின்றன. தகவல் தொகுதி தயாரிப்பிற்கு உரிய செய்தி தொடர்பான விளக்கமளித்திட இடமிருந்தபோதும் தமது கருத்துக்களைச் சுட்டிக் காட்டிட எவருக்கும் அங்கு இடமில்லை. சமூகத்தின் மீது பொறுப்புணர்வுடன் செயற்படுவதோடு அறிக்கையிடல் பண்புத்தரமிக்கதாக்கிட எந்தவொரு பக்கச்சார்புத் தன்மையும் இருக்கக்கூடாது.

3.**தெளிவான தன்மை**

எளிமையான, சிக்கலில்லாத மொழிநடையில் எழுதப்படுவதாகும். பொதுவான பிரயோகமொழி அதிக அளவிலும், தொழில்நுட்ப கலைச்சொற்களை குறைந்த அளவிலும் பயன்படுத்தித் தகவல்களை தயாரித்துக் கொள்வதே தெளிவான தன்மையாகும்.

தகவல் அறிக்கையிடலில் முன்வைக்கப்படுகின்ற விடயங்களை சரியான முறையில் கிரகித்துக்கொள்ளக்கூடிய மொழிநடையில் பயன்படுத்துவது அந்த அறிக்கையிடு பவரின் கடமைப்பொறுப்பாகும். அறிக்கையிடும் தகவல்கள் விளக்கமானதாக இருக்க வேண்டும். சிக்கல் நிறைந்த வாக்கிய அமைப்பு, பேச்சு மொழிச்சொற்கள், பிழையான உச்சரிப்பு, அல்லது விளக்கம் தராத படரீதியான காட்சிகள் இல்லாததாக இருக்கவேண்டும். அநாவசிய களைப்புக்கு நேயர்களை உள்ளாக்காததோடு நிகழ்வினை தெளிவாக விளங்கிக் கொள்வதற்குரிய வாய்ப்புக்கு இடமளிக்க வேண்டும். கற்ற, கல்லாத எவருக்கும் இலகுவாக விளங்கிக் கொள்ளக் கூடியதான சொற்றொகுதியினூடாக மனதைக் கவரும் விதத்தில் அறிக்கை முன்வைக்கப்பட வேண்டும்.

4. **நம்பகத்தன்மை**

பெற்றுக்கொள்ளும் தகவல்களில் நம்பிக்கை கொள்ளக் கூடியதாக இருப்பதையே இங்கு நம்பகத்தன்மை எனக்கூறுவர். துல்லியம், நடுநிலை மற்றும் தெளிவான தன்மை ஆகியன ஒன்றுசேரும் போது அத்தகவல் மீது நம்பகத்தன்மை ஒன்று கட்டியெழுப்பப்படுகிறது. இவற்றுள் ஒரு அம்சமேனும் வீழ்ச்சியடையும்போது நம்பகத்தன்மையின் வரையறையும் குலைகிறது.

செய்தியொன்றில் நம்பகத்தன்மை உருவாக்கப்படுகின்ற விதம் பற்றி எளிய சமன்பாடு ஒன்றினை யுனெஸ்கோ தொடர்பாடல் நிபுணர் போல் டி மெசுனியர் (Paul de Measeneer) எடுத்துக்காட்டுகின்றார்.

| A | + | B | + | C | = | C |
|---|---|---|---|---|---|---|
| Accuracy | | Balance | | Clarity | | Credibility |
| துல்லியம் | | நடுநிலைத் தன்மை | | தெளிவான தன்மை | | நம்பகத்தன்மை |

**செயற்பாடு** - 2

தகவல் அறிக்கையிடலுக்குப் பிரயோக செய்முறை செயற்பாடு

1. பாடசாலைக்கு 25 வருடங்கள் பூர்த்தியாவதை முன்னிட்டு ‘‘அன்றும் இன்றும் எமது பாடசாலை’’ என்னும் தலைப்பில் சுவர்ப்பத்திரிகையொன்றுக்கு கட்டுரையொன்றைத் தயாரிக்கும் பொறுப்பு உங்களிடம் ஒப்படைக்கப் பட்டுள்ளதாகக் கருதவும். அதற்கிணங்க நீங்கள் தகவல்களைத் திரட்டி மற்றும் அறிக்கையிட உரிய அட்டவணையைப் பூர்த்தி செய்க.

| பயன்படுத்தும் மூலாதாரம் | தகவல் திரட்டுபவராக நீங்கள் வெளிக்காட்டிய பண்புகள் / ஒழுக்கநெறி | பயன்படுத்தும் நுட்பமுறை | பின்பற்றிய ஒழுக்க நெறிகள் மற்றும் செயன்முறைகள் |
|---|---|---|---|
| | | | |
| | | | |
| | | | |

2. பாடசாலை ஊடாக சமூகத்தினூடாக வெளியிடப்படுகின்ற செய்திமடல் (News Letter) ஒன்றுக்காக பாடசாலையின் சிறப்பு நிகழ்வொன்றை, பிரமிட் முறைக் கிணங்க செய்தி அறிக்கையாகத் தயாரிக்குக.

# 02 அச்சு ஊடகம்



## குறிக்கோள்

சமூகத்தில் வெவ்வேறுபட்ட தொடர்பாடல் ஊடகங்கள் உருவாகியுள்ளன. அவற்றில் அச்சு ஊடகங்களின் பணி முதன்மையானது. கல்வி மற்றும் சமூகத் தேவைகளின் பேரில் வெவ்வேறுபட்ட அச்சு ஊடகங்கள் பயன்படுத்தப் படுகின்றன. அதனால் அச்சு ஊடகங்கள், பற்றிய அறிவு உங்களுங்கு அவசியமானது. இப்பாடப்பரப்பின் ஊடாக, புராதனகாலம் முதல் நவீனகாலம் வரை அச்சு ஊடகம் எவ்வாறு வளர்ச்சி பெற்றது. மற்றும் வெவ்வேறு அச்சு ஊடக வடிவங்கள் பற்றிய அறிவினைப் பெறலாம். அதேபோல் அச்சு ஊடகங்களுள் ஒன்றான பத்திரிகை பற்றிய உங்கள் அவதானத்தை இப்பாடத்தில் ஈர்த்துள்ளோம். இங்கு பத்திரிகைகளின் வகைப்பாடு, உள்ளடக்கம் மற்றும் பத்திரிகை ஒன்றின் மாதிரி ஆக்கம் முதலானவை பற்றிய அறிவினை இப்பாடப்பகுதி மூலம் நீங்கள் பெற்றுக்கொள்ளமுடியும்.

## 2.1 அச்சு ஊடக அறிமுகம்

ஆதிமனிதன் பரிணாம வளர்ச்சியினூடாகத் தொடர்பாடல் திறன் விருத்தியடையப் பெற்றான். குரலைச் சிறந்தமுறையில் பயன்படுத்தி பேச்சுமொழியை உருவாக்கினான். பின்னர், இப்பேச்சுமொழி ஊடாகக் கூறப்பட்ட விடயங்களைக் குறிப்புக்களாக எழுதிக்கொண்டான். இதன்காரணமாக பல்வேறு குறியீடுகள், சித்திரங்கள், குறிப்புகள், எழுத்துக்கள் என்பன உருவாகின. இக்குறிப்புக்களை உருவாக்கிட மனிதன் சுற்றுப்புறச்சூழலைப் பயன்படுத்தினான். இப்பின்னணியிலேயே கற்குகைகளில் எழுதுதல் தொடக்கம் கடதாசியில் எழுதுதல் வரையாக அச்சு ஊடகம் வளர்ச்சிபெற்றது.

### 2.1.1 எழுத்துக்கலை வளர்ச்சி

மானுடத் தொடர்பாடலில் அடிப்படைத் தேவைகள் மட்டுமல்லாது, சமூகத்தேவைகளும் எழுத்துக்களுக்கூடாகப் பூர்த்தி செய்யப்படுகின்றன. அதனடிப்படையில் வெவ்வேறு காலகட்டங்களில் நிகழ்ந்த சமூக, பொருளாதார மற்றும் அரசியல் நிகழ்வுகள் ஊடாக எழுத்துக்கலையிலும் சாதகமான வளர்ச்சி ஏற்பட்டது. எழுத்துக்கலையின் வளர்ச்சியினை இலகுவாக நோக்குவதற்காகக் கீழ்க்குறிப்பிட்ட அட்டவணை தயாரிக்கப்பட்டுள்ளது.

**எழுத்துக்கலை வளர்ச்சி**

**புராதனகாலம்**

★ரேகைகள், சமிக்ஞைகள், வரைதல், அடையாளங்கள், குறிப்பு, எழுத்து, மரங்கள், மலைகள், சுரங்கங்கள், சுவர், கற்கள், பலகை, மண், சுவரொட்டிகள், மிருகங்களின் தோல், ஆமை ஓடு, கடதாசி முதலானவற்றின் மேல் குறிப்புகள் எழுதுதல்

**இடைக்காலம்**

★பலகை அச்சு உருவாக்கம்
★பலகையில் அச்சிடல்
★பதப்படுத்திய களிமண் எழுத்து உருவாக்கம்
★அச்சு இயந்திரக் கண்டு பிடிப்பு
★அச்சுப் புத்தக உருவாக்கம்
★அச்சுப் பத்திரிகை உரு வாக்கம்
★உலோக எழுத்து உரு வாக்கம்
★ தள அச்சு உருவாக்கம்

**நவீன காலம்**

★சமதள அச்சுமுறை உருவாக்கம்
★offset அச்சுமுறை உருவாக்கம்
★கணினி உருவாக்கம்
★ தொலைநகல் இயந்திரம் உருவாக்கம்
★இலக்கம் சார் அச்சு முறை உருவாக்கம்

(அ) **புராதன காலம்**

மேலே உள்ள அட்டவணையில் காட்டப்பட்டுள்ளவாறு கோடுகள், சமிக்ஞைகள், குறியீடுகள், சித்திரம் மற்றும் எழுத்துருக்களை வெவ்வேறு இடங்களில் பதிவுசெய்தல் புராதன காலத்தின் ஆரம்பத்தில் நிகழ்ந்தது. இக்காலத்தில் உருவாக்கப்பட்ட அரிச்சுவடியினை கடதாசியில் பதித்தமையானது எழுத்துக்கலை வளர்ச்சியின் ஓர் மைல்கல்லாகக் காணப்படுகிறது. எழுத்து வடிவங்களை உருவாக்குவதில் பினீசியன், ஆசிரியன் மற்றும் ஹிபுரு ஆகிய இனத்தவர்கள் முன்னணியில் இருந்தனர். கிரேக்க, லத்தீன் மற்றும் அராபி எழுத்துவடிவங்கள் உருவானது அவர்களது முயற்சியினாலேயாகும். தமக்கே உரித்தான எழுத்துவடிவங்களை உருவாக்கிய சீனாவின் முயற்சியானது, பின்னர் வியாபார மற்றும் பண்பாட்டு ஒற்றுமை முதலான காரணங்களுக்காக ஜப்பான் மற்றும் கொரியா போன்ற நாடுகளிலும் பரவியது.

புராதன மனிதன் இயற்கை மூலங்கள் மற்றும் செயற்கையாகத் தயாரிக்கப்பட்ட மூலங்கள் மீது குறிப்பிடுதல் மற்றும் கடதாசி பயன்படுத்துதல் போன்றவற்றைக் கையாண்டான் திபேத்தின் பய்லான் மரத்தினால் தயாரிக்கப்பட்ட கடதாசி (Tibetian Paper), சீனாவின் அரிசிக் கடதாசி (Rice Paper), எகிப்தின் பபிரஸ் கடதாசி (Papyrus Paper) அவற்றுள் சிலவாகும். கி.பி 105இல் சீன நாட்டவரான ட்சாய் லூன் (Tsai Lun) என்பவரால் கடதாசி தயாரிக்கப்பட்டது. இது கடதாசி தயாரிப்பு தொடர்பான சகல முயற்சிகளிலும் வெற்றி பெற்ற ஓர் முயற்சியாகக் கொள்ளப்படுகிறது. இவ்வாறாக எழுத்துக்கள் ஓர் தொடர்பாடல் ஊடகமாக மாற்றம் பெற்றன. எழுத்துக்கள் தற்கால அச்சு ஊடகங்களின் ஓர் ஆரம்பம் என்றால் அது மிகையாகாது.

**குறிப்பிடத்தக்க அச்சு ஊடக முயற்சிகள்**

★ ரோம் நாட்டில், ஜூலியஸ் சீசரின் ஆட்சிக் காலப்பகுதியில், அரச தகவல்களை மக்களும் அரச ஊழியர்களும் அறிந்து கொள்வதற்காக, தகவல்களை கற்கள் மற்றும் உலோகங்களில் பொறித்து, மக்கள் நடமாட்டம் அதிகமுள்ள இடங்களில் தொங்கவிடப்பட்டது. இது, 'அக்ரா டியூரினா' (Acta Diurna) என்னும் அரச அறிவிப்பு என அழைக்கப்பட்டது.

★ ஜப்பானின் 'யோமியூரி கவராபான்' (Yomiuri Kawaraban) எனப்படும் மண் தளத்திலமைந்த செய்திப்பத்திரிகை

★ பிரித்தானியாவில் கைகளால் எழுதப்பட்ட பத்திரிகைக் கடிதங்கள்

★ ரஷ்யாவில் 'கூரன்ட்' (courant) எனப்படும் கையால் எழுதப்பட்ட பத்திரிகை.

★ செய்தித் தேவைகளுக்காக எழுதப்பட்ட மண் அல்லது மெழுகு தேய்க்கப்பட்ட பலகை

உலகில் பல்வேறு இனத்தவர்களாலும் அவரவர் பண்பாடு மற்றும் வாழும் சூழல்களுக்கேற்ற வகையில் எழுத்துக்களும் அவற்றை எழுதவல்ல தளப்பரப்புகளும் (கடதாசி உள்ளடங்கலாக) கண்டுபிடிக்கப்பட்டன. ஆயினும், முறையான அச்சுக்கலை அப்பகுதியில் உருவாகவில்லை.

இக்காலப் பகுதிகளில் ஒரு ஆவணத்தின் பிரதிகளைப் பெற்றுக்கொள்வது எவ்வாறு என்பது தொடர்பில் ஆய்வுகள் மேற்கொள்ளப்பட்டன. அதற்கான காரணங்கள் பலவாகும்.

★ கையெழுத்தில் பல பிரதிகள் எழுதிக்கொள்வது கடினமாயிருந்தமை.

★ ஒருவரால் மாத்திரம் தனியாக கையெழுத்துப் பிரதிகள் தயாரிக்க முடியாமை; வெவ்வேறு நபர்கள் பங்குபெறும்போது வேறுபாடுகள், குறைபாடுகள் காணப்பட்டமை.

★ நேரவிரயம்

★ ஆளணி அதிகம் தேவைப்பட்டமை.

அச்சுக்கலை விருத்தியடைந்தமை இக்குறைபாடுகளை நிவர்த்தி செய்வதற்கேயாகும்.

### ❖ பலகை அச்சு

பலகை அச்சின் (wood block) மூலம் அச்சிடுதல் அச்சுக்கலையின் முதற்கட்டமாகும். எழுத்துக்கள் அச்சுப் பதிவாகும் இடம், முன்புறமாக மேலுயர்ந்திருந்ததன் காரணமாக இது ‘எழுத்து அழுத்த அச்சுமுறை’ (Relief printing letter press) என அழைக்கப்பட்டது.

சீனாவில் இம்முறை ஊடாக கி.பி.868ல் உலகின் முதல் புத்தகம் எனப்படும் மகாயான பௌத்த நூலான ‘வஜ்ர சூத்திரம்’ அச்சிடப்பட்டது. ஐரோப்பாவில் புனித கிறஸ்தோபரின் உருவத்தை பிற்காலத்தில் பலகை அச்சில் அச்சிட்டிருந்தனர். பலகை அச்சிடலின் குறைபாடுகளை உணர்ந்த சீனர்கள், இதற்கு மாற்றான இலகுமுறையை பின்னாட்களில் தெரிந்துகொண்டனர். இதன்படி, மென்மைநிறைந்த மண்ணைப் பயன்படுத்தி எழுத்துக்களைப் புனைந்து, அவற்றைக் காயவைத்து அச்சிடலை மேற்கொண்டனர்.

சீனாவில் பலகை அச்சிடல் நடைபெற்ற காலப்பகுதியில் கூட, ஐரோப்பாவில் கைகளால் பிரதியெழுதப்பட்டு நூலாக்கம் செய்யப்பட்டமை கவனிக்கத்தக்கது. சீனாவின் முன்னேற்றகரமான அச்சிடல் முறைமையை அரேபிய வியாபாரிகள் ஆசியாவிற்கும் பின்னர் ஐரோப்பாவிற்கும் எடுத்துச் சென்றனர்.

## ❖ உலோக எழுத்து உருவாக்கமும் அச்சு இயந்திரத் தயாரிப்பும்



உரு 2.1 - ஜோஹன்ஸ் குடென்பர்க்

ஜோஹன்ஸ் குடென்பர்க் (Johannes Gutenberg) தொழிற்சாலை அதிகாரி ஆவதற்கு கனவு கண்டவர் ஆவார். பொன், வெள்ளி, பித்தளை, இரும்பு, செப்பு போன்றவற்றை வெப்பமேற்றுவதும் அதனூடாக வெவ்வேறு பொருள்களை செய்வதும் அவரது விருப்பமாகும். அவ்வாறான அடிப்படையில் வாழ்ந்ததால் அச்சிடுவதற்கு பலகை அல்லது மண் எழுத்துக்கு பதிலாக உலோக எழுத்தைப் பயன்படுத்துவது தொடர்பில் சிந்தனை கொண்டார். குடென்பர்க் ஜெர்மன் அரிச்சுவடியினை உலோக எழுத்துக்களால் உருவாக்கியமையானது அச்சுக்கலை வரலாற்றில் ஒரு மைல் கல்லாகும். ஒரு இயந்திரமில்லாத குறையை இந்தச் சந்தர்ப்பத்தில் குடென்பர்க் உணர்ந்தார். அதன் பிரதிபலனாக திராட்சைச் சாற்றை பெறுவதற்கு பயன்படுத்திய சாதாரணமான இயந்திரத்தினூடாக கி.பி.1440 இல் அவரால் கையால் இயக்கக் கூடிய அச்சிடும் இயந்திரம் கண்டு பிடிக்கப்பட்டது.அந்த வகையில் முதன் முதலாக இந்த அச்சிடும் உபகரணத்தில் இலத்தீன் மொழியிலமைந்த ‘இலத்தீன் இலக்கணம்’ என்னும் நூல் அச்சிடப்பட்டது. இரண்டாவதாக, அதேமொழியில் கிறிஸ்தவ விவிலிய நூலான பைபிள் 200 பிரதிகள் அச்சிடப்பட்டது. இதன்தொடராக, கி.பி. 1500 ம் ஆண்டளவில் ஐரோப்பா முழுவதும் பெரிய அச்சிடும் காரியாலயங்கள் திறக்கப்பட்டிருந்தன.

## ❖ முதன் முதலாக அச்சிடப்பட்ட பத்திரிகையின் தோற்றம்



THE LONDON GAZETTE.

Published by Authority.

உரு 2.2 - லண்டன் கெசெட்

முதன் முதலாக பத்திரிகை 17 ம் நூற்றாண்டில் ஜேர்மனி, இங்கிலாந்து, பிரான்ஸ், அமெரிக்கா போன்ற நாடுகளில் தோன்றியது. இங்கிலாந்தின் ‘லண்டன் கெசெட்’ இவற்றுள் பிரபலமானது. இதன் நோக்கம், வியாபாரிகளினதும் நகரங்களில் வாழும் மக்களதும் தேவையைப் பூர்த்தி செய்வதாகும். அப்படியாயிருந்தாலும் பிரான்ஸ் நாட்டில் வெளியிடப்பட்ட லா கெசட் (la Gazette) பிரான்ஸ் அரசாங்கத்தின் அரசியல் விடயங்களை வெளியிட பயன்படுத்தப்பட்டது. அந்த நூற்றாண்டின் மத்தியில் மாத இதழ்களும், நாள் இதழ்களும் வெளியிடப்பட்டன. அதன் பிரகாரம் ஐரோப்பாவின் கட்டுப்பாட்டிலிருந்த குடியேற்ற நாடுகளிலும் பத்திரிகைகள் பரவின. அதன்படி முதலாவது இந்திய பத்திரிகையான பெங்கால் கெசெட், (Bengal Gazette) வெளிவிடப்பட்டது.

### (ஆ) இடைக்காலம்

1793ல் சமதள அச்சுக்கலை உருவாகியது. ஜேர்மனி நாட்டின் சட்டத்துறை மாணவனான அலோயிஸ் செனபெல்டர் (Alois Senefelder) என்பவரால் எதேட்சையாக நிகழ்த்தப்பட்ட ஆய்வொன்றின் பிரகாரம் இது நிகழ்ந்தது. கல்லிலே பொறிக்கப்பட்ட குறிப்பொன்றைக் கடதாசியில் பதித்தது இதன் ஆரம்ப நிகழ்வாகும். பின்னர், இரண்டு உருளைகளாலும் (சிலிண்டர்கள்) அழுத்தப்படும் கடதாசி மூலம் அச்சுப்பதிவு மேற்கொள்ளப்படும் இப்புதிய முறை 'லித்தோ கிராபி' எனப் பெயர்பெற்றது. தண்ணீரும் எண்ணெயும் கலக்காது என்ற தத்துவம் இப்புதிய அச்சுமுறைக்கு அடிப்படையானது. பின்னாளில், அமெரிக்காவின் ஐரா ருபெல் (Ira Rubel), மூன்று சிலிண்டர்களைப் பயன்படுத்தி ஓவ்செற் லித்தோகிராபியை (offset Lithography) அறிமுகம் செய்தார். நான்கு நிறப்பயன்பாடு இதன் சிறப்பம்சமாகும். CMYK என்பவற்றால் அந்த நான்கு நிறங்களும் குறிக்கப்பட்டன. இப்புதிய ஓவ்செற் அல்லது மறுதோன்றி அச்சு இயந்திரம் அச்சுக்கலையில் ஒரு பாரிய மாற்றத்தை உருவாக்கியது. இலகுவான பிரயோகமும், வண்ண அச்சுப்பதிப்பும் இதற்கு மேலும் உந்துசக்தியாயின.

### (இ) நவீன காலம்



உலகம் வெகுவிரைவாக முன்னேறிச் செல்வதை நாம் அறிவோம். இது, அச்சிடும் தொழில்நுட்ப வளர்ச்சியிலும் தாக்கம் செலுத்தியது. அதன்படி, தொலை நகல், கணினி போன்ற நவீன கருவிகளின் தோற்றம் அச்சு ஊடக அபிவிருத்திக்கும் உறுதுணையானது.

கணினியை மையப்படுத்திய இலக்கம் சார் அல்லது எண்மான (digital) அச்சு முறையானது அக்காலத்தின் இன்றியமை யாததாகவிருந்தது. அதேபோல, இணையத்தை மையப்படுத்திய தொடர்பாடலும் அதிக வளர்ச்சி பெற்றது. இணையத்தில் தரவுகளைப் பதிவேற்றம் செய்யவும் பதிவிறக்கம் செய்யவும் முடிகிறது. தற்போது, இணையம் சார் இலத்திரனியல் ஆவணங்களின் (E-documents) பயன்பாடு சுலபமான, எளிமையான, எல்லைகளற்ற ஒன்றாகியுள்ளது.

### 2.1.2 இலங்கையில் அச்சுக்கலை ஆரம்பம்

உலக மக்களாலும் புராதன இலங்கை மக்களாலும் தம் தேவைகளுக்காக புராதான காலம் தொடக்கம் தேவைக்கேற்றவாறு வெவ்வேறுபட்ட அச்சுக்கலை வடிவங்கள் பயன்படுத்தப்பட்டன. இதற்கு சான்றாக தந்திரிமலை ஓவியம், கிதுள்கல ஓவியம், குருவிட்ட பட்டதொம்ப லேனவில் கிடைக்கப்பெற்ற சான்றுகள் என்பவற்றைக் குறிப்பிடலாம். எவ்வாறாயினும் இலங்கை அச்சுக்கலை பற்றிய சரியான தகவல் கிடைப்பது கி. பி. 3ம் நூற்றாண்டில் இடம்பெற்ற மகிந்தரின் வருகையின் பின்னராகும்.

## (அ) புராதன காலம்

**✱ குகைச் சித்திரம்**

கற்குகைகளில் சமய நிகழ்வுகள் இடம்பெற்றதாக குகைச் சுவர்களில் சிறு குறிப்புகள் காணப்படுகின்றமை.

**✱ டேம் சித்திரம்**

அரச நிர்வாகம் தொடர்பான தகவல்கள் கற்களில் செதுக்கப்பட்டுள்ளமை. (குகைச் சித்திரங்களை விட இவை அதிகளவிலான விபரங்களை உள்ளடக்கியுள்ளன.)

**✱ அறிவித்தல் கடிதம்**

அரசர்கள் பொதுமக்களுக்கு அறிவித்தல் வழங்க கற்களினால் செய்யப்பட்ட அறிவித்தல் பலகை ஊடாக செதுக்கப்பட்ட விடயங்கள்.

**✱ சீலா அச்சுக்கலை அல்லது கல்வெட்டுக்கள்**

அரச நிகழ்வுகள், இடம் பற்றிய தகவல்களை பொதுமக்களுக்கு அறிவிக்கப் பயன்படுத்திய முறையாகும்.

**✱ அச்சு வழியிலான கடிதம்**

அரசர்களால் வழங்கப்படும் பதவிகள், மானியங்கள் மற்றும் கட்டளைகள் பற்றிய அறிவித்தலை வழங்கப் பயன்படுத்திய ஆவணம்

- ★ எழுத்துக்கள் பொறிக்கப்பட்ட களிமண் பாத்திரங்கள்
- ★ எழுத்துக்கள் பொறிக்கப்பட்ட நாணயங்கள்
- ★ இருக்கை, பாதுகாப்புக்கல், கூரை, சந்திரவட்டக்கல் போன்றவற்றில் பொறிக் கப்பட்ட எழுத்துக்கள்
- ★ தங்கம், வெள்ளி மற்றும் பித்தளை மீது எழுதுதல்
- ★ ஓலைச் சுவடிகள்



உரு 2.4 - **புராதன நாணயங்கள்**







உரு 2.5 - **மிகிந்தலை கல்வெட்டுக்கள்**

எமது நாட்டின் புராதன அச்சுக்கலையில் தென்னிந்திய பல்லவ ஆட்சியின் அரிச்சுவடி பயன்படுத்தப்பட்டதாகக் குறிப்பிடப்படுகிறது. இக்காலத்தில் கி.பி. 4ம் நூற்றாண்டில் தீபவம்சம், கி.பி 5ம் நூற்றாண்டில் மகாவம்சம் ஆகிய நூல்கள் அச்சடிக்கப்பட்டன.

இலங்கையர்களின் தேவைக்கேற்றவாறு கி.பி.1250களில் சிங்கள மொழி குறிப்பிடத்தக்க முறையில் வளர்ச்சியடைந்தது. இதன் காரணமாக அச்சுக்கலை இலங்கையில் மேலும் சிறப்பாக வளர்ச்சியடைந்தது. இதனைத் தொடர்ந்து அந்நியராட்சிக் காலம் தொடங்கியது.

## (ஆ) நவீன காலம்

அந்நியராட்சிக் காலத்தில் இலங்கைக்குக் கிட்டிய விடயங்களும் அதேபோல் இலங்கை இழந்த விடயங்களும் பல உள்ளன. அச்சுப்பதித்தலும் அவ்வாறான ஒரு கிடைக்கப்பெற்ற விடயமாகும். இலங்கையின் கரையோரப் பிரதேசத்தை கைப்பற்றிய அந்நியர்கள் கிறிஸ்தவ மதத்தைப் பரப்புவதற்காக இவ் அச்சுக்கலை மூலம் தமிழ் மற்றும் சிங்கள நூல்கள் உருவாகுவதற்கு வழிவகுத்தனர். கொழும்பு ஆயுத களஞ்சிய சாலை பொறுப்பாளராகவிருந்த கப்ரியல் ஸ்கேத் (Gabriel Schade) என்பவரால் சிங்கள எழுத்துக்கள் உலோகத்தால் வார்க்கப்பட்டன. இது இலங்கையின் அச்சுத்தொழிலில் ஓர் மைல் கல்லாகும். 1737ம் வருட அளவில் சிங்கள அச்சகமொன்று 'பிலாத்' எனும் ஆளுநரின் கட்டளையால் உருவாக்கப்பட்டது. தற்போது பொரளையில் காணப்படும் அரச அச்சகம் அதன் வளர்ச்சியாகும்.

1841இல் யாழ்ப்பாணம் மானிப்பாய் எனும் இடத்தில் தமிழ் மொழிமூல அச்சகம் ஆரம்பிக்கப்பட்டது மேலும் புளத்கம தம்மலங்கார தலைமையில் 1862 வருடத்தில் காலியில் '**லங்கோபகாரய**' எனும் பெயரில் அச்சடிக்கும் நிலையம் ஆரம்பமானது.

சுதந்திரத்துக்குப் பிற்பட்ட காலப்பகுதியில் அரச மற்றும் தனியார் அச்சுப்பதித்தல் நிலையங்கள் உருவாக்கப்பட்டன. இது ஜனநாயகத்தின் வெளிப்பாடாக இருந்தது. இன்றைய உலகமயமாதற் சூழலில், புதிய தொழினுட்ப வளர்ச்சி அச்சிடுதல் கலையை வெகுசன அளவில் பரப்பியுள்ளது. இது, இன்று குறிப்பிடத்தகுந்ததோர் கைத்தொழிலாகவும் மாறியுள்ளது.

## 2.2 அச்சு ஊடக வடிவங்கள்




உரு 2.6

தாய்க்கும் மகனுக்கும் இடையில் இடம்பெற்ற மேற்குறிப்பிட்ட உரையாடல், தொடர்பாடல் வகைகள் மற்றும் அவற்றின் இயல்புகள் பற்றியும் குறிப்பிடுகின்றது. இங்கு சூழல் தொடர்பான ஒரே விடயம் பலவகைகளில் வெவ்வேறு ஊடகங்களில் வெளியிடப்படுகிறது இதற்கான காரணங்களாவன,

★ ஊடக நிறுவனங்களுக்கு இடையிலான போட்டி.

★ ஊடக நிறுவனங்களின் வணிக மற்றும் சமூகநோக்கு.

★ ஒவ்வொரு பாவனையாளரதும் நடத்தை வேறுபடுதல்.

★ ஒவ்வொரு பாவனையாளரின் இரசனை வேறுபடல்.

★ பெறுநரின் சமூகப்பின்புலம்.

★ தகவல்பெற்றுக்கொள்ளும் சந்தர்ப்பம் வேறுபடல். என்பனவாகும்.

இவ்வாறு மேற்குறிப்பிட்ட விடயங்களுக்காக வெவ்வேறு முறைகள் பயன்படுத்தப்பட வேண்டும்.

ஏனைய ஊடகங்களோடு ஒப்பிடும்போது அச்சு ஊடகத்தின் இயல்புகளை அறிந்துகொள்வது, அதன் பயனுறுதியையும் பயன்பாட்டுப் பெறுதிகளையும் சிறப்பாக முன்வைக்கக் கூடியதாகும். அவ்வாறான சிறப்பியல்புகள் பின்வருமாறு,

**அச்சு ஊடகத்தின் இயல்புகள்**

★அச்சு ஊடகத்தினை வாசிப்பதற்கு விசேட செலவீனம் எதனையும் செய்ய வேண்டியிராது. குறித்த ஊடகத்தை முதலில் கொள்வனவு செய்யும் செலவே செலவீனமாக அமையும். பின்னர், தொடர் வாசிப்புக்கள் கட்டணம் எதனையும் கொண்டிருப்பதில்லை.

★வாசிப்பவற்றை வாசகர்கள் தமது கற்பனைத் திறனுக்கேற்றவகையில் தம்முள் காட்சிப்படுத்திக்கொள்வர்.

★அச்சிடப்பட்டவைகளை வாசிக்கும் முறைமையைத் தீர்மானிப்பது வாசகர்களே ஆவர். இங்கு, எவ்வித கட்டாயமும் இன்றி, தமது சுதந்திரத்திற்கு ஏற்றாற்போல வாசகரின் வாசிப்பு நிகழும்.

★வாசிப்பவர்கள் தாம் விரும்புகின்ற பகுதிகளைத் தேர்ந்தெடுத்து வாசிப்பது அவரவருக்கே உரிய தீர்மானமாகும்.

★அச்சிடப்பட்ட பிரதிகளைக் களஞ்சியப்படுத்த விசேட தொழினுட்பவசதிகள் அவசியமில்லை.

★தரம் குறைந்த கடதாசியோ, உயர்தரக் கடதாசியோ எதில் அச்சிட்டாலும் உள்ளடக்கத்திற்கு எதுவித பாதிப்பும் ஏற்படாது.

★ அச்சிடப்படும் தகவல்களைக் கல்வித் தேவைகளுக்காக இலகுவில் கோவையாக்கிப் பயன்படுத்த முடியும்.

**அச்சு ஊடகத்தின் வேறுபட்ட வகைகள்**

அச்சு ஊடகத்தில் வேறுபட்ட வகைகள் பாவனை அடிப்படையில் காணப் படுகின்றன. அவையாவன.

★ புத்தகம்
★ பத்திரிகை
★ சஞ்சிகை
★ சுவரொட்டி
★ துண்டுப்பிரசுரம்

### 2.2.1 புத்தகம்

புத்தகம் என்பது 49 பக்கங்களுக்கு குறையாத வகையில் அச்சடித்துக் கோவையாக்கிய ஆவணமாகும் என யுனெஸ்கோ வரைவிலக்கணப்படுத்தியுள்ளது. இவ்வாறு அச்சடிக்கப்பட்ட விடயங்களை நூலால் அல்லது ஒட்டும் பசையால் அல்லது இயந்திரத்தால் இணைக்கப்படுவதே கோவைப்படுத்தல் (Binding) எனப்படுகிறது.



இலகு கோவைப்படுத்தல்
(Spiral Binding)



ஊசிகளால் கோவைப்படுத்தல்
(Stapler Binding)



வன்கோவைப்படுத்தல்
(Hard Binding)

புத்தகங்களை, அவை எழுதப்படும் துறைசார்ந்து சமயம், வரலாறு, விஞ்ஞானம், சமூக விஞ்ஞானம், மொழி, தகவல் தொழிநுட்பம் என வகைப்படுத்த முடியும். அதனால்தான் அறிவுத்தேடலில் புத்தகத்திற்கு சிறப்பிடம் கிடைக்கிறது. நிரந்தரமாக வாசிப்பதற்கு கூடிய அறிவும் அனுபவமும் புத்தகம் வழி எப்போதும் கிடைக்கின்றது. அதனால் புத்தகத்தை ஒரு நண்பனாகக் கருதுகின்றனர்.

**புத்தகத்துக்கான பதிவும் அங்கீகாரமும்**

புத்தகத்தின் ISBN இலக்கம் மூலம் அது சர்வதேச ஏற்றுக்கொள்ளலுக்கு உட்படும், இலங்கையில் புத்தகத்திற்கு ISBN இலக்கம் வழங்குவது தேசிய நூலகமாகும்.

ISBN (International Standard Book Number) - சர்வதேச தரநிர்ணய புத்தக இலக்கம்

உலகில் பத்திரிகைக்கு முன்பதாக தோற்றம் பெற்ற முதலாவது அச்சூடகம் புத்தகங்களாகும். உலகின் முதலாவது புத்தகம் பலகை அச்சின் (Wood Block Printers) மூலம் அச்சிடப்பட்டது. சீன பௌத்த மதகுருமார் உருவாக்கிய அப்புத்தகம் வஜ்ர சூத்திரமாகும். எழுத்து அழுத்தல் அச்சுப் பதித்தல் (Letter Press Printing) முறையில் உருவான முதல் புத்தகம் ஜேர்மனிய ஜோஹன்ஸ் குடென்பர்க் அச்சுப்பதித்த 'இலத்தீன் இலக்கணம்' நூலாகம். குடென்கர்க்கின் இரண்டாவது புத்தகம் இலத்தின் பைபிள் ஆகும். இலங்கையில் முதல் புத்தகம் 41 பக்கங்கள் கொண்ட லன்தேசி எனும் புத்தகம்.



உரு 2.10 - **லத்தீன் பைபிள்**



உரு 2.11 - **வஜ்ர சூத்திரம்**



உரு 2.12 - **சிங்கள மகாவம்சம்**

## 2.2.2 பத்திரிகை

பொது மக்கள் விரும்பிப் பார்க்கும் செய்தி, விளம்பரங்கள், கருத்துக்கள் மற்றும் வேறு விடயங்கள் உள்ளடக்கி தினசரி மற்றும் வாராந்தம் வெளியாகும் அச்சு ஊடகமே பத்திரிகை ஆகும் என ஒக்ஸ்போட் அகராதி குறிப்பிடுகிறது. இலங்கை பத்திரிகை சட்டத்தின் பிரகாரம் ''பொதுவான செய்தி, கேள்வியுற்ற சம்பவம் ஆகியவற்றை உள்ளடக்கி அச்சு பதிந்து வெளியாகும் விடயம் **'பத்திரிகை'** '' என வரைவிலக்கணப்படுத்தப்படுகிறது.

அச்சுக்கலையின் மூலம் உலகிற்குக் கிடைத்த பெறுமதிவாய்ந்த ஊடகமாக பத்திரிகையைக் கருத முடியும். வானொலி செய்திகளை துரிதமாக முன்வைத்தாலும் தொலைக்காட்சி அச்செய்திகளுக்குரிய காட்சிகளை ஒளிபரப்பினாலும், அச்செய்திகளை விபரமாக அறிவதற்கு நம்பகரமான ஊடகமாகப் பத்திரிகைகளே திகழ்கின்றன. பத்திரிகைகளின் வாழ்நாள் பொதுவாக மிகக்குறுகியதாகும். காலையில் கிடைக்கும் பத்திரிகையின் பெறுமதி மாலையாகும்போது இல்லாமற்போகிறது. இதற்குக் காரணம், செய்திகள் பழமையாகும்போது, புதிய செய்திகள் அவ்விடத்தைப் பிடித்துக் கொள்வதாகும்.

புராதன காலத்தில் ரோமாபுரியின் Acta Diurna எனும் பொதுசன அறிவிப்பே பத்திரிகை ஊடகத்தின் ஆரம்பமாகும். மேற்கு உலக நாடுகள் அச்சுப்பதித்தலில் கண்ட அபிவிருத்தி அங்கு பத்திரிகைகள் தோற்றம் பெற உதவியது. ஜேர்மனியில் 'Avrizo Relation Oder Zeitung"இங்கிலாந்தில்'' Weekly News' பிரான்சின் 'La Gasette' அமெரிக்காவின் 'Public Occureunces Both Foreign and Domestic' போன்ற பத்திரிக்கைகள் இவ்வகையில் முன்னோடிகள் ஆகும். முற்காலத்தில் அமெரிக்கா மற்றும் இங்கிலாந்தின் பத்திரிக்கையில் பிரதான நோக்கம் விளம்பரங்களும் நகரங்களில் வாழும் மக்களுக்கான அறிவிப்புக்களைத் தருவதுமேயாகும்.

இலங்கையின் முதல் ஆங்கில பத்திரிக்கை ''கொழும்பு ஜேர்னல்'' ஆகும். சிங்களப் பத்திரிகை ''லங்கா லோகய'' பதிவு செய்யப்பட்ட முதல் சிங்கள பத்திரிகை ''லக்மினிமான'' ஆகும். இலங்கையின் முதல் தமிழ் பத்திரிகை ''உதய தாரகை '' ஆகும்.



**உரு 2.13 - எவ்ரிசோ ரிலேசன் சைடங்**



**உரு 2.14 - கொழும்பு ஜேர்னல்**



**உரு 2.15 - தினமின**

## 2.2.3 சஞ்சிகை

சஞ்சிகை என்பது ஒரு குழுவினரால் ஏதாவது தேவையின் பொருட்டு குறிப்பிட்ட காலத்தில் பொதுத் தலைப்பில் சிறு குறிப்புகள் பலவற்றைக் கொண்டு பலரதும் ஆக்கங்களை உள்ளடக்கி வெளிப்படுத்தப்படும் இதழ் என பெயர் பெறுகிறது.

இது வாராந்தம், மாதாந்தம், காலாண்டு, அரையாண்டு, வருடாந்தம் என வெவ்வேறு காலப்பகுதியில் வெளியிடப்படலாம். அதே போல் விஞ்ஞானம், கலை, விவசாயம், வணிகம், சமூகம், பொருளாதாரம், அரசறிவியல், பண்பாடு, சமயம், பொழுதுபோக்கு, விளையாட்டு, கல்வி என ஏதாவதொரு தலைப்பின் கீழ் வெளியிடப்படலாம்.

இச்சஞ்சிகை தொடர்பான கட்டுரைகளைப் பெற்றுக்கொள்ளல், தரமானவற்றைத் தெரிவுசெய்தல், அனுமதி பெற்றுக்கொள்ளல், அதனை வெளியிடுவதற்கான செயற்பாடுகளை மேற்கொள்வது என்பன பதிப்பாளர்கள் சார்ந்த செயற்பாடுகளாகும்.

எந்தவொரு குழுவுக்கும் அல்லது நிறுவனத்துக்கும் தமது நோக்கத்தை வெளிப்படுத்துவதற்கு, விளம்பரப்படுத்துவதற்கு, தமது முகவர்கள் மேற்கொள்கின்ற நடவடிக்கைகளை தெளிவுபடுத்துவதற்கு சஞ்சிகைகளைப் பயன்படுத்த முடியும். பத்திரிகை நிறுவனங்களுக்கு இவ்வாறு சஞ்சிகைகளை வெளியிடவும் பயன்படுத்த முடியும். பத்திரிகை நிறுவனங்களுக்கு இவ்வாறு சஞ்சிகை வெளியிடுவது மிகவும் இலகுவான காரியமாகும்.

எமது நாட்டில் செய்திப் பத்திரிகைகளுக்கு இணையாக சஞ்சிகைகள் தொழிற்படுகின்றன. சஞ்சிகைகள் களஞ்சியப்படுத்தி அறிவை பெற்றுக்கொள்ளக் கூடிய முக்கிய இயல்பை கொண்டுள்ளமை குறிப்பிடத்தக்கதாகும்.

**உலகின் முதற் சஞ்சிகை 17ம் நூற்றாண்டின் நடுப்பகுதியில் வெளியிடப் பட்டுள்ளது. இது இங்கிலாந்தில் அச்சிடப்பட்டுள்ளது. இலங்கையின் முதல் சிங்கள சஞ்சிகை ''மாசிக தெக்க'' எனும் கிறிஸ்தவ சமய விடயங்களை உள்ளடக்கிய சஞ்சிகையாகும்.**




உரு 2.16 - **உலக சஞ்சிகைகள் சில**

## 2.2.4 சுவரொட்டி




உரு 2.17 - **சுவரொட்டி**

ஏதாவது தகவல் தொடர்பாக குறித்த ஒரு தொகுதியினருக்கு தெளிவுபடுத்துவதற்கு, மக்களின் கவன ஈர்ப்பை பெறும் இடங்களில் காட்சிப்படுத்துகின்ற அறிவிப்பே சுவரொட்டி ஆகும். வியாபாரம், அரசியல், சமூகம் போன்ற தகவல்களை உரிய தரப்பினருக்குத் தெரிவிக்கின்ற ஊடகமாக சுவரொட்டி பயன்படுத்தப்படலாம்.

முழுமையான பிரச்சாரங்களை மேற்கொள்ளவும் சுவரொட்டிகள் பயன்படுத்தப்படலாம். மக்கள் அதிகம் கூடும் இடங்களில் காட்சிப்படுத்தப்படுத்துவதன் மூலம் சுவரொட்டியின் பயன்பாடு வெற்றிகரமாக அமையும். இலகுவாக வாசிக்கக்கூடிய வகையில் தோற்றம் அமைந்திருத்தல், சரியான வர்ணப் பயன்பாடு, எளிமையான மொழிநடை, கடதாசி, பொலித்தீன்,

தகரம் என எந்த ஊடகங்களிலும் தயாரிக்க முடியுமாயிருத்தல் சுவரொட்டிகளின் சிறப்பியல்புகளாகும்.

அச்சுப்பதித்தலின் தொடக்கம் முதல் இன்று வரை சுவரொட்டிகளைத் தயாரிக்க அச்சுப்பதித்தல், அழுத்தல், அச்சு முறை, தட்டச்சு முறை, டிஜிடல் எனப் பல்வேறு முறைகள் கையாளப்பட்டுள்ளன. அச்சிடல் முறை மற்றும் பயன்படுத்தப்படும் மூலப்பொருள்கள் என்பனவற்றுக்கு ஏற்ப சுவரொட்டிகளை தயாரிக்கும் செலவீனமும் வேறுபடுகின்றது.

அனுமதிக்கப்பட்ட இடங்களில் மாத்திரம் சுவரொட்டிகளைக் காட்சிப் படுத்துவதன் ஊடாக சூழல் மாசடைதலை தடுக்க முடியும். அதேபோல் விசேட பண்டிகைகள் மற்றும் விளம்பர நடவடிக்கைகளால் உருவாகும் போட்டித் தன்மையையும் இவ்வாறான வரையறுத்த பாவனை மூலம் குறைத்துக்கொள்ள முடியும்.

### 2.2.5 துண்டுப்பிரசுரம்




துண்டுப்பிரசுரம் என்பது ஏதாவது தகவல் ஒன்றை ஒவ்வொரு தனிநபருக்கும் தனித்தனியாக நேரடியாக விநியோகிக்கின்ற விடயமாகும். ஏல விற்பனை, பல்வேறு விழாக்கள், திறப்புவிழா என்பன ஒவ்வொருவருக்கும் தனித்தனியே தெரிவிக்கக்கூடிய செய்திகள் ஆகும். சன நெருக்கடி மிக்க சந்தை மற்றும் நகர மக்கள் கூடும் இடங்களில் துண்டுப் பிரசுரங்கள் விநியோகிக்கப்படலாம்.

சிலவேளைகளில் பத்திரிகைகள் வழியேயும் துண்டுப்பிரசுரம் விநியோகிக்கப்படுவதுண்டு. மேலும் துண்டுப்பிரசுரங்களில் காணப்படுகின்ற தொலைபேசி இலக்கத்தின் ஊடாக பொதுமக்கள் சேவைகளையும் பெற்றுக்கொள்ள முடியும்.

துண்டுப்பிரசுரங்கள் வழியாக தகவல்கள் சுவையாகவும், சுருக்கமாகவும், இலகு மொழியிலும் முன்வைக்கப்படும். துண்டுப்பிரசுரங்கள் பெரும்பாலும் கணினிவழி அச்சுப்பதித்தலில் மேற்கொள்ளப்படும்.

பல்பொருள் அங்காடிகள், வங்கிகள் போன்றவற்றில் மக்கள், தாமாகவே எடுத்துக் கொள்ளும் வண்ணம் துண்டுப்பிரசுரங்கள் பொருத்தமான இடங்களில் காட்சிக்கு வைக்கப்படுவதும் உண்டு. துண்டுப்பிரசுரங்களை விநியோகிக்கும்போது, அவற்றை எழுந்தமானமாக வீசியெறிந்து விநியோகித்து குறித்த நிறுவனத்தின் நன்மதிப்புக்குப் பங்கமேற்படுத்தாமல், சரியான மக்கள் தொகுதியினருக்கு அவற்றை விநியோகிப்பதே சாலச்சிறந்ததாகும்.

## 2.3 பத்திரிகையின் உள்ளடக்கம் அறிமுகம்

பொதுமக்கள் தமக்கான தகவல்களைப் பெற்றுக்கொள்ளும் ஊடகங்களில் பத்திரிகை முதலிடம் வகிக்கின்றது. பொருள்களின் விலை, புதிய பொருள்களின் வருகை, அவற்றின் தரம் போன்ற விடயங்களே பத்திரிகைகள் மூலம் ஆரம்பத்தில் தெரிவிக்கப்பட்டன. எனினும், பிரெஞ்சுப் புரட்சிக்குப் பின்னர் அரசியல் கருத்துக்களையும் செய்திகளையும் தரும் ஊடகமாக பத்திரிகைகள் மாறின.

வானொலி, தொலைக்காட்சி போன்ற இலத்திரனியல் ஊடகங்களின் வருகையாலும் பத்திரிகைகளின் முக்கியத்துவம் குறைந்துவிடவில்லை.

பத்திரிகைகள், அவற்றை வெளியிடுவோரின் கருத்துக்களை முன்வைப்பதோடு, தகவலளித்தல், கல்வியூட்டுதல் போன்ற செயற்பாடுகளையும் தகுந்தவாறு முன்னெடுக்கின்றன. இயற்கைச் சூழலில் ஏற்படக்கூடிய அனர்த்தங்கள் போன்ற சமயங்களில் அவை தகுந்த ஆலோசனைகளையும் மக்களுக்குத் தருகின்றன. பத்திரிகைகள் சமூகத்தின் சக்தியாகவும் விளங்குகின்றன; அவை சமூகத்தில் சட்டத்தையும் நீதியையும் நிலைநாட்டவும் உதவுகின்றன.

### 2.3.1. பத்திரிகை வகைப்படுத்தல்

பத்திரிகை வெகுசன ஊடகமாகும். புராதன, இடைக்காலம், நவீன யுகத்தில் எவ்வகையான சம்பவங்களையும் அறிந்துக்கொள்ள பத்திரிகை பயன்படுத்தப்படுகிறது. வேறுபட்ட சமூக, பொருளாதார, அரசியல் தொழிநுட்பச் செய்திகள் தெரிவிப்பது பத்திரிகை ஊடகமாகும். அவை பின்வரும் இயல்புகளின் அடிப்படையில் வகைப்படுத்தப்படும்.

(அ) அளவு (Size)
(ஆ) வெளிவரும் காலம் (Term)
(இ) விடயம் (Subject)
(ஈ) வாசிப்பவர் (Reader)

### (அ) அளவு (Size)

பத்திரிகைகளின் வேறுபட்ட இலக்குகளையும், இயல்புகளையும், தேவைகளையும் பொறுத்தே அவற்றின் அளவு தீர்மானிக்கப்படும். அதன் வகைகள் வருமாறு.

(i) ***புரோட் சீட்*** (Broadsheet)
(ii) ***டப்லொய்ட்*** (Tabloid)

## (i) புரோட் சீட் (Broadsheet)


வீரகேசரி

VIRAKESARI

20ஆவது திருத்தத்துக்கு அமைச்சரவை அனுமதி

உரு 2.19

நீளமான தாள் வடிவிலான பத்திரிகை புரோட்சீட் பத்திரிகையாக அறிமுகப்படுத்தப்படுகின்றது. இதுவே வழமையான பத்திரிகை அளவாகும். தேசியமட்ட மற்றும் பெருமளவு வாசகர்களை இவ்வடிவ பத்திரிகைகள் கொண்டிருக்கும். இலங்கையில் தினமும் மற்றும் வாராந்தம் வெளியாகும் ஆங்கிலம், தமிழ், சிங்கள தேசியப் பத்திரிகை அனைத்தும் புரோட்சீட் பத்திரிகைகளாகும்.

## (ii) டப்லொய்ட் (Tabloid)


Daily மெட்ரோ News

METRO

நாமல் ராஜபக்ஷவுக்கு சி.ஐ.டி. அழைப்பாணை

உரு 2.20

புரோட்சீட்டுடன் ஒப்பிடுகையில் அளவு சிறிதாக காணப்படுமாயின் அது டப்லொய்ட்டாகும். இங்கு படங்கள் பாரியளவில் பயன்படுத்தப்பட்டிருக்கும். இரசனை, கலை நிர்மாணம், பொழுதுபோக்கு, குற்றங்கள் குறித்த தகவல் என்பவற்றை வெளிப்படுத்துவது இவ்வடிவிலான பத்திரிகைளின் பொது இயல்பாகும். பெண்கள், சிறுவர், இளைஞர் பத்திரிகை என்பன வெளியாகுவது பெரும்பாலும் **Tabloid** ஊடாகும். இவ்வாறான விசேட, இலக்குக்கொண்ட வாசகர் களுக்கான பத்திரிகைகளுடன், வாரஇறுதித் தேசிய பத்திரிகைகளின் விசேட இணைப்புக்களும் டப்லொய்ட் அளவில் வெளிவருகின்றன. இவ்வாறான டப்லொய்ட் பத்திரிகைகள் வாசிக்க இலகுவானதாகவும், வித்தியாசமான வடிவமைப்புடனும் வாசகர்களால் விரும்பப்படுவனவாகவும் அமைந்துள்ளன.

இலங்கை அரசு பங்குதாரராக இருக்கும் ஏரிக்கரை (லேக்ஹவுஸ்) பத்திரிகைகள் புரோட் சீட் பத்திரிகைகள் ஆகும். இது முழு டிமெயின் சீட் அளவாக இருக்கும். சரசவிய, தருணி, மிகிரி, வானவில் போன்றன டப்லொயிட் பத்திரிகைகளுக்கு உதாரணங்களாகும்.

இது மட்டமல்லாது பேலினர் (Berliner), கொம்பெக்ட் (Compact), ஆகிய வடிவிலான பத்திரிகைகளும் உலகில் சில நாடுகளில் விசேடமாக ஐரோப்பிய நாடுகளில் காணப்படுகின்றன.

| புரோட்சீட் | டப்லொய்ட் |
| --- | --- |
| ★ வடிவத்தில் நீளமான பத்திரிகை<br>★ தேசிய பொதுத்தன்மை சார்ந்ததாகும்.<br>★ வலுவான வெகுசன ஊடகம்<br>★ தீர்மானிக்கப்பட்ட வகையில் அமையும். | ★ ஒப்பிட்டளவில் குறுகியது.<br>★ இலகு செய்திகள் காணப்படும்.<br>★ பொழுதுபோக்கான விடயங்கள் காணப்படும்.<br>★ தேவைக்கேற்ற வகையில் அமையும். |

### (ஆ) **வெளிவரும் காலம்** (Term)

சில பத்திரிகைகள் வெளியாகுவது நிர்ணயிக்கப்பட்ட கால வரையறையிலாகும். எந்தவொரு பத்திரிகைக்கும் அச்சிடல் காலம் தீர்மானிக்கப்பட்டதாகவே இருக்கும்.

1. நாளாந்தம் காலையில்
2. நாளாந்தம் மாலையில்
3. வார இறுதி
4. வாராந்தம்
5. இரு வாரம்
6. மாதாந்தம்
7. வருடாந்தம் என இவற்றை வகைப்படுத்தலாம்.

### (இ) **விடயம்** (Subject)

பொருளாதாரம், அரசியல் என்பவற்றைவிட சமயம் சார்ந்த பத்திரிகைகளே ஆரம்பத்தில் அதிகம் உருவாகின. இலங்கையில் வெளியான பத்திரிகைகளில், 'கனொட் பிரதிபய' கிறிஸ்தவ சமயம் பற்றிய தெளிவூட்டும் எண்ணத்துடன் வெளியானது. பின்னர், பௌத்த மற்றும் இந்து சமயங்களை முன்னிறுத்தியும் பத்திரிகைகள் வெளிவந்தன.

இலங்கையின் முதல் அரசியற் கட்சியான இலங்கை சமசமாஜக் கட்சி உருவான பின்னர், அரசியற் கட்சிகள் சார்ந்தும் பத்திரிகைகள் உருவாகத் தொடங்கின.

பத்திரிகைகள் - விவரணம், கவிதை, மொழி ஆகியவற்றில் நிபுணத்துவம் பெறவும் வழிவகுத்தன. இவ்வகையில் கல்விசார் நடவடிக்கைகளிலும் பத்திரிகைகளின் பணிகள் தொடர்கின்றன. விஞ்ஞானம், கணிதம், வணிகவியல், புவியியல், சுகாதாரம், சுற்றாடல் என பாடசாலைப் பாடவிதானங்களை விளக்கவும் விரிவாகச் செ ால்லித்தரவும் பல்வேறு கட்டுரைகள் பத்திரிகைகளில் இடம்பெறுகின்றன. புலமைப் பரிசில் பரீட்சை, க.பொ.த.(சா/த), உயர்தரம் போன்ற பரீட்சைகளை மாணவர்களுக் கென விசேட பகுதிகளை வெளியிடுகின்றன.

தேசிய மற்றும் சர்வதேச விளையாட்டுக்கள் பற்றிய செய்திகள் உள்நாட்டில் பிரபலமடையவும் பத்திரிகைகள் வழிவகுக்கின்றன. விளையாட்டு ஊடாக சமாதானம், ஒற்றுமை, சகோதரத்துவம் உருவாவதில் பத்திரிகைகளுக்கும் கணிசமான பங்குண்டு.

நாடகம், சினிமா போன்ற கலைத்துறைகளுக்கும் பத்திரிகை பெரும்பங்காற்றி யுள்ளது.மேலும் தற்போது பொழுதுபோக்கு நோக்கத்திற்காக குறுக்கெழுத்துப் போட்டிகள் போன்றவையும் பிரசுரிக்கப்படுவதையும் கவனத்திற்கொள்ளலாம்.

'குடும்பம்' 'வாழ்க்கை' போன்ற தலைப்புக்களில் வெளியாகும் பத்திரிகைப் பகுதிகள் பெண்கள் மத்தியில் மிகவும் பிரபல்யமானவை. படங்களின் மூலம் கதைகூறுகின்ற ''சித்திர கதை'' பத்திரிகைகள் 30-40 வருடங்களுக்கு முன்பிருந்தே மிகவும் பிரபல்யம் பெற்று விளங்குகின்றன. இது தொலைக்காட்சி நாடகம் பார்ப்பது போல் ஓர் இரச னையை வழங்குகின்றது.

## (ஈ) வாசிப்பவர் (Reader)

சமூகத்தில் மிகவும் அவதானத்துடன், மிக வேலைப்பழுவுடன் பணி செய்கின்ற நபர்களை நோக்காக கொண்டும் பத்திரிகைகள் காணப்படுகின்றன. பெண்கள் பத்திரிகை, சிறுவர் பத்திரிகை, இளைஞர் பத்திரிகை, ஊழியர் பத்திரிகை என அவற்றை வகைப்படுத்த முடியும்.

| விடயத்திற்கேற்றவாறு பத்திரிகை வகைகள் | | | |
|---|---|---|---|
| **பெண்கள் பத்திரிகை** | **சிறுவர் பத்திரிகை** | **இளைஞர் பத்திரிகை** | **தொழிலாளர்** |
| பெண் உரிமை<br>பெண்கள் சிக்கல்<br>வீட்டு பொருளாதாரம்<br>............................<br>............................<br>............................<br>............................ | சித்திரம் வரைதல்<br>வர்ணம் தீட்டுதல்<br>வேறுபட்ட பாடம்<br>பொழுது போக்கு<br>விளையாட்டு<br>............................<br>............................<br>............................<br>............................ | புதிய கதை<br>சிறுகதை<br>இளைஞர் பிரச்சினை<br>இளைஞர் முரண்பாடு<br>............................<br>............................<br>............................<br>............................ | தொழில் சட்டம்<br>தொழிலாளர் முரண்பாடு<br>தொழில்நுட்பம்<br>தொழிலாளர் வழக்கு<br>தொழிலாளர் உரிமை<br>நிறுவன துஷ்பிரயோகம்<br>தொழில் நிறுவன நடத்தை<br>............................<br>............................<br>............................<br>............................ |

குறித்த தொகுதியினருக்கு ஏற்ற வகையில் வெளியாகும் பத்திரிகைகள் அவ்வவ் தொகுதியினர் இடையில் மிகவும் பிரபல்யம் அடைந்துள்ளன என்பது குறிப்பிடத்தக்கது. இதனால், பெரும்பாலும் பொதுவான தளங்களில் வெளியாகும் பத்திரிகைகள் பல்வேறு தொகுதியினரும் தமது பத்திரிகையைப் பார்க்கத் தூண்டும் வண்ணம் சீட்டிழுப்பு முடிவுகள், விழாக்கள் பற்றிய தகவல்கள், மருத்துவச் செய்திகள் எனப் பல்வேறு விடயங்களையும் உள்ளடக்க முனைகின்றன.

## வாசகனுக்கு ஏற்ப பத்திரிகையில் காணப்படும் விசேடம் / தன்மைகள்

★ பணம் கொடுத்து பெறுமிடத்து உரிமையான உணர்வுபெற.

★ குறித்த தகவல் குறித்த தொகுதியினருக்குச் சென்றடைதல்.

★ குறித்த வாசகர் தொகுதி குறித்த பத்திரிகைக்காக உருவாதல்.

★ பத்திரிகையோடு இணைந்த செயற்பாடுகள் உருவாதல் (கருத்தரங்கு, கண்காட்சி)

★ குறித்த தொகுதியினருக்கு ஏற்ற வகையில் சில செய்திகள் வெளியாதல்.

### 2.3.2 பத்திரிகையில் உள்ளடங்குபவை

***பத்திரிகை உள்ளடக்கம் என்றால் என்ன?***

பத்திரிகையில் உள்ளடங்கும் விடயங்கள் ஒவ்வொன்றும் தனித்தன்மைகள் வாய்ந்ததாகும். அவையாவன.

★ செய்தி
★ ஆசிரியர் தலையங்கம்
★ சிறப்புக் கட்டுரைகள்
★ கேலிச் சித்திரம்
★ விடயக் கட்டுரைகள்
★ புகைப்படக் கட்டுரைகள்
★ விளம்பரங்கள்

## செய்தி

காலத்திற்கேற்ப வேறுபடுத்தி அறியக்கூடிய வகையில் பொதுமக்களுக்கு பொருந்தக்கூடிய மிகவும் நெருங்கிய தொடர்பாடல் ஊடக நிகழ்ச்சியாக குறிப்பிடக் கூடிய விடயம் செய்தியாகும். சமூகம், பொருளாதாரம், அரசியல் போன்ற விடயங்களை உள்ளடக்கி மேற்கொள்ளப்படுகின்ற விடயமாகச் செய்தி காணப்படுகின்றது. செய்தியில் காணப்படுகின்ற விடயம் பெறுமதி வாய்ந்ததாக காணப்படவேண்டும். செய்தியானது தலைப்புச் செய்தி ஊடாக வெளிப்படுத்தப்படும். முதற் பக்கத்தில் மிகவும் விசேடமான பிரபல செய்திகள் வெளியிடப்படும். அது பத்திரிகை மொழியில் (Hard News) வன்செய்திகள் என அறிமுகப்படுத்தப்படும்.

## ஆசிரியர் தலையங்கம்

பத்திரிகையின் பிரதம ஆசிரியர் எழுதுகின்ற பத்திரிகை சார்ந்த செய்திகள் தொடர்பான பார்வையும் நிலைப்பாடும் ஆசிரியர் தலையங்கமாக அமையும். சமூகத்தில், அரசியலில், பொருளாதாரத்தில், பண்பாட்டில் நிகழும் தாக்கங்களும் ஆசிரியர் தலையங்கத்தில் விவாதிக்கப்படுவதுண்டு. இங்கு எழுதப்படும் கருத்துக்கள் பிரதம ஆசிரியரது சுயவெளிப்பாடாக அமைவதோடு, சில சமயங்களில் ஆசிரியர் குழுவினரதும் திரட்டுக் கருத்தாகவும் அமையமுடியும்.

## சிறப்புக் கட்டுரைகள்

சிறப்புக் கட்டுரை என்பது இயற்கை, சூழல், அபிவிருத்தி, பொருளாதாரம், பொழுதுபோக்கு, புதிய கண்டுபிடிப்புகள் போன்ற எத்துறைகள் சார்ந்த கட்டுரையாகவும் அமையும்.

சிறப்புக் கட்டுரை அசாதாரண அல்லது விசேட தகவல்களைப் பெற்றுக்கொள்ள கூடியதாக அமையும். வாசிப்பவருக்கு ஏற்ற வகையில் எதிர்பார்ப்புக்களை நிறைவேற்றும் வகையில் இக்கட்டுரை முறை அமைந்திருக்கும். இங்கு, உரையாடல், வர்ணனை என்பனவும் இடம்பெறும். அவ்வவ் விடயங்களுக்கு ஏற்ப முறைகள் தெரிவாகும். இக்கட்டுரை வாசிப்பவரைத் தூண்டுவதாக மொழிநடை காணப்படுவதோடு செய்தி போன்று பொதுத்தன்மையும் காணப்படும்.

## கேலிச் சித்திரங்கள்

கேலிச்சித்திரங்கள் முக்கியமான தகவல்களை படைப்பாக்கவழியில் (Creative) தருவனவாக அமைந்திருக்கும். காலத்தின் முக்கிய நிகழ்வு, முதல்நாள் இடம்பெற்ற முக்கியசெய்தி போன்றன கேலிச்சித்திரங்களின் கருப்பொருட்களாக முடியும். கேலிச் சித்திரங்கள் அங்கதச் சுவை மிகுந்ததாக இருப்பது குறிப்பிடத்தக்கதாகும்.

## விடயக் கட்டுரைகள்

விடயக் கட்டுரை என்பது ஒரு விடயம் தொடர்பாக தகவல் வெளிப்படுத்தல் ஆகும். முற்காலத்தில் பத்திரிகைகளில் வெற்றிடங்கள் நிரப்புவதற்கு விடயக் கட்டுரைகள் பயன்படுத்தப்படும். ஆனால் இன்று அதற்கான தனியான இடங்கள் ஒதுக்கப்படுகின்றன.

நிகழ்காலத்தில் கிடைக்கின்ற அனுபவம் மற்றும் சமூக எதிர்பார்ப்பு என்பவற்றுக்கு ஏற்ப தகவல்கள் விடயக்கட்டுரையில் இடம்பெறுவது முக்கிய மானதாகும்.

## புகைப்படக் கட்டுரைகள்

வார்த்தைகளால் வர்ணிக்க முடியாத விடயங்களைப் புகைப்படம் ஊடாக செய்தியாக்கும் முறை இதுவாகும். இங்கு புகைப்படத்தோடு அதனைச் சொல்லும் விளக்கம் எழுத்துவடிவில் சேரும் போது செய்தியைப் புரிந்து கொள்வது மேலும் இலகுவாகும்.

### விளம்பரங்கள்

பத்திரிகை நிறுவனங்கள் வருமானம் சம்பாதிக்கும் வணிக நோக்கோடு விளம்பரங்களை நாடுகின்றன. ஊழியருக்கான சம்பளம், நாளாந்தச் செலவு, புதுப்பித்தல் போன்ற செலவுகளைக் கையாளும் பொருட்டு இலாபநோக்கோடு வணிக பகுதி என ஒதுக்கப்பட்டு விளம்பரங்கள் பிரசுரிக்கப்படுகின்றன. இதனால் முக்கிய கட்டுரைகள் விடுபடுவதும் உண்டு.

## 2.3.3 பத்திரிகையின் பொதுவான தன்மையின் விசேடத்துவத்தை அறிதல்

**காலத்திற்கேற்ப உள்ளடக்கம் வேறுபடல்**

காலமாற்றங்களுக்கு ஏற்பவும், ஒவ்வொரு காலத்தில் முக்கியமாக நோக்கப்படும் விடயங்களை முன்வைப்பது தொடர்பிலும் பத்திரிகையின் உள்ளடக்கம் வேறுபடலாம். உதாரணமாக, தேர்தல் காலத்தில் அரசியல் பேச்சுக்கள் சம்பந்தப்பட்ட செய்திகள் முன்னுரிமை பெறும் அதேவேளை, இயற்கை அனர்த்தம் நிகழும் காலப்பகுதியில் அதுதொடர்பான செய்திகள் முன்னுரிமை பெற, அரசியல் செய்திகள் தற்காலிகமாக முன்னுரிமை இழந்துவிடும்.

**அச்சுக்கலை வேறுபாடுகள்**

வெவ்வேறு விடயங்களையும் கவன ஈர்ப்பையும் முன்வைத்து வெவ்வேறு எழுத்து வகைகள், எழுத்துக்களின் அளவு, வர்ணம் என்பன மாறுபடும். பிரதான தலைப்புச்செய்தி வாசகர்களின் கண்களை அதிகம் ஈர்ப்பதாக, மிகவும் பெரிய எழுத்துக்களில் கருமை அல்லது பிரகாசமான வர்ணங்களுடன் தோற்றம் தரும்.

**படைப்பாக்க ரீதியான ஆக்கங்களின் பயன்பாடு**

படைப்பாக்கவழியே, ஆக்கபூர்வமான புதிய எண்ணங்களுடன் விடயங்கள் முன்வைக்கப்படுவது பத்திரிகைகளில் சாத்தியமானது. சில தகவல்களை உள்ளது உள்ளவாறாக கூறுவதிலும் பார்க்க, அவற்றை புத்தாக்கச் சிந்தனைகளின் வழி பத்திரிகைகளில் இடம்பெறச் செய்யும்போது அவை வாசகர்களிடம் உருவாக்கும் தாக்கம் அதிகமானதாக அமையும். உதாரணமாக, கேலிச்சித்திரங்கள் வழியாக முன்வைக்கப்படும் தகவல்களை இங்கு குறிப்பிடலாம்.

இங்கு, குறியீடுகள் மற்றும் சங்கேதங்கள் வழியாக இரசனைபூர்வமான முறையில் செய்திகள் வாசகர்களைச் சென்றடையும்.

அதேபோன்று, சமூக, பொருளாதார, அரசியல் விடயங்களைப் பேசப்புகும் பத்திரிகையாளர்கள் படைப்பாக்கவழியில் அவற்றை முன்வைப்பார்களாயின் அது வரவேற்கத்தக்கதாகும்.

- ★ சமுதாயத்தில் சக்திமிக்க அல்லது வலுவான செல்வாக்குள்ள பெரிய மனிதர்கள் பற்றிய நியாயபூர்வமான விமர்சனங்கள்
- ★ பிரச்சனைக்குரிய விடயங்கள்
- ★ சட்டச் சிக்கல்களில் உள்ள, மக்கள் நிச்சயம் அறிந்திருக்க வேண்டிய தகவல்கள்
- ★ சமூகத்திற்கு அவசியமான ஆனால் நேரடியாகச் சொல்வதில் சவால்களைச் சந்திக்கும் விடயங்கள்.

போன்றவற்றை படைப்பாக்கவழியில் வெளிப்படுத்த முனைவது, பத்திரிகையாளர் களுக்குப் பாதுகாப்பைத் தருவதோடு, அவ்வாறான விடயங்களை சமூகத்திற்கு உரியவாறு கொண்டும் சென்றுவிடும்.

### உள்ளடக்கத்திற்குப் பொருத்தமான புகைப்படப் பயன்பாடு

பத்திரிகையின் எழுத்து வடிவம் (Text) குறிப்பிடுவதற்கு ஏற்றாற் போல புகைப்படங்கள் முன்வைக்கப்படுவது சிறந்ததாகும். எழுத்து, சொல், தலைப்பு எனும் பகுதிகள் எழுத்துவடிவங்களாகவும் படம் மற்றும் புகைப்படம், கேலிச்சித்திரம் என்பன காட்சி வடிவங்களாகவும் அமைகின்றன.

பத்திரிகையில் எழுத்துக்களும், படங்களும் அவை ஒன்றுக்கொன்று இசைந்தனவாகவும் பொருத்தமானவையாகவும் அமைதல் வேண்டும். வாசகர்களின் ஈர்ப்பைப் பெறும் விதத்திலும், அவர்களின் கண்பார்வைக்கு இடைஞ்சல்கள் தராதவையாகவும் புகைப்படங்கள் பக்கவடிவமைப்பில் இணைக்கப்படவேண்டும்.

பந்திகளும், புகைப்படங்களும் பொருத்தமான சதவிகித அமைப்பில் பயன்படுத்தப்படுவது வாசகர்களின் இரசனையை மேலும் அதிகரிக்கும். பொருத்தமான புகைப்படங்களைத் தெரிவு செய்வதும் இங்கு முக்கியமானது. உதாரணமாக, உலகிற்கான அச்சுறுத்தல் என்பது பற்றிய விசேட கட்டுரையொன்றுக்கு இயற்கை மற்றும் சூழலின் அழகு ஆகிய படங்களுடன் விளைவினைக் காட்டும் உலகு மாசடையும் வழிகள் பற்றிய புகைப்படங்களும் இணைக்கப்படலாம்.

அதேபோன்று, அரசியல் விமர்சனப் பகுதிகளில் அங்கு விவாதிக்கப்படும் கருத்துக்களுக்கு வலுச்சேர்ப்பதாக கேலிச்சித்திரங்கள் பயன்படுத்தப்படலாம்.

## இலத்திரனியல் பத்திரிகை (Electronic news paper/ e - news paper)

பத்திரிகையின் நவீன வடிவம் இலத்திரனியல் பத்திரிகை ஆகும். இணையத்தின் ஊடாக செய்தி, படங்கள், வீடியோக்கள் என்பவற்றைத் தகவல் பதிவிறக்கம் (Download) செய்து இலத்திரனியல் கோவை ஊடாக அபிவிருத்தி செய்து அதனைத் தற்காலப்படுத்தி (update) இணையத்தில் பத்திரிகைக்கு அனுப்புதல் நடைபெறுகின்றது. அது வலைத்தளம் (website) ஆக பொதுத்தன்மை ஏற்படுத்தல் இடம்பெறுகின்றது. இலத்திரனியல் பத்திரிகை அச்சிடல் பத்திரிகையிலிருந்து வேறு படுகின்றது. இலத்திரனியல் பத்திரிகையில் பந்தி அமைப்பு படங்கள் உள்ளடங்குகின்றது. கணினி தொழில்நுட்பத்தின் வளர்ச்சி, நவீன ஊடகமாக இணையத்தை ஏற்றுக் கொள்ளும் தன்மையில் அதிகரிப்பு, தகவல் பக்கச்சார்பின்மை இலத்திரனியல் பத்திரிகையின் வளர்ச்சிக்கு காரணமாயிற்று. தொழிநுட்ப வளர்ச்சி காரணமாக செய்திகள் களஞ்சியப்படுத்திக் கொள்வதற்கு இம்முறை இலகுவானதாகும்.

இவ்வாறு பாவணையாளர்கள் இணையத்தின் ஊடாக இருவகையான பத்திரிகைகளைப் பயன்படுத்துகின்றனர்.

(1) அச்சிடப்பட்ட பத்திரிகையின் இலத்திரனியல் பிரதி (e-paper)

அச்சிடுவதற்காகத் தயாரிக்கப்படும் பத்திரிகையினை இலத்திரனியல் வடிவிற்கு மாற்றி இணையத்தில் தரவேற்றம் செய்வது இங்கு நிகழ்கிறது. இதன் மூலமாக, பததிரிகையானது அதிகளவிலான வாசகர்களைச் சென்றடைகிறது. வெளிநாட்டிலிருக்கும் இலங்கையர்கள் கூட தம் நாட்டுப் பத்திரிகையினை அதேவடிவில் வாசிக்கக்கூடிய வசதி இதன் மூலம் கிடைக்கிறது.

(2) இணையத்தில் மாத்திரம் வெளியாகும் இலத்திரனியல் பத்திரிகை (online edition)

இலத்திரனியல் பத்திரிகைச் செயற்பாட்டின் பிரபல்யமான வளர்ச்சி இதுவாகும். இங்கு முக்கியமான செய்திகள் வலைத்தளத்தின் முதற்பக்கத்தில் இருப்பதோடு தேவையேற்படின் வழங்கப்பட்டுள்ள இணைப்பை (link) செயற்படுத்துவதன் மூலமாக மேலதிகத் தகவல்களைப் பெற்றுக் கொள்ளலாம். இவ் இலத்திரனியல் பத்திரிகையினை இயக்குபவர்கள் எந்நேரமும் தகவல்களை தற்காலப்படுத்திக் கொள்வார்.

இலத்திரனியல் பத்திரிகையின் பொதுவான குணவியல்புகள்

★ உடனடியாக செய்தியை தெரிந்துகொள்ளல்.
★ களஞ்சியப்படுத்தக்கூடிய வசதி
★ மீண்டும் மீண்டும் வாசிக்கும் வசதி
★ தகவலுக்கேற்ப வகைப்படுத்தல் இடம்பெறுகிறது.
★ தற்காலப்படுத்தல் (update) வசதி காணப்படல்.
★ உடனடியாக பாவணையாளரின் கருத்தாடல் இடம்பெறும்.

## 2.3.4 பத்திரிகை பயன்பாட்டின் பிரயோகச் செயற்பாடு



உரு 2.21

கலைமகள் வித்தியாலயத்தின் தொடர்பாடல் மற்றும் ஊடகத்துறை மாணவர்கள் நடை முறைச் செயற்பாடு ஒன்றை மேற்கொள்ள அவர்களுக்கு சந்தர்ப்பம் கிட்டியுள்ளது. அச்சிடல் பற்றி கற்கின்ற அவர்களுக்கு நடைமுறை பிரயோகத்தின் ஊடாக அதனைச் செய்து பார்க்க அனுமதி கிடைத்துள்ளது. பாடத்திற்கு பொறுப்பான ஆசிரியரின் முதலாவது பாடவேளை ஆரம்பமானது பாடசாலை அண்மித்த இடங்களில் செய்தி சேகரிக்க மாணவர்கள் குழுக்களாக சென்றனர். வகுப்பறையில் கலந்துரையாடல் செய்த ஆசிரியர் பத்திரிகை உருவாக்குவதற்கான பிரயோகச் செயற்பாட்டை விளக்கினார்.

ஆசிரியர் : நான் நீங்கள் சேகரித்த செய்திகள் சிலவற்றைச் செவி மடுக்க விரும்புகிறேன்.

**மாணவர்கள் ஒன்று சேர்த்த செய்திகள்**

★கலைமகள் வித்தியாலத்திற்கு புதிய கணினி கிடைக்கப்பெறவுள்ளது.

★கலைமகள் வித்தியாலத்திற்கு முன் மஞ்சள் நிற வீதிக் கடவை இல்லை.

★கலைமகள் வித்தியாலயம் கோட்டமட்டத்தில் விளையாட்டில் முதலிடம்.

★கலைமகள் வித்தியாலய மாணவர்கள் பொலித்தீன், பிளாஸ்டிக் என்பவற்றைப் பயன்படுத்துவதில்லை.

★வித்தியாலயத்தின் சுற்றுப்புறச் சுவரில் சித்திரம் வரையப்பட்டுள்ளது.

★கலைமகள் வித்தியாலய மாணவர்கள் அறிவிப்புப் போட்டியில் முதலிடம்.

★குறைபோசணையுள்ள கலைமகள் வித்தியாலய மாணவர்களுக்கு காலை உணவு வேலைத்திட்டம்.

★ கலைமகள் மாணவத்தலைவர்கள் சிரமதான வேலைத்திட்டம்.

ஆசிரியர் : மாணவர்களே நீங்கள் பல்வேறுபட்ட செய்திகளைச் சேகரித்துள்ளீர்கள். எனக்கு சந்தோஷம். ஆசிரியர் குழு இச்செய்திகளைச் சரியான மொழியில் பிரதி செய்யுங்கள்.

### செய்தி எழுதுவோம்

- விடயங்களை விளக்கி தேவையான விடயங்களை கொண்டு சாராம்சம் எழுத வேண்டும்.
- சரியான மொழிநடையைத் தெரிவுசெய்யுங்கள்.
- வாக்கியத்தை ஆரம்பிக்கும் போது இலக்கத்தில் ஆரம்பிக்கூடாது. உ-ம்- 1948 இல் இலங்கை பிரித்தானிய ஆட்சியிலிருந்து சுதந்திரம் பெற்றது.
- காலத்தைக் குறிப்பிட்டு வாக்கியம் ஆரம்பிக்க கூடாது.

உ-ம்- 1. நேற்று கடுவலைப் பிரதேசத்தில் இடம்பெற்ற விபத்தில் 5 பேர் மரணித்தனர்.

2. கடுவல பிரதேசத்தில் நேற்று இடம்பெற்ற விபத்தில் ஐவர் மரணித்தனர். (சரியான வாக்கியம்)

★ என்ன? ஏன்? எங்கே? யார்? எப்போது? எவ்வாறு? என்ற விடயங்களை எடுத்தக் காட்டுவதாக தலைப்பைத் தெரிவு செய்தல் வேண்டும். (W5 and H)

★ நீண்ட வாக்கியத்தை தவிர்க்க வேண்டும்.

★ செய்தியின் அடிப்படை முதல் வாக்கியத்தில் உள்ளடங்கல் வேண்டும்.

★ செய்தியின் முதல் வாக்கியத்தில் செய்தியின் முக்கிய விடயங்கள் குறிப்பிடப்பட வேண்டும்.

★ செய்தியின் முக்கிய அம்சங்கள் முதலில் குறிப்பிடப்பட்டுத் துணை அம்சங்கள் தொடர்ந்து இடம்பெறவுமாக செய்தி அமைப்பு அமைய வேண்டும். (தலைகீழ் பிரமிட் முறை)

பிரேம் : சேர் இச் செய்திகளை கணினி ஊடாக அச்சுப்பதிக்க முடியாதா?

ஆசிரியர் : செய்திகளின் தவறில்லாத மொழிநடையைச் சரிபார்க்க முதலில் கணினி ஊடாக அச்சுப்பதிவு செய்யப்படும்.

பிரேம் : சேர் கணினி ஊடாக அச்சுப்பதிவு செய்யட்டுமா? எனக்கு தட்டச்சு செய்ய முடியும்.

ஆசிரியர் : எவ்வளவு நல்லது.

பிரேம் : தட்டச்சு செய்வதற்கு சிறந்த மென்பொருள் என்ன?

ஆசிரியர் : கணினி வழி தட்டச்சு செய்யக்கூடிய சிங்களம் மற்றும் தமிழ் வழி எழுத்துக்கள் கொண்ட நிறைய மென்பொருள்கள் உள்ளன. அவ்வாறான மென்பொருள்களை பதிவிறக்கம் செய்யவும் முடியும். ஆம் இப்போது நாம் தயாரித்த செய்தியை சரவை பார்ப்பதற்கு ஒரு குழுவைத் தீர்மானிப்போம்.

தீபிகா : சேர் சரவை பார்ப்பதென்றால் என்ன?

ஆசிரியர் : முதலில் தயாரிக்கப்பட்ட பத்திரிகையை சரிபார்ப்பதற்கு அதனை வாசிப்பதற்காக ஒரே தடவையில் இருவரை கொண்டு வாசிக்க செய்தல் வேண்டும். இது சாதாரணமாக பத்திரிகை நிறுவனங்களில் நடைபெறுகின்றது. சில நேரங்களில் கணினி மயப்படுத்தும் போது கையினால் எழுதப்பட்ட பிரதியின் சில பகுதிகள் விடுபட்டிருக்கக்கூடும். அதை மீண்டும் சேர்த்துக் கொள்ளும் செயற்பாடு இதனூடாக இடம் பெறும். மற்றும் மொழிநடை தவறுகளைச் சரிசெய்தலும் இதில் இடம்பெறும்.

கிஷோர் : சேர் நானும் மலிக்கும் சரவை பார்க்கட்டுமா?

ஆசிரியர் : எவ்வளவு நல்ல விடயம். இப்போது எல்லா விடயங்களும் தயாராக உள்ளன. இப்போது செய்தி தயாரிக்கத் தயாராகுவோம்.

சரண்யா : செய்திப் பக்கம் (Page) தயாரிப்பது எவ்வாறு சேர்?

ஆசிரியர் : பத்திரிகை ஊடகத்தில் Adobe Pagemaker எனும் மென்பொருள் பாவனை செய்யப்படுகின்றது அதனைப் பயன்படுத்தி செய்திப் பக்கம் தயாரித்தல் இலகுவானது.

சரண்யா : எனக்குச் சரியாக விளங்கவில்லை சேர்.

ஆசிரியர் : முதன் முதலில் செய்தியின் அளவையும் கடதாசியின் அளவையும் தீர்மானிப்போம். கடதாசி அளவு புரோட்சீட், டப்லொய்ட் என்ற அளவில் A3 இலகுவானதாகும். அதேபோல் ஒவ்வொன்றாக அச்சுப்பதிவு செய்து அதன் தேவையான இடத்தில் இடம்பெற செய்யலாம்.

அனிதா : பத்திரிகைகளை எவ்வாறு வடிவமைப்புச் செய்வது?

ஆசிரியர் : எழுத்துக்களின் அளவு, நிறம், வகை என அதனை மேற்கொள்ள முடியும். அதேபோல் படங்களையும் இணைத்துக் கொள்ளலாம்.

தினேஸ் : சேர் நான் கேலிச் சித்திரம் வரையட்டுமா?

ஆசிரியர் : எவ்வளவு நல்லது? காகிதத்தில் வரையப்படும் கேலிச் சித்திரத்தை ஸ்கான் செய்து பத்திரிகையில் சேர்த்துக்கொள்ள முடியும். வெறுமையான இடங்களுக்கு தேவையானவாறு விடயங்கள் இணைத்துக்கொள்ள முடியும்.

கிஷோர் : எவ்வாறு பத்திரிகைத் தாள்களை ஒன்றிணைப்பது?

ஆசிரியர் : பயம் வேண்டாம். A3 கடதாசிப் பக்கங்களை ஒன்றாக இணைத்து நடுவில் பசையினால் ஒட்டுவோம். (Binding)

கிஷோர் : நல்லது சேர்.

சரண்யா : சேர் இப்போது எனக்கு நிறைய மகிழ்ச்சி. பத்திரிகை செய்தது போல், எவ்வளவு விடயங்கள் செய்ய முடியும்.

ஆசிரியர் : எனக்கும் சந்தோஷம். ஆனால் யாரும் பத்திரிகையின் பெயரைத் தெரிவிக்கவில்லையே.

எல்லோரும்:நாங்கள் எல்லோரும் தீர்மானித்துள்ளோம். ''எமது பாடசாலை'' என்ற பெயர் நல்லது தானே.

ஆசிரியர் : ஆனால் பிள்ளைகளே, பத்திரிகை தொடர்பாக அதிபரிடம் அனுமதி பெறவேண்டும். ஏதாவது பிரச்சினையான செய்திகள் இருக்குமாயின் அவற்றை அதிபர் நிராகரிப்பர். அனைவருக்கும் விடயங்கள் விளங்கியதா?

கிஷோர் : சேர், அதிபர் தான் பொறுப்பானவர். அவ்வகையில் அவர் அனுமதிக்கும் வழியிலேயே பத்திரிகை அமைய முடியும் அல்லவா?

ஆசிரியர் : ஆம். இப்போது உங்களுக்குப் பத்திரிகைச் செயன்முறை விளங்கியதா?

எல்லோரும் : ஆம் சேர்.

**பத்திரிகை உருவாவதற்கான அடிப்படைகள்**

★ தகவல்களை ஒன்று திரட்டல்

★ செய்திகளை வகைப்படுத்தல் - செய்தி/சிறப்பம்சம்

★ செய்திக்கான வாக்கிய அமைப்பு

★ மொழிநடை

★ கணினியில் எழுத்தின் அளவு, வகை தெரிவு

★ பிரதியை வாசித்தல்

★ ஒழுங்குபடுத்தல்

★ மீண்டும் ஒருசில ஒழுங்கமைப்புக்களைச் செய்தல்

★ அதிகாரம் பெற்றவரிடம் அனுமதி பெறல்

★ பத்திரிகை வெளியிடல்

**செயற்பாடு** -1

**தனியாள்**

1. வேறுபட்ட காலங்களில் உலகின் அச்சுமுறைகளை விளக்குக.
2. விடயம் தொடர்பாக பத்திரிகையின் பொதுத்தன்மையை விமர்சிக்க.
3. பத்திரிகையின் உள்ளடக்கம் மற்றும் அதனோடு சம்பந்தப்பட்ட விசேட தன்மைகளை விபரிக்க.

**குழு**

வகுப்பறையில் மாணவர்கள் குழுவாகி பின்வரும் தலைப்புகளில் செய்கைகள் மேற்கொள்க.

1. சிறுவர் சஞ்சிகை
2. பாடசாலை ஊடகப் பிரிவின் வாராந்த சஞ்சிகை
3. உலக ஊடக சுதந்திர தினத்திற்கான துண்டுப்பிரசுரம்.
4. பாடசாலைச் செயற்பாடுகள் தொடர்பான வாராந்தப் பத்திரிகை.

# 03 வானொலி ஊடகம்



## குறிக்கோள்

வானொலி என்பது தொழிநுட்பத்தை அடிப்படையாகக் கொண்ட ஓர் ஊடகமாகும். இருப்பினும் இதன் அடிப்படை முக்கிய அம்சமாக விளங்குவது தனி நபரின் குரல் ஆகும். எனவே இவ்வத்தியாயத்தில் மாணவர்களின் குரல் வளத்தை மிகவும் வினைத்திறன் மிக்கதாகவும் முறை சார்ந்ததாகவும் பயன்படுத்துவதற்கு தேவையான தேர்ச்சியை விருத்தி செய்வது பற்றி விளக்க எதிர்பார்க்கப்படுகிறது. இதனூடாக சிறந்த முறையில் பேசும் ஆற்றல் உருவாகும். எந்த ஒரு நபரினதும் வாழ்க்கையில் தொழில் வெற்றிக்காக இதனை பயன்படுத்த முடியும். மேலும் இப்பாடத்துறையைக் கற்றுக்கொள்வதன் மூலமாக வானொலி ஊடகப் பயிலுநராக பாடசாலை மட்டத்தில் மாணவரை உருவாக்கிட முயல்வதே அடிப்படை விளைவாகும். எமது எதிர்பார்ப்பு யாதெனில், மாணவர்களிடையே தமது குரலைப் பல்வேறு விதமாகப் பயன்படுத்துவதற்கு தேவையான தேர்ச்சிகளை விருத்தி செய்தலும் அதனைக் குழுச்செயற்பாட்டிற்காக பயன்படுத்துவதற்கு தேவையான தேர்ச்சி களை விருத்தி செய்தலுமாகும். மாணவர்களின் முக்கிய கற்றல் செயற்பாடாவது குரலைப் பயன்படுத்தி பல்வேறு நிகழ்ச்சிகளை முன்வைப்பதற்கும் பயிற்சி பெறுதலுமாகும்.

## 3.1 வானொலி ஊடகத்தின் ஆரம்பம்



உரு 3.1

வானொலி வெகுசன ஊடகமாகும். அதன் கருத்து யாதெனில், ஒரு விடயம் ஒரே நேரத்தில் பெரும் அளவிலான நபர்களுக்கு கொண்டு செல்லப்படுகிறது. உதாரணமாக கிரிக்கெட் போட்டி நடைபெறுகின்ற போது அதன் நேரடி ஒலிபரப்பு ஆயிரக் கணக்கான மக்களுக்கு ஒரே நேரத்தில் இடம்பெறுகிறது. அதே போல் வானொலி ஒரு தொழிநுட்ப ஊடகமாகும். சத்தம், குரல், மொழி என்பவற்றை அடிப்படையாகக் கொண்டு வானொலி இயங்குகிறது. நவீன தொழிநுட்பம் எவ்வளவு வளர்ச்சி பெற்றாலும் இன்றும் சில பகுதிகளில் மக்கள் மத்தியில் பிரபல ஊடகமாக வானொலி காணப்படுகின்றது. மிகவும் இலகுவாக நுகரக்கூடியதாக இருப்பதே இதன் காரணமாகும். வானொலி கேட்கும் ஊடகமாக இருப்பதால் வேறு வேலைகளில் ஈடுபட்டுக்கொண்டு வானொலியைச் செவிமடுக்க முடிகின்றது.

### 3.1.1 வானொலி ஊடகத்தின் ஆரம்பம்

நவீன ஊடகங்கள் உருவாகுவதற்கு முன்னர் மனிதன் வெவ்வேறு முறைகளின் மூலம் அயலவர்களிடையே கருத்துப் பரிமாற்றம் செய்து கொண்டான். அதன் பின்னர் சமூகத் தொடர்பு அதிகரித்ததன் காரணமாக தொடர்பாடலும் வளர்ச்சிப் பெற்றது. தொடர்பாடல் தேவைகளுக்காகத் தொழினுட்பத்தைப் பயன்படுத்துவதும் ஆரம்பமாகியது. இந்த வளர்ச்சியின் பேறாக உருவான முதலாவது இலத்திரனியல் வெகுசன ஊடகமாக வானொலி அமைகிறது.

### 3.1.2 வானொலி உருவாவதற்கு அடிப்படையாக அமைந்த கண்டுபிடிப்பு

19 ஆம் நுற்றாண்டில் நிகழ்ந்த வானொலியைக் கண்டுபிடித்தமையானது தொழிநுட்ப வளர்ச்சியைத் தொடர்பாடலுக்காகப் பயன்படுத்த முடியும் என்பதைக் வெளிப்படுத்தும் சான்று ஆகும். வானொலி கண்டுபிடிக்கப்படுவதற்கு அடிப்படையாக அமைந்து மின்னியல் சமிக்ஞைகள் அல்லது இலத்திரனியல் சமிக்ஞைகளை கம்பிகள் மூலமாக அனுப்புதல் என்பது தொடர்பில் சாமுவேல் F.B. மோர்ஸ் மேற்கொண்ட ஆய்வாகும்.


உரு 3.2 - **சாமுவேல் எப்.பி. மோர்ஸ்**

மிகத் தொலைவில் இருப்பவர்களுக்கிடையில் தொடர்புகள் மேற்கொள்வதற்கு மின்காந்த அசைவு விருத்தி உபயோகப்படும். என்பதை மோர்ஸ் கண்டு பிடித்தார். இவ்வாறான சமிக்ஞை முறை மூலம் இலகுவாகத் தகவல்களைப் பரிமாற்றி கொள்ளலாம் என இவர் கண்டுபிடித்தார். இவ்வாறாக **மோர்ஸ் சமிக்ஞை முறை** உலகம் முழுவதும் பரவியது. இதன்மூலம் மிகத்தூரமான, கஷ்ட பிரதேச ங்களுக்கும் இலகுவாகத் தகவல்களை அனுப்புவதற்கு முடிந்தது. இந்த முறை இன்றைய வானொலி வெகுசன தொடர்பாடல் முறையாக பின்னர் விருத்தியடைந்தது.

இவ்வாறு மோர்ஸ் தந்தி மூல முறையானது தொலைபேசி அறிமுகப்படுத்தலால் மேலும் அபிவிருத்தி அடைந்தது. கம்பிகள் வழியாக தகவல் அனுப்பும் முறை தொடர்பாக தொடர்ச்சியாக மேற்கொள்ளப்பட்ட ஆய்வுகளின் பேறாக, கம்பிகள் இல்லாதும் தகவல் அனுப்பும் முறை (Wireless) வளர்ச்சிபெற்றது.


உரு 3.3 - **குக்லியெல்மோ மார்கோணி**

இவ்வாறு கம்பிகள் இல்லாது தகவலனுப்பும் முறையை அறிமுகப் படுத்தியது யார் என குறிப்பாக இனம் காண முடியாதுள்ளது. ஏனெனில் பல்வேறு நாடுகளில் பல்வேறு நபர்கள் பல்வேறு பங்களிப்புகளை இவ் வளர்ச்சிக்கு பங்களிப்பு வழங்கி யுள்ளமையால் குறித்த ஒருவரை இனங்காண முடியாதுள்ளது. ஆனால் கம்பிகள் இல்லாமல் முதன் முதல் தகவலை அனுப்பியவர் இத்தாலி நாட்டை சேர்ந்த குக்லியெல்மோ மார்கோணி என்பதே ஆய்வுலகில் ஏற்றுக்கொள்ளப்பட்டுள்ளது.

அம்முறையானது வயர்லெஸ் டெலிகிராபி என அறிமுகம் செய்யப்பட்டது. அவர் அவ்வாறு தகவலை அனுப்பியது மோர்ஸ் கண்டுபிடித்த முறை மூலமாகும். முதலாவதாக அத்திலாந்திக் கண்டத்தின் ஊடாக ஆங்கில 'S' என்ற எழுத்தைக் கொண்டு தந்தி ஊடாக தகவல் அனுப்புபவரால் பரீட்சார்த்த தகவல் ஒன்று தந்தி மூலம் அனுப்பப்பட்டது.

மிக நீண்ட காலமாக இம்முறை வானிலை அறிக்கை, ஆயுதப்படையினருக்கு தகவல் வழங்குதல் முதலானவற்றிற்குப் பயன்படுத்தப்பட்டது. அத்திலாந்திக் சமுத்திரத்தில்

விபத்துக்கு உள்ளான 'டைட்டானிக் கப்பல்' பற்றிய தகவல்களை இம்முறை மூலம் வழங்கியதால் பல பயணிகளின் உயிர்கள் காப்பாற்றப்பட்டமையானது இம்முறையில் குறிப்பிடத்தக்க ஓர் அம்சமாகும். இதேபோல முதலாம் உலகப்போர், இரண்டாம் உலகப்போர் காலத்தில் நட்பு நாடுகளுக்கிடையில் தகவலை பரிமாற்றிக்கொள்ள இந்த கம்பிகள் இல்லாத முறை பயன்படுத்தப்பட்டது.

கைத்தொழிற் புரட்சிக்குப் பின்னர் உலகமயமாதல் காரணமாக கைத்தொழிலில் ஈடுபட்டவர்கள், கமக்காரர்கள் என்போர் தமது தொழில் வழங்குநருடனும் பண்ணை உரிமையாளர்களுடனும் தொடர்பு கொள்ளவும் கம்பிகளற்ற தகவல் அனுப்பும் முறையைப் பயன்படுத்திக் கொண்டனர்.

உதாரணமாக, பொலிவியா நாட்டில் சுரங்கமறுத்தல் தொழிலில் ஈடுபட்ட தொழிலாளர்கள் இந்த வழிமுறையைப் பயன்படுத்தியதாக அறியமுடிகிறது.

எனினும், அக்காலப் பகுதிகளில் சமிக்ஞைகள் மற்றும் எழுத்துக் குறிப்புகள் ஆகியனவே பரிமாற்றிக் கொள்ளப்பட்டன. மனிதர்களின் குரல் அல்லது வேறு விசைகளைக் கடத்துதல் தொடர்பான எந்தவொரு கண்டுபிடிப்பும் அப்போது நிகழ்ந்திருக்கவில்லை. பின்னரே இது சாத்தியமாயிற்று.

### 3.1.3 வானொலி ஊடகத்தின் வளர்ச்சி

இதன் பின் இம்முறையில் குரல், சத்தம் என்பன பயன்படுத்தப்பட்டன. இதன்போது 1916 **இல் முதன் முதல் வானொலி ஒலிபரப்பு செய்யப்பட்டது.** பின் நிரந்தர ஒலிபரப்புகள் உருவாகின. முற்காலத்தில் வானொலியானது உலக அதிசயம் என போற்றப்பட்டது.



உரு 3.4

அக்காலத்தில் வானொலி அளவில் மிகப் பெரிதாக இருந்தது. 1950 வரை பாவனை செய்யப் பட்ட வானொலியானது தற்போது நாம் பாவிக்கும் டிரான்சிஸ்டருடன் ஒப்பிடும்போது இதன் வேறுபாட்டை அறிந்து கொள்ள முடியும்.

★ வால்வுக்கு பதிலாக பாவிக்கப்பட்ட டிரான்சிஸ்டர் முறையினால் வானொலி மிகச் சிறிதாக உற்பத்தி செய்யப்பட்டது. மேலும் குறைந்த விலைக்கு அதனைக் கொள்வனவு செய்யக்கூடியதாக இருந்தது.

★ இன்று வானொலி உலகமெங்கும் பயன்படுத்தப்படுவதோடு, அது மிக இலாப கரமான வெகுசன ஊடகமாகவும் அமைந்துள்ளது.

★ கையடக்கத் தொலைபேசியில் கூட வானொலிச் சேவை உள்ளடக்கப்பட்டுள்ளது.

### 3.1.4 இலங்கையில் வானொலி ஊடகத்தின் தோற்றம்

இலங்கையை பிரித்தானியர் ஆட்சிசெய்த போது பிரித்தானியரால் அறிமுகப்படுத் தப்பட்ட வானொலிச் சேவையே இலங்கையின் முதன் முதல் பயன்படுத் தப்பட்ட வானொலிச் சேவை ஆகும்.

பொறியியலாளர் பதவியை வகித்து வந்த ***"எட்வேர்ட் ஹாபர்"*** என்பவர் இலங்கையில் வானொலிச் சேவையை நிறுவியவர் என வரலாறு கூறுகிறது. அவருடைய உதவியோடு உருவாக்கப்பட்ட வயர்லஸ் கழகம் மற்றும் இலங்கை தொழில்சார் தகைமையற்றோர் (அமெச்சூர்) வானொலிச் சங்கம் ஆகியன இலங்கையில் வானொலிச் சேவையை ஆரம்பித்தன.



உரு 3.5 - **எட்வேர்ட் ஹாபர்**

வானொலிச் சேவைக்காக உருவாக்கப்பட்ட இந்த இரண்டு குழுக்களின் பரிந்துரையின் பேரில் 1924 ஜூன் 24இல் வானொலிச் சங்கம் சட்டரீதியாக உருவாக்கப்பட்டது.

கொழும்பு கிறிஸ்தவ வாலிபர் சங்க YMCA மண்டத்தி லிருந்து இலங்கை பொறியியலாளர் சங்கத்தின் வருடாந்த பொதுக் கூட்டத்திற்கு வானொலிச் சேவையூடாக ஒலிபரப்பு நடந்தமை வரலாற்றில் இடம்பெற்றுள்ளது.

★ ஹாபரின் உதவியுடன் உருவாகிய இலங்கை வயர்லஸ் சமூகம் மற்றும் இலங்கை ஆமெச்சூர் வானொலிச் சமூகம் என்பன இணைந்து வானொலியை ஆரம்பிக்க முன்னின்று உழைத்தன.

★ ஆளுநர் சேர். வில்லியம் ஹென்றி அவர்களின் உரையாடல் வானொலிச் சங்கத்தினால் ஒலிபரப்பப்பட்டது. இதன் மூலம் வானொலி நிகழ்ச்சிகளில் குறிப்பிடத்தக்க அபிவிருத்தி ஏற்பட்டது.

★ இங்கிலாந்து அரசினால் வழங்கப்பட்ட புதிய உபகரணங்களின் உதவியோடு 1925 **டிசம்பர்** 16 ம் திகதி **ஆளுநர் சேர். ஹியூகிளிப்ட்** அவர்களால் இலங்கையில் உத்தியோகபூர்வமாக வானொலிச்சேவை ஆரம்பிக்கப்பட்டது. இதுவே **முதன் முதலில் ஆசியாவில் உருவாக்கப்பட்ட வானொலிச் சேவையாக** கருதப் படுகிறது.

★ இது பிரித்தானிய அரசினால் எமது நாட்டுக்கு கிடைத்த மிகப்பெரிய வரப்பிரசா தமாகும்.

### 3.1.5 இலங்கை வானொலி ஆரம்பம்

- 1926 தேசிய சேவை நிகழ்ச்சி இலங்கைக் கலைஞர்களால் உருவாக்கப்பட்டது.
- 1927 குறு நாடகம், விளையாட்டு நிகழ்ச்சி என்பன ஒலிபரப்பாகின. 1927 முதல் சிங்கள நேரலை இசை நிகழ்ச்சி ஒலிபரப்பப்பட்டது.

- 1930 இல் மேலும் வானொலி ஒலிபரப்புக் கருவிகள் நவீனமயப்படுத்தப்பட்டதன் மூலம் வானொலிச் சேவை மேலும் அபிவிருத்தி அடைந்தது.
- 1946 இல் டொரிங்டன் சதுக்கத்தில் புதிய வானொலிச் சேவை நிலையம் உருவாக்கப்பட்டது.
- 1949 **அக்டோபர்** 05ம் **திகதி வானொலிச் சேவைக்காக அரச கூட்டுத்தாபனம் அரசினால் உருவாக்கப்பட்டது.** இது இலங்கை வானொலி வரலாற்றில் முக்கிய நிகழ்வாகும்.
- அதில் முதல் இயக்குனர் பதவியை வகித்தவர் **ஜோன். என். லெம்சன்** ஆவார்.

இக்காலத்தில் பல்வேறு நிகழ்ச்சிகள் இடம்பெற்றதோடு வானொலிச் சேவை **''ரேடியோ சிலோன்'' (Radio Ceylon)** எனப் பெயர் பெற்றது.

1950 களில் சிங்களம், தமிழ், ஆங்கிலம் ஆகிய மும்மொழிகளில் வானொலிச் சேவை இடம்பெற்றதோடு, விளம்பர சேவைகள் ஆரம்பிக்கப்பட்டு ஒலிபரப்பாகும் விளம்பரங்களுக்கு கட்டணமும் அறவிடப்பட்டது.



உரு 3.6 - **ரி. எம். கொலம்பகே**

1972 இலங்கை வானொலிச் சேவையானது சிறிலங்கா வானொலிச் சேவை என பெயர்பெற்றது.

வானொலிச் சேவையின் முதல் சிங்கள அறிவிப்பாளர் ரி. எம். கொலம்பகே ஆவார்.

### 3.1.6 பிரதேச மற்றும் தனியார் வானொலிச் சேவைகளின் ஆரம்பம்




உரு 3.7 - **இலங்கை ஒலிபரப்புக் கூட்டுத்தாபனம்**

- பிரதான ஒலிபரப்பு சேவைக்குப் புறம்பாக பிரதேச ஒலிபரப்பு சேவை உருவானது. இதில் **முதல் பிரதேச சேவையாக ''ரஜரட்ட சேவை''** 1979 **ஏப்ரல்** 12 **ல் ஆரம்பிக்கப்பட்டது.**
- இரண்டாவது பிரதேச சேவை 1980 பெப்ரவரி 3ல் **''ருஹுணு சேவை''** எனும் பெயரில் ஆரம்பிக்கப் பட்டது.
- 1981 அக்டோபர் 01 ல் மகாவலி ஒலிபரப்புச் சேவை ஆரம்பிக்கப்பட்டது. 1981 ஆகஸ்ட் 26 ல் ஆரம்பிக்கப் பட்ட FM stereo சேவை இன்னுமொரு மிக முக்கிய நிகழ்வாகும்.

- மூன்றாவது பிரதேச சேவையாக 1983 ஏப்ரல் 13ல் ஆரம்பிக்கப்பட்ட 'கண்டி சேவை' அமைகின்றது.
- பத்தாண்டு கழிந்த பின் City FM சேவை ஆரம்பமானது.
- 1990 களில் தனியார் ஒலிபரப்பு சேவை ஆரம்பிக்க அனுமதி வழங்கப்பட்டது. FM 99 என்ற பெயரில் தனியார் ஒலிபரப்புச் சேவை ஆரம்பிக்கப்பட்டது.
- 1993ல் T.N.L தனியார் ஒலிபரப்புச் சேவை ஆரம்பிக்கப்பட்டது.
- 1994 சிரச FM தனியார் ஒலிபரப்புச் சேவை ஆரம்பிக்கப்பட்டது. இதில் ஒலிபரப்பப் பட்ட நிகழ்ச்சிகள் அதன் ரசிகர்களுக்கு மிக விருப்பமான நிகழ்ச்சிகளாக உருவாகின. இது இலங்கை வானொலிச் சேவையில் மிக முக்கிய விடயமாகும்.

### 3.1.7 வானொலியின் புதிய போக்குகள்




உரு 3.8 - **இலங்கையிலுள்ள வானொலி சேவை நிலையங்கள்**

வானொலியின் வளர்ச்சியோடு அதன் பொருளியல் இலக்குகளிலும் பண்பு களிலும் குறிப்பிடத்தக்க மாற்றங்கள் ஏற்பட்டன. அதனால் செவிமடுக்கும் வானொலி விரும்பி கேட்கும் ஊடகமாக மாறியது. சிலர் மாத்திரமே செவிமடுத்த வானொலி பலரால் செவிமடுக்கும் நிலை உருவாகியது. இதனால் வானொலி மொழிப் பிரயோகம் மற்றும் நிகழ்ச்சிகளின் தரம் என்பன புதிய மாற்றங்களுக்கு ஆளாகின. தனியாரின் பாரிய அளவு மூலதனம் வானொலி ஊடகத்தில் முதலிடப்பட்டதன் ஊடாக இலாப நோக்கமும் அதன் இலக்குகளில் ஒன்றாக மாறியது.

இன்று அரசாங்க வானொலிச் சேவைகளுக்குச் சமாந்தரமாக தனியார் வானொலி ஊடகங்களின் எண்ணிக்கையும் இலங்கையில் அதிகரித்துள்ளது.

இணைய வளர்ச்சியின் ஒரு கட்டமாக இணைய வழியிலான வானொலி ஒலிபரப்புக்கள் (Web Radio) இன்று பிரபலமடைந்து வருகின்றது. ஒரு சிலரின் கைகளில் ஏகபோகமாக இருந்த வானொலிச் சேவை, பல தரப்பட்ட மக்களினாலும் இயக்கக்கூடிய ஊடகமாக இன்று மாறியுள்ளமைக்கு இணையவழி வானொலி ஒலிபரப்புக்கள் வழி சமைத்துள்ளன.




உரு 3.9 - **இணைய வானொலி** (Web Radio) **இலச்சினைகள்**

### 3.1.8 வானாலி ஊடகத்தின் இயல்புகள்

தரம் 11ல் கல்வி கற்கும் ரோஹினி மற்றும் தரம் 9ல் கல்வி கற்கும் அவளது தம்பி கௌதம் மற்றும் அவர்களது பாட்டி இடையே நடந்த உரையாடலின் ஒரு பகுதி வருமாறு.

ரோஹினி : தம்பி, தற்போது நீங்கள் வானொலியில் சமயச் சொற்பொழிவு கேட்டுக் கொண்டிருக்கிறீர்களா? நாம் போக வேண்டும், எமது நண்பர்கள் காத்திருப் பார்கள்.

கௌதம் : அக்கா இன்னும் சிறிது நேரத்தில் போவோமே.

பாட்டி : மகள், தம்பி இன்னும் சிறிது நேரம் சமயச் சொற்பொழிவைக் கேட்கட்டுமே.

ரோஹினி : சரிதான் பாட்டி, ஆனால் எனது நண்பர்கள் எனக்காகக் காத்துக் கொண்டிருப்பார்களே. ஹரிஷின் பிறந்தநாள் கொண்டாட்டம் நடைபெற இருக்கின்றது. அதற்குச் செல்லத் தாமதமாகும், அதனால் செல்ல வேண்டும். எனக்குத் தனியாக போக முடியும். ஆனால், அம்மாவுக்கும் அப்பாவுக்கும் விருப்பம் இல்லையே! சரி தம்பி வாகனத்தில் போகும் போது தம்பியை சமயச் சொற்பொழிவு கேட்கச் செய்கின்றேன்.

(ரோஹினி மற்றும் கௌதம் வாகனத்தில் செல்லும்போது வானொலியில் சமயச் சொற்பொழிவைக் கேட்டனர்.)

சாரதி : இப்போது உலகம் எவ்வளவு முன்னேற்றம் அடைந்துள்ளது? வீட்டில், வாகனத்தில் எல்லா இடங்களிலும் எமக்குத் தேவை யானவாறு வானொலியைச் செவிமடுக்க முடிகின்றது.

ரோஹினி : அதுதான் உண்மை.... இருங்கள் சமயச் சொற்பொழிவின் தொடர்ச்சியை ஹரிஷின் வீடு சென்றதும் அவனது தொலை பேசியை பெற்று கேட்போம்.

கௌதம் : ஆம், அக்கா, இந்த சமயச் சொற்பொழிவை எமது நண்பர்கள் கேட்டாலும் நல்லது தானே? ஆனால் எப்படி கையடக்கத் தொலைபேசியில் வானொலிச் சேவையை பெற்றுக்கொள்வது பிறந்த தினக்கொண்டாட்டம் நடைபெறுகின்ற இடத்தில் முடியுமா?

ரோஹினி : தம்பி வானொலி என்பது **மிக இலகுவாக இயங்கக்கூடிய ஊடகம். அதனை எந்தவொரு இடத்திற்கும் எடுத்துச் செல்லலாம். அதேபோல் எந்தவொரு இடத்திலும் செவிமடுக்கலாம்.**

சாரதி : வானொலியை எவரும் இயக்க முடியும். அதேபோல் கையடக்கத் தொலைபேசியிலும் வானொலி சேவை அதிலுள்ள பிரயோகங் களில் (Applications) ஒன்றாக இயங்க முடியும்.

ரோஹினி : அதைத்தான் சாரதி மாமா எனது தொடர்பாடலும் ஊடகக் கற்கையும் பாட ஆசிரியர் கூறினார், வானொலி என்பது மிகவும் செலவு குறைந்த, இலகுவாக இயக்கக்கூடிய, எவரும் காவிச்செல்லக்கூடிய வெகுசன ஊடகம் என்றார் எனது ஆசிரியர்.

கௌதம் : இந்த சமயச் சொற்பொழிவு எனக்காகத் தயாரித்தது போல் இருக்கின்றது. தொலைக்காட்சி பார்ப்பது போன்று அல்ல. எனக்கு இந்த சொற்பொழிவைக் கேட்கும் போது ஆறுமுக நாவலர் காலத்தில் இடம்பெற்ற விடயங்களைக் **கண்முன்கொண்டு வந்தது போல்** இருந்தது.

ரோஹினி : சரி.... சரி..... தம்பி அதுதான் **வானொலியின் விசேட இயல்பு**. அதனைச் செவிமடுக்கின்ற ஆயிரக்கணக்கான ரசிகர்களுக்கும் தமக்கு விடுகின்ற செய்தியாக விளங்குகின்றது. அதுமட்டு மல்லாது கற்பனை அல்லது படைப்பாக்க ஊடகமாகவும் அது விளங்குகின்றது.

கௌதம் : கற்பனை அல்லது படைப்பாக்க ஊடகம் என்பது என்ன அக்கா?

ரோஹினி : அதாவது வானொலி ஒலி மற்றும் வாக்கியம் என்பனவற்றை எமக்கு காட்சி வழியாக கற்பனாவாக்கம் செய்யத் துணையாகும் வண்ணம் எல்லா விடயங்களையும் தருவதாகும்.

வானொலி என்பது விசாலமான, பாவனையாளர்களுக்கு தகவல் பெற்றுத்தரும் பிரபல ஊடகம். ஒலியின் ஊடாக அதிக அளவு அறிவை தரக்கூடிய இலாபம் மிக்க ஊடகமாகும்.






வானொலிச் சேவை செவிப்புலத் தொடர்பு சாதனமாகும். இது குரல் ஒலியின் அடிப்படையாக அமைந்துள்ளது.

1. மனிதன் குரல் ஓசை
2. இசை
3. ஏனைய சத்தங்கள் → **இயற்கையான சத்தம்** / **உருவாக்கப்பட்ட சத்தம்**

ஒலியினால் உருவான தயாரிப்புக்களை இவ்வாறு வகைப்படுத்தலாம்.

### 3.1.9 வானாலியின் தன்மைகள்

- **வானொலி ஓர் நேரடி ஊடகம்**

அத்தியாவசிய வெகுசன ஊடகம் எனும்போது வானொலியானது அதிக அறிவு தரும் தெளிவூட்டும் தொடர்பு சாதனமாகும். ஒரே நேரத்தில் பாரிய அளவிலான மக்களுக்குத் தகவல் தரும் ஊடகமாகும். தனியாளைமையப்படுத்திய ஊடகமாக அமைவதோடு, செவிமடுக்கும் அனைவருக்கும் நிகழ்ச்சியை அல்லது செய்தியை கிரகிக்க கூடிய திறனைத் தருகிறது. மேலும் கற்பனையோடு கூடிய கிரகித்தலை தரக்கூடிய முறையுமாகும்.

- **வானொலி பேசுதலும் கேட்டலும் சம நேரத்தில் நிகழ்த்தும் ஊடகம்**

இது அதிவேகத்தில் இயங்குவதால் ஒலிபரப்புக் கூட்டுதாபனத்தில் அறிவித்த உடனேயே அனைவருக்கும் அச்செய்தி பரவ, செவிமடுக்க உதவுகிறது.

- **வானொலி நிகழ்ச்சியை புரிந்துகொள்ள விஷேட திறமைகள் தேவையில்லை**

வானொலி நிகழ்ச்சிகளை செவிமடுப்பதற்கோ, வாசிப்பதற்கோ அல்லது எழுதுவதற்கோ திறமைகள் தேவைப்படாது.

- **வானொலி புவியியல் வரையறையைக் கொண்டிருக்கவில்லை**

வானொலியை செவிமடுப்பவர் நாட்டில் எப்பாகத்தில் வசித்தாலும், கிராமம் அல்லது நகரம் அல்லது வெளிநாடுகளில் இருந்தாலும் ஒரே செய்தியை அனைவராலும் செவிமடுக்க முடியும்.

- **வானொலி குறைந்த செலவு கொண்ட ஊடகமாகும்**

நவீன ஊடகங்களோடு ஒப்பிடுகையில் வானொலி மிகவும் செலவு குறைந்த ஊடகமாகும். வானொலியை கொள்வனவு செய்யும் போதும் மற்றும் அதன் சேவையைப் பெறுகின்ற போதும் அது ஏனைய இலத்திரனியல் ஊடகங்களுடன் ஒப்பிடும்போது மிகக் குறைந்த செலவையே ஏற்படுத்தும்.

- **வானொலி இடம் நகர்த்தக்கூடிய ஊடகமாகும்**

வானொலி ஓர் இடத்திலிருந்து இன்னுமொரு இடத்திற்கு நகர்த்தக்கூடிய (mobile) ஊடகமாகும். பிரச்சினையான நிலைமைகளில் அவ்வவ் இடங்களிலிருந்து கூட இலகுவாக விசேட வானொலி நிகழ்ச்சிகளைக் கேட்க முடியும். பத்திரிகை மற்றும் தொலைக்காட்சி இவ்வாறான இலகுத்தன்மை கொண்டதாக காணப்படாது. இவ்வாறான பிரபலதன்மைகள் பல கொண்ட ஊடகமாக வானொலி காணப்படுகின்றது. எனினும், வானொலி ஊடகத்திலும் சில வரையறைகளும் காணப்படுகின்றன.

## 3.1.10 வானொலியின் வரையறைகள்

- **வானொலி ஊடகம் ஒலியை மட்டும் அடிப்படையாகக் கொண்ட ஊடகம்**

ஏனைய ஊடகங்கள் போல் காட்சிகள் இங்கு தென்படாமல் வெறுமனே ஒலியை மாத்திரம் வானொலி அடிப்படையாகக் கொண்டுள்ளது.

- **வானாலி ஒருமுறை மாத்திரமே செவிமடுக்க முடியும்**

ஒலிபரப்பாகும் நிகழ்ச்சிகளை ஒரு முறை மாத்திரமே செவிமடுக்க முடியும் (மறுஒலிபரப்பு இல்லாத சந்தர்ப்பம்). ஆனால், பத்திரிகை மற்றும் துண்டுப் பிரசுரம் போன்றவற்றை மீண்டும் மீண்டும் பயன்படுத்த முடியும்.

- **செவிமடுப்போரின் கவனம் திசை திரும்பக்கூடிய நிலைகள் வானொலியில் அதிகம்**

வானொலி நிகழ்ச்சிகள் கேட்பவரின் இரசனையைத் தூண்டாதபோது மற்றும் அதன் சேவை சரியான முறையில் கேட்கமுடியாத போது அவர்களின் கவனம் திசை திருப்பப்படும். ஆனால் பத்திரிகையில் வெவ்வேறு பக்கங்களை பார்த்து தேவையில்லாதவற்றை தவிர்க்கமுடியும். அதேபோல் தொலைக்காட்சி நிகழ்ச்சிகள் இரசனைக்கு உகந்ததாக இல்லாதபோது பார்வையாளர்கள் வர்ணமயமான சலனப்படங்களை மாத்திரம் தமது பார்வைக்கு விருந்தாக்கிக் கொள்வர்.

- **ஆழமான கருத்துக்களை வானொலி ஊடாகப் பெறமுடியாது**

வானொலி ஊடகத்தின் வழியே மிகவும் ஆழமான கருத்துக்களை இலகுவில் புரிந்து கொள்ளமுடியாத நிலை ஏற்படும். புகைப்படங்கள், அட்டவணைகள் மூலம் மேலதிகமான விளக்கங்களைத் தரமுடியாமையே இதற்குக் காரணமாகும்.

## 3.2 வானொலி நிகழ்ச்சி வகைகள்

வானொலி நிகழ்சிகளில் அவற்றை முன்வைக்கின்ற முறை அவற்றில் எடுத்தாளப்படுகின்ற கருத்துக்கள் என்பவற்றின் அடிப்படையில் நிகழ்ச்சிகள் பலவகைப்படும். கலந்துரையாடல், பாடல், கவிதை, சிறுகதை, புத்தாக்கம், நாடகம், உரை எனப் பல்வேறு வழிமுறைகளில் இந்த முன்வைப்பு இடம் பெறலாம்.

தரம் 11 C வகுப்பறை

(ஹரிணி, பவித்ரா, ஜனனி, அஷ்வின் ஆகிய சிறுவர்கள்)

(வானொலி நிகழ்ச்சியொன்றினைச் செவிமடுத்து விமர்சனம் செய்வதற்கான ஒப்படை ஒன்று மாணவருக்கு வழங்கப்பட்டிருந்தது.)

ஆசிரியை : வணக்கம் சிறுவர்களே! நான் கொடுத்த வீட்டு வேலைகளைச் செய்தீர்களா? இரண்டு நாள் விடுமுறை என்பதால் நன்றாகக் கல்வி கற்று இருப்பீர்கள் என நம்புகிறேன்.

ஹரிணி : ஆம், ஆசிரியர். நான் சனிக்கிழமை, ஞாயிற்றுக்கிழமை இரண்டு நாட்களும் வானொலி நிகழ்ச்சிகளைச் செவிமடுத்தேன். சனி மாலை 2.00 தொடக்கம் 4.00 மணி வரை எனக்குப் பயனுள்ள நிகழ்ச்சியாகவிருந்தது. தேசிய உணவு ஒரு நாட்டுக்கு எவ்வகையில் முக்கியத்துவம் பெறுகிறது மற்றும் ஆயுர்வேத மருத்துவம் பற்றிய நிகழ்ச்சிகள் அப்போது ஒலிபரப்பானது.

ஆசிரியை : அந்த நிகழ்ச்சி ஒலிபரப்பானது பற்றியும் தொகுத்து வழங்கியது பற்றியும் என்ன நினைக்கிறீர்கள்?

ஹரிணி : அது கலந்துரையாடல் நிகழ்ச்சியாக அமைந்தது மிகவும் தெளிவாகவும், இலகுவான முறையிலும் தொகுத்து வழங்கப் பட்டது. இடைவேளைகளில் பாடல் ஒலிபரப்பானது. மேலும் மணிச் செய்திகளும் ஒலிபரப்பாகின.

ஜனனி : நானும் அவ்வாறான நிகழ்ச்சியைச் செவிமடுத்தேன் ஒரு மணித் தியாலத்தில் நிறைய விடயங்கள் ஒலிபரப்பாகின. ஆனால் என்னால் எவ்வித கருத்துக்களையும் கிரகித்துக்கொள்ள முடிய வில்லை.

அஷ்வின் : எனக்கும் சரியான முறையில் நிகழ்ச்சிகளைச் செவிமடுக்க முடியவில்லை.

ஆசிரியை : ஏன் இரண்டு நாட்கள் இருந்ததுதானே அஷ்வின்?

அஷ்வின் : நான் வானொலி நிகழ்ச்சியை செவிமடுக்க முயன்றவேளைகளில் எல்லாம் எந்நேரமும் தொகுப்பாளர் கதைத்துக் கொண்டிருந்தார். செய்தி வேறு அடிக்கடி ஒலிபரப்பப்பட்டது. விளம்பரங்கள் மற்றும் பாடல்களும் ஒலிபரப்பாகின.

பவித்ரா : ஆனால் ஆசிரியரே, நான் நல்ல நிகழ்ச்சி ஒன்றைச் செவிமடுத்தேன். மேலும் எதிர்வரும் ஞாயிற்றுக்கிழமை நிகழ்ச்சியின் மிகுதிப் பகுதியையும் செவிமடுக்கவுள்ளேன்.

ஆசிரியை : என்ன நிகழ்ச்சியை செவிமடுத்தீர்கள் பவித்ரா?

பவித்ரா : அது ஓர் விவரண நிகழ்ச்சியாகும். அது மிகவும் பிரயோசனமாகத் தொகுத்து வழங்கப்பட்ட நிகழ்ச்சியாகும். எமது பழைமையான பண்பாட்டைப் பற்றியதாகும். தொகுப்பாளருடன் கருத்துப் பரிமாற மேலும் சிலர் வருகை தந்தனர். மேலும் அது நேரலை நிகழ்ச்சி என்பதால் தொலைபேசி உரையாடலும் இடம்பெற்றது.

ஆசிரியை : இப்போது உங்களுக்குப் புரிகிறதா? வானொலியில் பல்வேறுபட்ட நிகழ்ச்சிகள் ஒலிபரப்பாகும். சில நிகழ்ச்சிகள் கேட்க எமக்கு ஆசையைத் தூண்டுகின்றன. வானொலி நிகழ்ச்சிகள் பல்வகைப்பட்டவை. இப்போது அவற்றைப் பார்ப்போம்.

வானொலியில் ஒலிபரப்பாகும் நிகழ்ச்சிகள் என்ற வகையில் பின்வருமாறு அவற்றை வகைப்படுத்தலாம்

★ செய்தி நிகழ்ச்சிகள்
★ சஞ்சிகை நிகழ்ச்சிகள்
★ நாடக நிகழ்ச்சிகள்
★ இசை நிகழ்ச்சிகள்
★ நேரலை நிகழ்ச்சிகள்
★ கலந்துரையாடல் நிகழ்ச்சிகள்
★ விவரண நிகழ்ச்சிகள்
★ போட்டி நிகழ்ச்சிகள்
★ விளையாட்டு நிகழ்ச்சிகள்
★ சிறுவர் நிகழ்ச்சிகள்

*வானொலி ஊடகத்தில் நிகழ்ச்சிகள் முன்வைக்கப்படும் முறைகள்*



உரு 3.10

1. *கதை* (Talk)
2. *நேர்காணல்* (Interviews)
3. *கலந்துரையாடல்* (Discussion)
4. *உரையாடல்* (Dialogue)
5. *விவரணம்* (Documentary)
6. *சித்தரிப்பு* (Features)
7. *சஞ்சிகை நிகழ்ச்சிகள்* (Magazines)
8. *வானொலி நாடகம்* (Radio Drama)
9. *நேரடி வர்ணனை* (Running Commentary)
10. *நேரடி காட்சி ஆவணம்* (Eye Witness Accounts)
11. *அறிவிப்பு* (Announcement)
12. *வினாவிடை* (Quiz)
13. *தொலைபேசி உரையாடல்* (Telephone Conversations)
14. *செய்தி* (News)
15. *இசை நிகழ்ச்சி* (Music)

*வானொலி நிகழ்ச்சிகள் நேரலையாகவோ பதிவு செய்யப்பட்டோ ஒலிபரப்பாகலாம்.*

## 1. **கதை** (Talk)

*தனி ஒரு நபரால் தொகுத்து, கதையாக வழங்கப்படுகின்ற இந்த முறையே, பெரும்பாலும் வானொலிச் செவிமடுப்பில் விருப்பமானதொன்றாகும். ஆனால் தொலைக்காட்சி போன்று காட்சிப்புலம் இல்லாததால் குறிப்பிடத்தக்கோர் இதனை விரும்புவதுமில்லை. அவ்வாறானவர்களுக்கு இம்முறை மூலம் கேட்டு, தன்னுள் ஞாபகத்தில் இருத்திக் கொள்வது கடினமானதாகும்.*

## 2. **நேர்காணல்** (Interviews)

*புதிய தகவல்கள் கொண்டு வருவதற்கான ஓர் முறையாக இது காணப்படுகிறது. இங்கு கேள்விகள் கேட்பது தொகுப்பாளராகவும், விடையளிப்பது நிகழ்ச்சிக்கு அழைக்கப்பட்ட நபராகவும் இருப்பார். மிகவும் தெளிவான, இலகு மொழியில் நேர்காணல் இடம்பெற வேண்டும் என்பது கவனத்திற் கொள்ளப்படவேண்டும்.*

## 3. **கலந்துரையாடல்** (Discussion)

*ஓர் பிரச்சினை தொடர்பான கலந்துரையாடலுக்கு ஒரு சிலர் தொகுப்பாளரோடு கலந்து கொண்டு உரையாடுவதாக இந்த நிகழ்ச்சி ஒலிபரப்பாகும். இங்கு ஒன்றுக்கு மேற்பட்ட குரல்கள் ஒலிப்பதும், புதிய விடயங்கள் கிடைப்பதும் விரும்பத்தக்கதாகும்.*

### 4. உரையாடல் (Dialogue)

இது பெரும்பாலும் கலந்துரையாடல் போல் இருந்தாலும் இருவர் தொகுப்பாளரோடு கலந்து கொண்டு ஓர் தலைப்பில் கருத்துப் பரிமாறல் இடம்பெறுவதாகும். இங்கு ஒரே கேள்வி இருவருக்கும் வழங்கப்பட்டு அதற்கான பதில்கள் அவரவர் பார்வையின்பால் பரிமாறப்படும்.

### 5. விவரணம் (Documentary)

ஏதாவது தலைப்பு சம்பந்தமாக உண்மைத் தகவல்களைத் தெரிவிப்பதாக இந்த நிகழ்ச்சி நடைபெறும். இங்கு பெரும்பாலும் தலைப்பாக உண்மைச் சம்பவம் இடம்பெறும். இச்சம்பவத்தோடு உண்மையாக தொடர்புபட்டவரோடு சம்பவம் நடந்த இடத்திலேயே பெரும்பாலும் நிகழ்ச்சி அமையும். இதில் உண்மையாக இடம்பெற்ற காட்சிகளின் ஒலிகள் பாவிக்கப்படும். இது பெரும்பாலும் செய்திகளுக்கு மிகவும் பயனுள்ள முறையாகும். செய்திகளின் நம்பகத்தன்மை இதனால் உயர்வடையும்.

### 6. சித்தரிப்பு (Features)

இது ஏதாவதொரு தலைப்பில் பல்வேறு பரிமாணங்களில் பரிமாறப்படும் நிகழ்ச்சி ஆகும். வானொலியில் பல்வகைப்படுத்தல் நிகழ்ச்சி இவையாகும். இங்கு வாதங்கள், பிரதி வாதங்கள் இடம்பெறும். ஆனால் உண்மைச் சம்பவங்கள் இடம்பெறுவதில்லை. புதிய கருத்துக்கள், படைப்புக்கள் பற்றிய பல்வேறு பார்வைகள் பரிமாறப்படும்.

### 7. சஞ்சிகை நிகழ்ச்சி (Magazines)

இது பல்வேறுபட்ட தலைப்புக்களை அடிப்படையாகக் கொண்டு நடாத்தப் படும் நிகழ்ச்சி முறையாகும். இங்கு ஒவ்வொருவரும் தமக்கு தெரிந்த கருத்துக்களை முன்வைப்பர். இவை ஒரு தலைப்போடு அல்லது வடிவத்தோடு மட்டும் தொடர்புபட்டதாக காணப்படாது, பல்வேறு நிகழ்ச்சி வடிவங்களையும் கொண்டிருக்கும்.

### 8. வானொலி நாடகம் (Radio Drama)

ஏதாவது சம்பவம் அல்லது கதை சம்பந்தமான உரையாடல்களை சம்பாஷணை வடிவில் தயாரித்து பல்வேறு குரல்களின் துணையோடு நாடக ஆக்கம் இடம்பெறும். இங்கு மனிதர் சந்திக்கும் பிரச்சினைகளையும் அதற்கு எவ்வாறு முகம் கொடுப்பது போன்ற கருத்துக்களையும் அடிப்படையாக கொண்டு உரையாடல்கள் இடம்பெறும். இங்கு காட்சிகள் கற்பனையாக்கம் செய்யப்படக் கூடியவாறு சம்பாஷணைகள் இடம்பெறும்.

## 9. நேரலை வர்ணனை (Running Commentary)

*ஏதாவது நிகழ்ச்சி தொடர்பாக நேரடியாக களத்திற்குச் சென்று, அது தொடர்பான தகவல்கள் ஒலிபரப்பப்படுவதாகும். மைதானத்தில் நடைபெறும் விளையாட்டுப் போட்டி நேரடி வர்ணனை, அதிவேகப் பாதை திறப்பு விழா வர்ணனை போன்ற நிகழ்ச்சிகள் உடனடியாக ஒலிபரப்பப்படுவது இம்முறை மூலமாகும். இங்கு வர்ணனைகளைச் செவிமடுப்போர் நிகழ்வுகளைத் தமது மனக் கண்களில் காணும் வண்ணம் விபரிப்பு இடம்பெறுவது சிறப்பானதாகும்.*

## 10. நேரடி காட்சி ஆவணம் (Eye Witness Accounts)

*இது ஒரு சம்பவம் இடம்பெற்ற பின்பு அச்சம்பவத்தை ஒலிபரப்புவதாகும். இங்கு மண்சரிவு, விபத்து, பாராளுமன்றத்தில் நடைபெற்ற விவாதங்கள் போன்றவற்றைத் தொகுப்பாளர்கள் தொகுத்து வழங்குவர்.*

## 11. அறிவிப்பு (Announcement)

*மிக குறுகிய நேரத்தில் விடயத்தை அறிவிப்பதாக இந்நிகழ்ச்சி இடம்பெறும். இடையிடையே விளம்பரங்கள் ஒலிபரப்பப்படும்.*

*மேலும் பின்னணி இசையொன்றும் இங்கு வழங்கப்படும். இது மூன்று வகைப்படும்.*

1. *அறிவிப்பு* - *குரலை மாத்திரம் பயன்படுத்தி அறிவிப்புச் செய்தல்* (Spot Announcement)
2. *குறியீட்டு இசை* - (Jingles)
3. *விளம்பரம்* - (Advertisements)

## 12. வினாவிடை நிகழ்ச்சி (Quiz Programmes)

*சாதாரணமாக ஒரு போட்டியில் கலந்து கொள்ளும் இரு அணிகள் கேள்விகளுக்குப் பதில் அளிப்பதாக இந்நிகழ்ச்சி ஒழுங்குபடுத்தப்படும்.*

## 13. தொலைபேசி உரையாடல் (Telephone Conversations)

*இன்று மிகவும் பிரபல்யமாக நடாத்தப்படுகின்ற ஓர் நிகழ்ச்சி முறையாகும். நாட்டின் எப்பிரதேசத்திலிருந்தும் ஓர் குறித்த தொலைபேசி எண் ஊடாக தொடர்பு கொண்டு நேயர்கள் கருத்துக்கள் தெரிவிக்கும் நிகழ்ச்சியாகும்.*

## 14. செய்திகள் (News)

*இது நடைபெற்ற சம்பவங்களின் ஓர் திரட்டாக இந்நிகழ்ச்சி வானொலியில் ஒலிபரப்பப்படுவதாகும். இங்கு பிரதான செய்தி, மணித்தியாலச் செய்தி, சாராம்சம், செய்தி விமர்சனம் என்பன உள்ளடக்கப்படும். செவிமடுக்கப்படும்போது*

கவனத்தை ஈர்க்கக் கூடிய வகையிலும், உடனடியாகவும், தெளிவாகவும், உண்மைத் தன்மையுடனும் அறிக்கையிடப்படவேண்டும்.

### 15. **இசை நிகழ்ச்சி** (Music)

இது குரல் இசையை அடிப்படையாக கொண்டும், பிரபலங்களை அடிப்படையாக கொண்டும் நடாத்தப்படுகின்ற இசை நிகழ்ச்சியாக தொகுத்து வழங்கப்படும் நிகழ்ச்சியாகும்.

பாடல்கள், இசைக் கருவிகள் வாசித்தல், பாடல்களைத் தெரிவு செய்து ஒலிபரப்பும் தொகுப்பாளர் வழியாக முன்வைத்தல். DISC JOKEY (DJ) ஆகிய நிகழ்ச்சிகள் இங்கு உள்ளடக்கப்படும்.

## 3.3 வானொலி ஊடகத்தின் பயன்பாடுகள்

வானொலி எமக்குத் தகவல் தருவதோடு. கல்வியறிவு ஊடகமாகவும் பொழுது போக்குச் சாதனமாகவும் காணப்படுகிறது.



உரு 3.11

வானொலியை விருப்பமான ஊடகமாக்குவதற்கு தயாரிப்பாளர்கள் வெவ்வேறு உபாயங்களைக் கையாள்கின்றனர். பொதுமக்களின் தேவை, வணிகர்களின் தேவை என்பவற்றை நிறைவு செய்யும் பொருட்டு நவீன வானொலி ஊடகம் இயங்குகின்றது. இவற்றில் வெகுசன ஊடகமாக பொதுமக்களுக்குத் தேவையான விடயங்களை வழங்குவதே வானொலியின் பிரதான இலக்காகும்.

இன்று தேசிய மற்றும் சர்வதேச, தனியார் வானொலி ஊடகங்கள் வெவ்வேறு நிகழ்ச்சிகளை வழங்குகின்றன. இவற்றில் தமது வயது, பண்பாடு, சூழல் என்பவற்றிற்குப் பொருந்தக்கூடிய நிகழ்ச்சிகளைத் தெரிந்தெடுத்துக் கேட்பது முக்கிய மானதாகும்.

## வானொலியின் பயன்பாடுகள்




**செயற்பாடு 1**

வார இறுதியில் வீட்டில் வானொலியை இயக்கிச் செவிமடுங்கள். உங்கள் விருப்பத்திற்கேற்ப பின்வரும் விண்ணப்பத்தை பூர்த்தி செய்யுங்கள்.

1
வானாலி ஊடகத்தின் பெயர் ..........
செவிமடுத்த நேரம் ..........
ஒலிபரப்பப்பட்ட நிகழ்ச்சி .........
இலக்குப் பெறுநர் யாவர் ..........

2
வானொலி ஊடகத்தின் பெயர் ..........
நிகழ்ச்சியின் பெயர் ..........
செவிமடுத்த நேரம் ..........
உங்களது கருத்து ..........

3
வானொலி ஊடகத்தின் பெயர் ..........
நிகழ்ச்சியின் பெயர் ..........
ஒலிபரப்பான விளம்பரங்களின் எண்ணிக்கை ..........
நிகழ்ச்சி ஒலிபரப்பான நேரம் ..........

4
வானொலி ஊடகத்தின் பெயர் ..........
நிகழ்ச்சியின் பெயர் ..........
மொழிப் பயன்பாடு பற்றிய கருத்து ..........
தொகுப்பாளர் பற்றிய கருத்து ..........

**செயற்பாடு 2**

1. மேற்கண்டவாறு அட்டைகளைத் தயாரியுங்கள்.
2. வகுப்பறையில் மேற்கண்ட விடயங்கள் பற்றி கலந்துரையாடல் செய்ய குழுக்களைத் தெரிவு செய்யுங்கள்.
3. வானொலி நிகழ்ச்சிகள் பற்றிய கருத்துக்களை திரட்டுங்கள்.

**செயற்பாடு 3**

உங்களது ஆசிரியரின் அனுமதியுடன் வகுப்பறையில் வானொலி ஒன்றை இயக்குங்கள். ஒரு மணித்தியாலத்திற்கு அதனை அமைதியாகச் செவிமடுங்கள். வெவ்வேறு வானொலி அலைவரிசைகளின் நிகழ்ச்சிகளைச் செவிமடுங்கள்.

- ★ வெவ்வேறுபட்ட பாடல்களில் மொழி வேறுபாட்டிலான பாடல்கள் கேட்டிருப்பீர்கள்.
- ★ கலந்துரையாடல்களைச் செவிமடுத்திருப்பீர்கள்.
- ★ செய்தி ஒலிபரப்பைக் கேட்டிருப்பீர்கள்.
- ★ தொகுப்பாளரது உரையாடல் மற்றும் விளம்பரங்களை கேட்டிருப்பீர்கள்.

வகுப்பறையில் அனைவரும் உள்நின்று நீங்கள் செவிமடுத்த நிகழ்ச்சி களில் **மொழி, நிகழ்ச்சியின் தரம், யாரை இலக்காக கொண்டு ஒலிபரப்பப்பட் டது, அதன் மூலம் சமூகம் பெற்றுக்கொள்ளும் செய்தி** என்பன பற்றி ஓர் அட் டவணை தயாரித்து உங்களது வகுப்பறை அறிவித்தல் பலகையில் காட்சிப் படுத்துங்கள்.

வானொலியைப் பயன்படுத்தும்போது கருத்தில் கொள்ள வேண்டிய விடயங்களை இதன் மூலம் நீங்கள் அறிந்திருப்பீர்கள்?

### 3.3.1 வானொலி ஊடகத்தின் செயற்பாடு

வானொலி ஊடகம் குரல் ஓசையை மையமாகக் கொண்டு செயற்படுகிறது என்பதை இப்போது உணர்ந்து இருப்பீர்கள். ஒலி என்பது ஓர் விஞ்ஞான பூர்வமான சக்தியாகும். இது ஒரு இடத்தில் இருந்து இன்னுமொரு இடத்திற்கு இடம்பெயர்ந்து செல்கிறது. இரண்டு பொருள்களில் மோதல்களில் இருந்து ஒலி உருவாகின்றது. இந்த ஒலி வளியில் கலந்து இன்னொருவரின் செவிக்கு செல்கின்றது.

வானொலி அலை இலத்திரனியல் வகையைச் சேர்ந்ததாகும்.

உலகில் உள்ள வானொலி மத்திய நிலையங்களில் வானொலி ஒலி பரப்பிற்கென பல்வித அலைகள் பயன்படுத்தப்படுகின்றன. அவையாவன,

1. மத்திய அலை (Medium Wave - MW / Amplitude Modulation - AM)
2. சிற்றலை (Short Wave - SW / High Frequency)
3. பண்பலை (Frequency of Modulation - FM)



உரு 3.12


உரு 3.13

வானொலி ஊடக நிறுவனங்களில், பேச்சொலியானது இலத்திரனியல் அல்லது மின்காந்த அலைகளாக மாற்றம் பெற்று வானலைகளில் வெளியாவதோடு ஒலிபரப்பு ஆரம்பமாகிறது

இவை ஒலிபரப்பு மையங்கள் அல்லது ஒலிபரப்புக் கோபுரங்கள் வழியாக நாடு முழுவதும் ஒலி பரப்பப் படுகின்றன. இவ்வாறு வானலைகளின் வழியாகப் பெறும் இலத்திரனியல் அல்லது மின்காந்த அலைகளை வானொலிகள் வழியாக மீண்டும் பேச்சொலியாகவும் இசையாகவும் பாடல்களாகவும் நேயர்கள் செவிமடுப்பர்.

இங்கு மேற்குறிப்பிட்டவாறு பல்வித அலைவரிசைகளிலும் ஒலிபரப்பு இடம்பெறுவதோடு அவை ஒலிபரப்பின் வீச்செல்லை பண்பு ஆகியவற்றைக் கொண்டு மத்திய அலையாக, சிற்றலையாக, பண்பலையாகத் தீர்மானிக்கப்பட்டு ஒலிபரப்பு இடம்பெறுவது குறிப்பிடத்தக்கது.

இவ்வாறு அலைவரிசைகளூடாக மட்டுமல்லாது இணையவழி ஊடாகவும் வானொலி ஒலிபரப்பானது இடம் பெறுகிறது. இது வெப் ரேடியோவாக பெயர் பெற்றுள்ளது. இது மிகவும் செலவு குறைந்த ஊடகமாகும்.

### வானொலி ஊடகத்தில் பிரதி தயாரிப்பு

**'வானொலிக்கு எழுதுவது'** மிகவும் கடினமான செயற்பாடாகும். இன்று இவ் ஊடகம் மிகவும் பிரபலம் அடைந்துள்ளது. இங்கு இயற்கையான ஒலி மற்றும் குரல் ஓசை என்பன இணைந்து வானொலி ஊடகத்தில் இடம்பெறுகின்றன. இதனை அடிப்படையாக கொண்டும் வானொலிக்கு எழுதுதல் இடம்பெறுகிறது.

வானொலிக்கு பிரதி தயாரிக்கும்போது மிகவும் எளிமையான மொழிநடையில் எழுதுதல் வேண்டும். இதில் முக்கியமாக அது இலகு மொழியாக அமைதல் வேண்டும். இதன்போது தகவலளிக்க வேண்டிய இரு விடயங்கள் பின்வருமாறு அமையும்.

1) அறிமுகம்
2) முன் ஆயத்தமாதல்



அறிமுகத்தில் பிரதியை எழுதியவர் நாம் இந்த நிகழ்ச்சியை

- யாருக்கு?
- எந்நேரத்தில்?
- எதனைக் கூறுவதற்காக?

எதற்காக? வழங்குகிறார் என்ற விடயங்களைக் கருத்திற் கொள்ள வேண்டும். அதேபோல், முன்னாயத்தத்தில்



★ நிகழ்ச்சியின் நோக்கம் யாது?
★ நிகழ்ச்சி உள்ளடக்கம்
★ நிகழ்ச்சி ஒலிபரப்பப்படும் முறை
★ பயன்படுத்தப்படும் உத்திகள்
★ இலக்குப் பெறுநர்கள் யாவர்?
★ ஒலிபரப்பப்படும் காலம் என்பன பற்றி அவதானமாகச் செயற் படுதல் வேண்டும். இவ்வாறு பிரதி பற்றி முழு அறிவு பெற்றுக் கொள்ளுதல் வேண்டும்.

குறிப்பாக, நிகழ்ச்சியின் இலக்கான நேயர்கள் யார் என மிகவும் சரியான முறையில் அறிதல் வேண்டும். அவ்வாறான நேயர்களின் சமூகநிலை, பொருளாதார நிலை மற்றும் கல்விப் பின்னணி, இரசனை மட்டம் என்பன குறித்தும் அவதானமாயிருத்தல் வேண்டும்.



உரு 3.14



உரு 3.15

மேலும் பிரதி (Script) எழுதும்போது நான்கு நிபந்தனைகளைக் கவனத்தில் கொள்ளல் வேண்டும்.

### 1) மொழிநடை

வானொலிப் பிரதி எழுதுதல் வாசிப்பதற்கு அல்ல ஒலிபரப்புவதற்கு என்பது கவனத்திற்கொள்ளப்பட வேண்டும். பிரதியில் மொழிப்பாவனை எழுத்து மொழிக்கானதாக அன்றி பேச்சுக்கானதாக அமையவேண்டும்.

### 2) தொடர்பாடல் அடிப்படை

தொகுப்பாளருக்கும் நேயருக்குமிடையில் தொடர்பினைக் கட்டியெழுப்புதல்.

### 3) செவிமடுக்கும் அடிப்படை

சமநேரத்தில் நேயர்கள் கேட்டுப் பயனடையும் விதத்தில் எழுதுதல்.

### 4) ஒலி அடிப்படை

வெறுமனே ஒலியின் ஊடாக தொடர்பாடல் இடம்பெறுகின்றது என்பதை எழுதுபவர் கவனத்திற் கொண்டு காட்சிப்புலமற்றவர்களும் புரிந்துகொள்ளும் வகையில் எழுதுவது போல் எழுதுதல் வேண்டும்.

நீங்கள் தெரிவிப்பதற்கான விடயத்தை சிந்தியுங்கள் ! படியுங்கள் ! பின்னர் எழுதுங்கள் !

பிரதி எழுதுபவர் பின்வரும் விடயங்களிலும் திறமையை வெளிக்காட்ட வேண்டும்.

- ★ நிகழ்ச்சி வடிவங்கள்
- ★ நேயர்களின் பழக்க வழக்கம்
- ★ நேயர்களின் கவனத்தை ஈர்த்தல்.
- ★ திறமையாக விளக்குதல்
- ★ மொழி, உரை நடையை மெருகூட்டுதல்.

- ★ **முன்வைத்தலின் திறமை**
- ★ **நேர்மையான முயற்சி**
- ★ **நீண்ட நாள் பயிற்சி**
- ★ **மிகவும் நல்ல முயற்சி**
- ★ **மொழியில், தகவல் தேடுதலில் உள்ள ஆர்வம்.**

என்பவற்றினூடாக நல்ல பிரதி எழுதுபவர் உருவாகின்றார்.

**<u>வானொலி நிகழ்ச்சிக்கு பிரதிகள் தொகுப்பாக்கம் செய்யும்போது கவனிக்க வேண்டியவை</u>**

* இலகு மொழி / சொற்கள்/ வசனங்கள்
* கண்ணால் பார்ப்பதற்கு அல்ல செவியால் கேட்பதற்கான மொழிப்பாவனை
* வசனத்தை முடிக்கின்றபோது முடிவு என நேயர்கள் புரிந்துக் கொள்ள வேண்டும். / பொருத்தமான ஒலிக்குறிப்புப் பாவனை

* மொழியில் இடம்பெறுகின்ற வேற்றுமைகள் தெளிவாக விளங்கிக்கொள்ளப்பட வேண்டும்.

* நிகழ்ச்சியை முன்வைக்கின்ற முறையைச் சரியாகத் தெரிவு செய்தல் வேண்டும்.

உ-ம் : நீங்கள் சோறு சாப்பிட்டீர்களா (சாதாரணம்)
நீங்கள் சோறு சாப்பிட்டீர்களா? (ஆச்சரியம்)
நீங்கள்......... சோறு......... சாப்பிட்டீர்களா? (மிகத் தொலைவில்)

 **இசைக் கருவிகளின் பாவனையைத் தேவையான அளவு சரியாகப் பயன்படுத்துதல் வேண்டும்.**

இவ்வாறு பயன்படுத்தப்படுகின்ற இசைக் கருவிகள், அவற்றின் தன்மைகள் பற்றிய தெளிவுபெறுதல் வேண்டும். அதாவது விசேட குறியீடுகள் மூலம் கருவிகளின் பாவனையைத் தெரிவித்தல் வேண்டும்.

உ-ம் : SFX புகையிரதம் நிறுத்தும் சத்தம் (Sound Efects)
உ-ம் : ★ புகையிரத அறிவித்தல் சத்தம் (Bridge Music)
★ இடம் மாறுகின்ற போது பயன்படுத்தும் சத்தம்

அத்தோடு நிறுத்தல் குறியின்போது அமைதியாக அல்லது வேறு வகைகளில் தெளிவு படுத்தல் வேண்டும்.

உ-ம் : 1) கொலை, வேண்டாம் காப்பாற்றுதல்
கொலை வேண்டாம், காப்பாற்றுதல்

இங்கு ஒரே வசனம், நிறுத்தற் குறியீடுகளை முன் பின்னாக மாற்றும்போது வேறுபட்ட கருத்துக்களைத் தருவதைக் கவனிக்க வேண்டும்.

 **வாக்கியத்தை முடிக்கும் குறிகள் சரியாக தெளிவூட்டப்பட வேண்டும்**

வாக்கியத்தை முடிக்கின்ற இடத்தில் சரியான நிறுத்தல் குறிகளைப் பயன்படுத்துவதன் ஊடாக நேயர்களின் இரசனையை தூண்டுதல் வேண்டும்.

**சரியான முறையில் நிறுத்தற்குறி, வேறுபடுத்தல் குறிகள் தெளிவூட்டப்பட வேண்டும்.**

 **கி.மு, கி.பி என்பன போன்ற சுருக்கக்குறியீடுகளைப் பயன்படுத்தாது கிறிஸ்து பிறப்பதற்கு முன், கிறிஸ்து பிறப்பிற்கு பின் எனத் தெளிவாக எழுதுதல் வேண்டும்.**

 **இலக்கத்திலான தகவல்களைத் தெளிவாக இலகுவில் ஞாபகப்படுத்திக்கொள்ளக் கூடிய முறையில் முன்வைத்தல்.**

தேங்காய் உற்பத்தி 497362 தொன் என்பதற்குப் பதிலாக 5 இலட்சம் தொன் என கூறுதல்

சிறப்பானதாகும். எனினும் குறிப்பிட்ட சந்தர்ப்பங்களில் சரியான எண்ணிக்கையைத் தெரிவிப்பதே சிறந்ததாகும்.

** எழுதும் பகுதிகளுக்கு ஏற்ப அங்கம் 1, அங்கம் 2 என எழுதுதல் சிறப்பானதாகும்.**

சாதாரண அறிக்கை போல் நிகழ்ச்சி அறிக்கை தொடர் இலக்கங்கள் தேவையில்லை ஆனால் நாடகம் போன்ற விடயங்களுக்கு ஒவ்வொரு பங்கேற்பாளரையும் குறிப்பிடுவதான தொடர் இலக்கங்களைப் பயன்படுத்துதல் வேண்டும்.

** தொழில்நுட்ப பாவனை அல்லது பின்னணிக் குரல் பாவனையின் போது மிக அவதானமாக நடந்து கொள்ள வேண்டும்.**

** தேவைக்கு அதிகமாகப் பிரதிகள் இணைப்பது சிறப்பானதல்ல.**

** அமைதி அல்லது இடைவேளைகளுக்கு முற்றுப்புள்ளிகள் அல்லது கோடுகள் பயன்படுத்துவது சிறப்பானதாகும்.**

** சம்பவ மாற்றங்களுக்கு விசேட வெளிப்பாடுகளைப் பாவித்தல் சிறப்பு**

வாத்திய இசை, மொழிப் பாவனை வேறுபாடுகள் ஊடாக சம்பவ மாற்றங்களைத் தெரிவிக்க முடியும்.

** பிரதிகளில் தேவையான தொழில்நுட்ப வசதிகள் குறிப்பிடுவது சிறப்பானதாகும்.**

வானொலிப்பிரதி எழுதும்போது, அதனைத் தொகுப்பவர் சரியான முறையில் உச்சரிப்பை மேற்கொள்ளக்கூடியதாக எழுதுதல் வேண்டும். ஒரே உச்சரிப்புக் கொண்ட வேறு சொற்களைப் பயன்படுத்தும்போது அவதானமாயிருத்தலும் அவசியமானது.

உ-ம் : 1) கற்பவருக்கு கற்பதற்கு கற்பிக்க வேண்டும்.

2) பத்திரிகை, சித்திரம் வரைந்தவர் மித்திரன் சித்திரனின் மகள் சத்திரயா.

சரியான மொழி வெளிப்பாடுகளைக் கடைப்பிடிப்பது வானொலி ஊடகத்தினை வலுப்பெறச் செய்கின்றது. அதனால்தான் மொழி மற்றும் உச்சரிப்பு சரியான முறையில் இடம்பெறுதல் வேண்டும்.

**செயற்பாடு : குழுச் செயற்பாடு**

★ *பாடசாலை வானொலி ஊடகப்பிரிவின் நிகழ்ச்சி நிரல் தயாரித்தல்*

1. காலம் : 15 நிமிடம்
2. இலக்கு நேயர்கள் : தரம் 6-11 வரை
3. தலைப்பு : உங்கள் குழுவிற்கேற்ப தெரிதல்
4. எளிமையான பிரதி தயார்செய்தல்
5. தேவையான நிகழ்ச்சியை தொகுத்தல்.

# 04 தொலைக்காட்சி ஊடகம்



## குறிக்கோள்

கட்புலத் தொடர்பாடலானது மனித தொடர்பாடல் செயன்முறையில் மிகவும் பழைமையான ஒரு முறையாகும். கட்புல சமிக்ஞை மின் நுட்பமுறைவழியாக மீளாக்கம் செய்வதற்கு எடுத்த முயற்சிகளின் பெறுபேறாக திரைப்பட (சினிமா) ஊடகம் உருவானது. சினிமா ஊடகத்தை அடிப்படையாகக் கொண்டு சினிமாவை சின்னத்திரையாக்கிய கட்புல செவிப்புல ஊடகமொன்றாக தொலைக்காட்சியை அறிமுகப்படுத்த முடியும். அது இல்லம் தேடிவரும் ஒரு நேரடி ஊடகமாகும். கட்புல செவிப்புல சமிக்ஞையை மின்காந்த சமிக்ஞையாக பரிமாற்றம் செய்து ஒளிபரப்புவதே தொலைக்காட்சியின் அடிப்படை தொழில்நுட்ப செயன்முறையாகும். அச்செயன்முறையானது கடந்த பல தசாப்தங்களினூடாக பல்வித துறைகளிலும் முன்னேற்றமடைந்துள்ளது. வீட்டு வரவேற்பறையை இடம்பிடித்துக்கொண்ட தொலைக்காட்சி கையோடு கொண்டு செல்லும் அல்லது இணைய வலையமைப்பு வழியாக கண்டுகளிக்கக்கூடிய நிலைமைக்கு மாற்றமடைந்துள்ளது. தொலைக்காட்சி வடிவமைப்பும் கூட கடந்த குறுகிய காலத்துள் கவனத்திற் கொள்ளக்கூடிய அளவு பல மாற்றங்களுக்கு உள்ளாகியுள்ளது. அத்தோடு முப்பரிமாண காட்சிகளுடனான தொலைக்காட்சி கடத்தும் (Transmission) நுட்பமுறை அதில் உருவான புதிய அனுபவமாகும். இன்றைய நாளில் வீட்டிலிடம் பிடித்துள்ள தொலைக்காட்சியை எதிர்காலத்தில் தேவைப்படுமிடத்தில் உடன் ஆக்கக்கூடிய ஒரு திரை ஊடகமாக மாற்றுவதே தொலைக்காட்சித் தொழில்நுட்பத்தின் அடுத்துவரும் இலக்காகும்.

தங்கை : அம்மா, அம்மா, இங்கே பாருங்களேன்!

அம்மா : ஏன் பிள்ளை! எதற்காக இப்படி சத்தம் போட்டு அந்தரப்படுகிறாய்?

தங்கை : ஐயோ அம்மா! அண்ணாவுக்கு அபூர்வமான விளையாட்டுப் பொரு ளொன்று பரிசாகக் கிடைத்திருக்கு!

அம்மா : என்ன மோகன் அப்படியா? தங்கை சொல்வது உண்மையா?

மோகன்: ஆம் அம்மா. அமலனின் அம்மா வெளிநாட்டிலிருந்து வந்திருக்கிறார். அமலன் எனக்குப் பரிசொன்று தந்தார்.

அம்மா: எங்கே பார்ப்போம். உண்மைதான் அபூர்வமான விளையாட்டுப் பொருள் கெமரா.

தங்கை : ஐயோ அண்ணா, இந்த கெமராவில் எப்படி படக்காட்சியைப் பார்ப்பது?

மோகன்: அதை உங்களுக்கு நான் விளக்குகிறேன். வகுப்பில் நேற்று எங்களது தொடர்பாடல் மற்றும் ஊடகவியல் கற்கை கற்பிக்கும் சேர் எங்களுக்கு அதைச் சொல்லித்தந்தார்.

அம்மா: அப்படியா? மோகன் அதை எங்களுக்கும் சொல்லிக்காட்டு

மோகன்: இந்த கெமராவின் மத்தியில் இருக்கிறது வளைந்து ஊடுருவிக் காட்டுகிற ப்ளாஸ்ரிக் வட்டமொன்று. அது சமமான பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டு இந்த உருவங்கள் தீட்டப்பட்டுள்ளன. நமது கண்களை வைக்கும் இடத்தில் சிறிய குவிவான வில்லை உள்ளது. சரியாக அந்த உருவத்துக்கு நேரே எதிரேயிருந்த இதற்கு ஒளிபாய்ச்சப்படுகிறது. அந்த பிரகாச ஒளி உருவத்தட்டில் விழுகிறது. எமக்கும் அந்த உருவம் கண்பார்வைக்குரிய பகுதி வழியாகத் தெரிகிறது. இந்த பொத்தானை அழுத்தும் போது அதில் அடுத்த படம் வருகிறது.

அம்மா: நல்லது மகனே, இது உங்கள் பாடத்துடன் எப்படி சம்பந்தப் படுகிறதென்பதை இப்போது கூறுங்கள்?

மோகன்: அம்மா, தொலைக்காட்சியை உருவாக்குவதற்கு பல்வேறு படைப் பாளிகள் முயன்றபோது சில சந்தர்ப்பங்களில் இது போன்ற படைப்புகள் அவர்களுக்கு அடுத்தகட்ட நடவடிக்கைகளில் அடியெடுத்து தொலைக்காட்சிச் சாதனத்தை உருவாக்கிட உதவி செய்துள்ளன.

| | |
|---|---|
| அம்மா: | ஆம் மகனே, மனிதன் சந்திரனில் காலடி வைத்தபோது அச்சம்பவக் காட்சிகள் வளர்ச்சியடைந்த நாடுகளின் தொலைக்காட்சியில் நேரடியாகக் காட்டப்பட்டன. ஆனால், அப்போது அதை நாங்கள் வானொலியில் மட்டுமே கேட்டு அறிந்து கொண்டோம். |
| தங்கை: | இப்போது நம்மிடம் தொலைக்காட்சி இருப்பதாலே உலகின் எந்த விடயத்தையுமே வீட்டிலிருந்துகொண்டே பார்க்க முடியும். |
| அம்மா: | ஆமாம், இப்போது நீங்கள் வளர்ச்சியடைந்த உலகின் அறிவுநிறைந்த பிள்ளைகள் அல்லவா? |

## 4.1 தொலைக்காட்சி ஊடக வரலாறும் அதன் அடிப்படை அம்சங்களும்

உருவங்கள் மற்றும் வேறு கட்புலக் கருவிகளைப் பயன்படுத்தி தொடர்பாடல் செய்வது மானுடத் தொடர்பாடலில் மிகவும் பழைமையான தொடர்பாடல் முறையாகும். பண்டைக்காலம் தொடக்கம் மனிதர்கள் தமது அனுபவங்களை சித்திரங்களாக வெளிப்படுத்த பல்வேறு முயற்சிகளை மேற்கொண்டுள்ளார்கள். பின்புறமாக உள்ள வெளிச்சம் காரணமாக பொருளொன்றின் முன்புறமாக அதன் நிழல் உருவம் உண்டாகின்றமை பற்றி ஆதிமனிதன் அனுபவத்தால் விளங்கிக் கொண்ட விடயமே நவீன கட்புலத் தொடர்பாடல் வடிவமைப்புக்குரிய மூல ஆரம்பமாயிற்று. தீச்சுவாலையினால் அல்லது சூரியக் கதிரினால் கிடைக்கின்ற வெளிச்சத்துக்கு எதிரே தனது கைவிரல்களை இயக்கி கற்குகைச் சுவரின் மீது நிழல் உருவங்களை ஆக்குவதற்கு ஆதிமனிதனால் இயலுமாயிருந்தது. தூர அளவுக்கேற்ப உருவத்தின் அளவைத் தீர்மானிக்க முடியுமென்பதை விளங்கிக் கொள்வதிலே இன்னும் பல காலம் கழிந்து போயிருக்கக்கூடும். இவை எல்லாமும் கோட்பாட்டு அடிப்படையில் அமைந்து பிற்காலத்தில் அசையும் உருவ ஊடகமாக மானுடத் தொடர்பாடலுடன் சேர்ந்துகொண்டன. இன்று தொலைக்காட்சி மனிததொடர்பாடல் செயன்முறையில் அத்தியாவசியமான காரணியாகவுள்ளது. அது பெரும்பாலும் மனிதனுக்கு அருகாமையிலிருப்பதோடு பாரிய பாதிப்பையும் ஏற்படுத்துகிறது.

### 4.1.1 சலன (அசைவு) சித்திரங்களின் தோற்றம்

ஒளிக்கதிர்களின் எதிரே அல்லது பின்னால் நிழல் உரு உண்டாவது ஒரு சாதாரண இயல்பாகும். அந்தப் பொது அனுபவத்தை தனது தொடர்பாடல் தேவைகளுக்குப் பயன்படுத்துகின்ற ஆற்றல் ஆதிமனிதனிடம் இருந்தது. அதுவே பிற்காலத்தில் தொடர்பாடல் உலகத்துக்கு அற்புதமான ஒரு படைப்பாக்கமான சலனச் சித்திரங்களைத் தோற்றுவித்தது.

11ஆம் 12ஆம் நூற்றாண்டளவில் சீனாவில் புதுமையான பாராட்டுக்குரியதொரு சிறப்பம்சம் பரவியது. நிழல் உரு நாடகங்கள் என அவை அழைக்கப்பட்டன. நிழல் உருவங்களை (silhoutte) படைத்து இந்நாடகங்களை ஆக்குவதில் அக்கலைஞர்கள் சிறப்புப் பெற்றனர். அவர்கள் ஒவ்வொரு இடமாகச் சென்று, நிழல் நாடகங்களைக் காண்பியப்படுத்தினர். வெளிச்சத்தின் எதிரே தமது இருகைகளையும் வேறு உபகரணங்களையும் வைத்து அவற்றினால் நிழல் உருவங்களை ஆக்கத் திரையில் காட்டினர். நிழல் உருவங்களின் அசைவுகளுக்கேற்ப பின்னணியில் பொருத்தமான குரல்களை வெளிப்படுத்தும்போது அதனால் கவரப்பட்ட இரசிகர்களின் தொகை மிக அதிகமாயிற்றென குறிப்பிடப்பட்டுள்ளது. எனினும் இந்த முறையில் வர்ணம் அல்லது வேறு விசேட அம்சம் எதனையும் காணமுடியாததோடு இருட்டின் கறுப்பு நிற நிழல் உருவங்களை மட்டுமே திரையில் காணமுடிந்தது.



உரு 4.1 **நிழல் நாடகங்கள்**

17 ஆம் நூற்றாண்டில் நிழல் நாடகங்கள் மேலும் விருத்தியடைய 'மெஜிக் லென்ரன்' எனும் எறியக்கண்ணாடி விளக்கின் பயன்பாடு உதவியது. ஜெர்மனிய நாட்டவரான 'எத்தனேசியஸ் கிரேச்சர்' என்னும் கிறிஸ்தவ குருவால் ஆக்கப்பட்ட இந்த மெஜிக் எறியக்கண்ணாடி விளக்கே உலகின் முதலாவது எறிவை ஊடகமாகும். எறியக்கண்ணாடியூடாக ஒளியைப் பயணிக்கச் செய்ய இக்கருவியால் முடிந்தது.



உரு 4.2 **மெஜிக் லென்ரன் எனும் அற்புத எறியக்கண்ணாடி விளக்கு**



உரு 4.3 **அற்புத எறியக் கண்ணாடி விளக்கைப் பயன்படுத்தி முன்வைக்கப்பட்ட காட்சி**

18 ஆம் நூற்றாண்டின் மெஜிக் லென்ரன் வேகமாகப் பரவியிருந்தது. மெஜிக் லென்ரனைப் பயன்படுத்தி பிரான்சில் ''பெந்தஸ் மெமோரியா'' (Penthes Memoria) எனும் பெயரில் காட்சிகள் நடத்தப்பட்டதாகக் குறிப்புகள் உள்ளன. மெஜிக் லென்ரன் மூலமாக ஏற்படுத்தப்பட்ட தூண்டுதலால் கான்பிய மற்றும் எறிவை ஊடகங்கள்

தொடர்பில் உலகம் முழுவதும் ஆய்வுகள் மற்றும் பரிசோதனைகள் செய்துபார்த்தல் நடைபெற்றன. இலங்கையில் தேசிய மறுமலர்ச்சிக்காக எழுச்சியூட்டும் சொற் பொழிவுகளையாற்றிய படி, பயணம் செய்த அநகாரிக தர்மபால அவர்களும், மெஜிக் லென்ரனைப் பயன்படுத்தினார் என்பது பற்றி வரலாற்றுக் குறிப்புகள் கூறுகின்றன. அதனூடாக தனது சொற்பொழிவுக்காக இரசிகர்களைத் தூண்டிவிட அவரால் முடிந்தது.

**எளிமையான செய்துபார்த்தல் ஒன்றினைச் செய்க.**

எரிகின்ற மின் பந்தமொன்றின் (Torch) பிரகாசமான வெளிச்சத்தை சுவரிலிருந்து 10 - 15 அடி தூரத்திலிருந்து சுவரைக் குறிபார்த்த படி மேசையொன்று அல்லது உதவி உபகரணமொன்றின் மீது அதனை வைக்குக. இப்போது உங்களது வெறுமையான இருகைகளையும் மின்பந்த வெளிச்சத்தின் எதிரே வைத்து, அசைவுகளை ஏற்படுத் துங்கள். இப்போது கைகளின் நிழல் சுவர் மீது விழுவதை அவதானியுங்கள். கைகளை மின்பந்தத்திலிருந்து சுவர் பக்கமாகக் கொண்டு போகும்போது நிழல் சிறிதாவதையும் மின்பந்தம் பக்கமாக, கொண்டுவரும்போது நிழல் பெரிதாவதையும் கவனித்தீர்களா? இந்த செய்துபார்த்தலை இரவுநேரத்தில் அல்லது வெளிச்சமில்லாத இருட்டறையில் செய்வது மிகவும் வெற்றிகரமாக அமையும்.



உரு 4.4

## 4.1.2 பார்வையின் தொடரறாத்தன்மை அல்லது பார்வைத் தொடர்ச்சி (Persistence of Vision)

சுழலுகின்ற மின் விசிறியொன்றை அவதானியுங்கள். கிரமமாக அதன் வேகம் அதிகரிக்கும்போது விசிறிச் சிறகுகளுக்கிடையிலான இடைவெளி காணமுடியாமல் போகிறது. அதன் வேகம் குறையும்போது கிரமமாக அதன் இடைவெளி காணக்கூடியதாகவுள்ளது. வேகமாக அசைகின்ற ஒன்றின் நிகழ்வுக்கிடையிலான இடைவெளியை காணமுடியாத விதத்தில் மனிதரின் கண்கள் ஆக்கப்பட்டுள்ளன. இந்தக் கோட்பாட்டை விளங்கிக்கொண்டமையே சலன உருவங்களின் ஆரம்பமானது.



**உரு 4.5 - தீப்பந்தத்தினை சுழற்றுபவனது தீவளையம் வேகமதிகரிக்க முழுமையான தீவளையமொன்றாக காட்சி தருவது இந்த நியமம் காரணமாகவே ஆகும்.**



உரு 4.6 **மின்விசிறியொன்று வேகமாக சுழலும்போது சிறகுகளுக்கிடையேயுள்ள இடைவெளி காணமுடியாது போகின்றமை.**

மனிதரின் கண்களுக்கு ஏதேனும் உருவம் பற்றிப்பிடித்த பின்பு அவ்வுருவம் மிகவும் குறுகிய காலத்துக்கு கண்களின் நினைவில் பதிந்திருக்கும். இது விநாடியொன்றின் 1/20 பங்கிற்கும் மிகக் குறைவான காலமாகும். இரண்டாம் உருவத்தைப் பார்க்கும் போதும் முதலாம் உருவம் பற்றிய நினைவு கண்களின் மீது தரித்திருக்கும். அந்நினைவு செல்லுபடியற்றதாகு முன்னர், இன்னொரு உருவம் தெரிகின்றதெனில் அவ்வுருவங்களுக்கிடையே வேறுபாடு தெரிவதில்லை. விநாடியின் 1/20 இற்கு மேல் அதிக வேகமாக உருவங்களின் வரிசை சலனத்தையுண்டாக்கும்போது அவ்வுருவங்களுக்கிடையே இடைவெளி கண்களுக்குப் புலப்படாது போகிறது.



உரு 4.7 **பார்வையின் தொடர்ச்சி நியமத்தை விளக்குகிற விளையாட்டு உபகரணம்**

பார்வையின் தொடர்ச்சி பற்றிய கோட்பாட்டைக் கண்டுபிடித்தமை சினிமா ஊடகத்தோற்றத்துக்கு பாரிய பங்களிப் பொன்றை வழங்கியது. சினிமா நாடாவினுள் இருப்பது ஒரேவரிசையில் பெறப்பட்ட நிழல் உருவங்களின் வரிசையாகும். சினிமா எறிகைப் பொறியின் உதவியுடன்

**செயற்பாடு 1**

10 செ.மீ. ஆரையுடைய வட்ட மொன்றை காட்போட் துண்டு ஒன்றிலிருந்து வெட்டி எடுங்கள். அதில் இடைவெளி சமனான தூரத்தில் சிவப்பு நிறப்புள்ளிகளை இடுங்கள் இனி, வெட்டியெடுத்த வட்டத்தின் சரி நடுவில் ஆணியொன்றின் துணையோடு சுவரில் அல்லது பலகைத் துண்டொன்றில் பொருத்துங்கள்.



காட்போட் வட்டத்தை வேகமாகச் சுழற்றும்போது புள்ளிகள் எல்லாமும் சேர்த்து சிவப்புநிற வட்டமொன்றாக காணமுடிகிறதல்லவா? கிரமமாக வேகத்தைக் குறைக்கும் புள்ளிகள் யாவும் தனித்தனியாகத் தெரிவதை காண முடியும்.

அதனை வேகமாக இயக்கும்போது உருவங்களின் தொடர்ச்சியான காட்சியாக அதனை காணமுடியும்.

1839 இல் டெகியுரே என்பவரால் சலனமில்லாத நிழல்படம் உலகுக்கு அறிமுகப்படுத்தப்படுதலும், ஜோர்ஜ் ஈஸ்ட்மன் என்பவரால் செலுலோயிட் நிழல்படலம் கண்டுபிடிக்கப்பட்டமையும் மிகவும் சிறப்பானதொரு நிகழ்வுகளாகக் குறிப்பிடப்படுகின்றன. புகைப்படக்கலை முன்னேற்றமடைந்ததோடு இணைந்து, வேகமாக நிகழ்கின்ற நிகழ்வினை புகைப்பட வரிசையாக பெற்றுக்கொள்ள முடிந்தது. அவ்வாறு பெற்றுக்கொண்ட நிழற்பட வரிசை மூலம் மெஜிக் லென்ரன் துணையோடு எறிகை செய்த முதல்காட்சிக்குப் பெருமளவு சமானமான காட்சியொன்றைப் பெற்றுக்கொள்ள முடிந்தது. இக்கோட்பாட்டினை செயற்படுத்துவதற்காக பொருத்தமான பல்வித கருவிகள் இந்த யுகத்தில் உருவாக்கப்பட்டன. இந்தக் கண்டுபிடிப்புகள் யாவற்றையும் அடிப்படையாகக் கொண்டு 1900 ஆண்டளவில் சினிமாவைக் காட்சிப்படுத்துகின்ற ஆற்றல் மனிதகுலத்துக்கு கிட்டியது.



ஓடுகின்ற குதிரையொன்றின் பாதங்கள் வைக்கப்படும் விதத்தைப் பரிசீலிப்பதற்கு பெறப்பட்ட நிழல் பட வரிசை இது. இந்நிழல் பட வரிசையை மீள வேகமாக சலனப் படுத்தும் போது ஆரம்பக் காட்சிக்கு சமமான காட்சியொன்றைப் பெற முடியும்.




சினிமா கைத்தொழிலில் பல்வேறு செய்துபார்த்தல்கள் நடைபெற்ற யுகத்தில் பல்விதமான காட்சிகளின் எறிகைகள் நிகழ்ந்தேறின. சினிமாவுக்கு கலையம்சத்தை உண்டாக்கிடும் நோக்கத்தில் கதைப் பொருளை பொம்மலாட்டம் செய்யும் தேவைப்பாடு இக்காலத்தில் உருவாகியிருந்தது.



1895 ஆம் ஆண்டில் ஐரோப்பாவெங்கும் சினிமா கொட்டகைகள் (Motion Picture Theatre) பரவியிருந்தன.

**செயற்பாடு**

1. பார்வையின் தொடர்ச்சியை சூழலின் துணையோடு காணக்கூடிய சந்தர்ப் பங்களின் பட்டியலொன்றைத் தயாரிக்குக.
2. பார்வையின் தொடர்ச்சிக் கோட்பாடு விளக்கம் தருகின்ற விளையாட்டுப் பொருள்கள் பலவற்றை உங்களது ஆசிரியரின் துணையோடு ஆக்குங்கள்.

### 4.1.3 கதை ஒலி (குரல்களுடன்) திரைப்படம் உருவாதல்

ஆரம்பகால திரைப்படக் கைத்தொழிலில் காத்திரமான சவால்களாக விளங்கியவை உருவங்களுடன் குரல்களை தொடர்புபடுத்துவதிலிருந்த சிக்கல்களாகும். இதன்காரணமாக ஆரம்பகால திரைப்படங்கள் ''மௌன சினிமா யுகம்'' எனும் பெயரில் அழைக்கப்பட்டன. மௌன சினிமாவைத் தனது ஆற்றலினால் காட்சிப்படுத்துவதில் உயர் பாராட்டினைப் பெற்றவர் படைப்பாக்கக் கலைஞரான இங்கிலாந்தில் பிறந்த நாடகக் கலைஞர் 'சார்ளி சப்ளின்' என்பவர். அவர் சினிமா வரலாற்றில் மறக்கவே முடியாத மரியாதைக்குரிய உன்னத நடிப்புச்செம்மல் ஆவார்.






உரு 4.8 - ***சார்ளி சப்ளினும்*** (Charlie Chaplin) ***அவரது ஆக்கமொன்றின் சுவரொட்டியும்***
***மூலாதாரம் - இணையதளம்***

1920 ஆம் ஆண்டளவில் உருவங்களுடன் குரலைச் சேர்த்து ஒளியெறிகை செய்வதிலிருந்த சிக்கல்கள் தீர்க்கப்பட்டு சினிமாத்துறையில் புதிய யுகமொன்றை ஆரம்பித்திட முடிந்தது. பின்னர் திரைப்படத்துறையில் படத்தொகுப்பு (Editing) வர்ணங்கள் மற்றும் பண்புத்தரமிக்க குரல் பயன்பாடு போன்ற பல தொழில்நுட்ப முறைகள் ஒழுங்குவரிசையாக இணைந்துகொண்டன.

நவீன திரைப்படமானது ஒரு கலை ஊடகமாக மட்டுமல்ல மிகவும் பாரியள விலானதொரு தொழில்நுட்ப மற்றும் பண்பாட்டுக் கைத்தொழில் துறையாகவும் விளங்குகிறது. கணினி உயிரூட்டல், முப்பரிமாண உருவ கமரா இயக்கம், முப்பரிமாண ஒலிப் பிரயோகம் போன்றவை அவ்வகை முன்னேற்றங்களாகும். எதிர்காலத்தில் சினிக் கைத்தொழிலில் காணக்கூடிய சவாலாவது, திரைப்படத்தினுள் இரசிகன் சேர்ந்து வாழ்வது போன்ற விதத்தில் உணர்வுகளை உணரக்கூடியதான திரைப்படங்களை தயாரித்தலாகும்.

### 4.1.4 தொலைக்காட்சி / ஊடகத்தின் ஆரம்பம்

வீட்டு வரவேற்பறைக்கு, அசைவு உருவ ஊடகத்தைக் கொண்டுவரவேண்டியதே மனிதனின் அடுத்த தேவையாக இருந்தது. சினிமா தொழில்நுட்பத்திலே புதிதாக கண்டுபிடித்த நவீன ஊடகமானது அதன் படிநிலையாக இருந்தது. தொலைக்காட்சியே அந்த ஊடகமாகும். 1900 ஆம் ஆண்டளவில் தொலைக்காட்சி எனும் பதம் ரஷ்யாவில் பயன்பாட்டுக்கு வந்திருந்தது. 1909 இல் ஐரோப்பாவெங்கும் அது பரவியிருந்தது. 1930இல் ஐரோப்பிய மக்கள் வாழ்வில் தாக்கமொன்றை ஏற்படுத்தக்கூடிய ஒரு ஊடகமெனுமளவிற்கு இந்த கட்புல செவிப்புல தொடர்பாடல் கருவி பரவலாயிற்று. தொலைக்காட்சி ஒரு நேரடி ஊடகமாகும். சினிமாவைப் போல கலை ஊடகமெனும் எல்லைக்குட்படாமல் மக்கள் வாழ்விற்கு அவசியமான தகவல்களைக் கொண்டுவருகிற ஓர் நெருக்கம்கொண்ட கட்புல செவிப்புல ஊடகமாக அது விளங்கியது.




உரு 4.9

தொலைக்காட்சி ஊடகத்துக்குப் பயன்படுத்துகின்ற தொழில்நுட்பம் சினிமா ஊடகத்திற்குப் பயன்படுத்தப்படும் தொழில்நுட்பத்தைவிட ஓரளவு வேறுபட்டதாகும். சினிமாவில் காணமுடியாத உருவ எறிகைப் படிநிலையொன்று

தொலைக்காட்சியில் உள்ளடங்குகிறது. குரலைப் பிரித்தெடுக்கிற தொழில்நுட்பம் கண்டுபிடிக்கப்பட்டதோடு தொலைபேசி, வானொலி ஆகிய தொடர்பாடல் முறைகள் தோற்றம் பெறுகின்றன. அத்தொழில்நுட்பத்தை விருத்தி செய்து உருவங்களை (கட்புல சமிக்ஞை) பிரித்தெடுத்துக்காட்டுதல் தொடர்பாக விஞ்ஞானிகள் பலர் ஆய்வுகள் செய்துவந்தனர். உருவங்களை சிறிய புள்ளிகளாக பரிமாற்றம் செய்து அச்சிறிய புள்ளிகளை விஞ்ஞான முறையில் பிரித்தெடுக்கிற நுட்பமுறை இங்கு மிகவும் வெற்றிபெற்றது. அச்சிறிய புள்ளிகள் ஊடாக மீண்டும் உருவங்களை நிர்மாணிக்கக்கூடிய விதத்தில் கருவி உற்பத்தியானது. அதுவே தொலைக்காட்சியின் ஆரம்பக்கட்டமாகும். இந்த நுட்பமுறையானது இயந்திரப் பொறிதொலைக்காட்சி (Mechanical Television System) நுட்பமுறையென அழைக்கப்பட்டது.

### 4.1.5 தொலைக்காட்சி ஊடகத்தின் தோற்றத்துக்கு ஏதுவாயிருந்த கண்டுபிடிப்பு

1923 இல் விளடிமீர் ஸ்வொரிகின் (Vladimir Zworykin) என்பவர் உருவங்களை ஆக்குவதற்கு அவசியமான தொழில்நுட்ப கருவியைக் கண்டுபிடிப்பதில் வெற்றி கண்டார். அக்கருவியினை விருத்திசெய்து 1924 ல் அவரால் உருவாக்கப்பட்ட நவீன கருவியே கினெஸ்கோப் (Kinescope) எனப் பெயரிடப்பட்டது. 1925 இல் பிரித்தானிய நாட்டவரான ஜோன் லொகின் பெயார்ட் (John Login Baird) என்பவர் பொறிமுறைத் தொழில்நுட்ப தொலைக்காட்சி நுட்பமுறை (Mechanical Television) யைப் பயன்படுத்தி மனித முகமொன்றை மீளாக்கம் செய்தமை இந்தக் கட்டத்தில் சிறப்பான நிகழ்வாகும்.


**உரு** 4.10 - **கினெஸ்கோப்** (Kinescope) **கருவி**

**உங்களுக்குத் தெரியுமா?**
1996 ஆம் ஆண்டில் நவம்பர் 21 மற்றும் 22 ஆகிய இருதினங்களிலும் முதலாவது உலக தொலைக்காட்சி சம்மேளனம் (World Television Forum) ஐக்கிய நாடுகளின் மகா சபையின் தலைமையில் நடைபெற்றது. அதன்படி உலக தொலைக்காட்சி தினமாக சகல ஆண்டுகளிலும் நவம்பர் 21ஆம் திகதி பிரகடனப்படுத்தப்பட்டது. 1997 நவம்பர் 21 ஆம் திகதி முதலாவது உலக தொலைக்காட்சி தினம் கொண்டாடப்பட்டது. 2014 ஆம் ஆண்டில் இலங்கையில் உலக தொலைக்காட்சி சிறப்புக் கொண்டாட்ட நிகழ்வுகள் நடந்தேறின.

1930 ஆம் ஆண்ட அளவில் மீண்டுமொருமுறை 1923ன் விளாடிமீர் ஸ்வொரிகீன் (Vladimir Zworykin) தனது கருவியை மேலும் விருத்தி செய்து இலத்திரனியல் தொலைக்காட்சி நுட்பமுறையொன்றை உலகுக்கு அறிமுகப்படுத்தினார். இவ்விதமாக

தொடர்ச்சியாக நடைபெற்ற ஆய்வுகள் பலவற்றின் பெறுபேறாக, 1933 இல் அமெரிக்காவில் முதலாவது தொலைக்காட்சி ஒளிபரப்பு நிறுவகமொன்று நிறுவப் பட்டது.

1936 இல் ஜெர்மனியில் நடைபெற்ற ஒலிம்பிக்போட்டி மற்றும் 1937 இல் பிரித்தானியாவில் 6வது ஜோர்ஜ் மன்னனின் முடிசூட்டு விழா ஆகியன நேரடி ஒளிபரப்புகளாக நிகழ்த்தப்பட்டன. ஆரம்பகாலத்தில் தொலைக்காட்சியின் சகல நிகழ்ச்சிகளுமே நேரடியாகவே ஒளிபரப்பப்பட்டன. அதுவரை ஒளிப்பதிவு செய்தல் மற்றும் தொகுத்தல் (Editing) பற்றிய தொழில்நுட்பம் வளர்ச்சியடைந்திருக்கவில்லை என்பதே அதற்குக் காரணமாகும். புதிய கட்புல செவிப்புல ஊடகம் மிகவும் ஜனரஞ்ச கமாகி 1944 அளவில் அமெரிக்க ஐக்கிய குடியரசில் சுமார் 44,000 தொலைக்காட்சிக் கருவிகள் பாவனையிலிருந்ததை அறியமுடிகிறது.

1936 அளவில் பெரிய பிரித்தானியாவின் B.B.C நிறுவனமும் அமெரிக்க ஐக்கிய குடியரசின் N.B.C நிறுவனமும் மற்றும் C.B.C நிறுவனமும் சேர்ந்து சேவையை பொதுமக்களுக்காக மக்கள் சேவை தொலைக்காட்சி அலைவரிசை ஒன்றை அமைத்துக் கொண்டன. ஆரம்பகாலத்தில் தொலைக்காட்சி ஒளிபரப்பானது கறுப்பு வெள்ளையாக இருந்ததோடு 1960 இல் வர்ணத்தொலைக்காட்சி அலைவரிசை ஒளிபரப்பு பரவியது குறிப்பிடத்தக்கது.

1959 இல் இந்தியாவில் முதலாவது தொலைக்காட்சியான தூரதர்ஷன் அலைவரிசை ஆரம்பிக்கப்பட்டபோதும் இந்தியாவில் வர்ண தொலைக்காட்சி 1982லேயே அறிமுகமாகியது.




**உரு 4.11 - காலத்துக்கேற்ப தொலைக்காட்சி கருவியின் வடிவம் மற்றும் தொழில்நுட்பம் மாற்றமடைந்து வந்துள்ள விதம்**

## 4.1.6 இலங்கையில் தொலைக்காட்சியின் ஆரம்பமும் பரவலும்

இலங்கையில் தொலைக்காட்சி சேவை ஆரம்பமான வருடம் 1979 என இருந்தாலும் அதன் வரலாறு சற்றே நீண்ட காலத்தைக் கொண்டதாகும். TNL அலைவரிசை முதல்வரான ஷான் விக்ரமசிங்க அவர்கள் நமது நாட்டின் தொலைக்காட்சி வரலாற்றில் முன்னோடி வகிபாகத்தை வகிக்கின்றார். அவரால் 1976

ஆம் ஆண்டு இலங்கையில் முதன்முறையாக தொலைக்காட்சி ஒளிபரப்பொன்று பரிசீலனை செய்து பார்க்கப்பட்டதாகக் குறிப்பிடப்படுகின்றது. அவ்வொளிபரப்பு கொழும்பைச்சுற்றி 10மைல்கள் தூரத்துக்கு செயற்பட்டது. அதுவரை அத்தொலைக்காட்சி சேவை பரவியிருந்ததோடு குறிப்பிட்ட சில இடங்களில் மிகச் சொற்பமான குடும்பங்களே தொலைக்காட்சிப் பெட்டியினூடாக அவ்வொளிபரப்பைக் காணமுடிந்தது. 1979 இல், ஷான் விக்ரமசிங்க தனியார் தொலைக்காட்சி சேவை யொன்றுக்கு அரசிடம் அனுமதி கேட்டிருந்தார். அவருக்கு ஆதரவாக அமெரிக்க ஐக்கிய குடியரசின் ''பசுபிக் கொம்யுனிகேசன்'' எனும் நிறுவனத்தின் பொப் கிறிஸ்ரி என்பவரும், அனில் விஜேவர்தன என்பவரும் இணைந்து கொண்டனர். இலங்கையின் முதலாவது தொலைக்காட்சி சேவையான சுயாதீனத் தொலைக்காட்சி சேவை தனியார் அலைவரிசையாக 1979 ஏப்ரல் 14 ஆம் திகதி ஆரம்பிக்கப்பட்டது. ஆனால் சில தினங்களிலேயே 1979 ஜூன் 5 ஆம் திகதி தனியார் சொத்துக்களை அரசாங்கம் சுவீகரிக்கும் சட்டத்தின் கீழ் இது அரசினால் சுவீகரிக்கப்பட்டது.

1982 இல் ஜப்பான் அரசின் நன்கொடையாக இலங்கை ரூபவாஹினி கூட்டுத்தாபனம் ஆரம்பிக்கப்பட்டது இந்நாட்டின் தொலைக்காட்சி வரலாற்றில் மிகமுக்கிய நிகழ்வாகும். அதிலிருந்து குறிப்பிட்ட காலத்திற்கு இலங்கையில் தொலைக்காட்சி அரசின் ஆதிபத்தியத்தின் கீழேயே செயற்பட்டு வந்தத. அதன் பின்பு கடந்து சென்ற மூன்று தசாப்தகாலங்களில் அரசாங்க மற்றும் தனியார் தொலைக்காட்சி சேவைகள் பல ஆரம்பிக்கப்பட்டுள்ளன. தற்போது இலங்கையில் 40 இற்கு மேற்பட்ட தொலைக்காட்சிச் சேவைகள் செயற்படுகின்றன. 24 ஒளிபரப்பு நிலையங்கள் வழியே அவை தமது ஒளிபரப்புக்களை மேற்கொண்டு வருகின்றன. அத்தோடு இரசிகர்களின் தொகை 10 லட்சத்துக்கும் மேல் இருப்பதாக ஆய்வுகளிலிருந்து அறியமுடிகின்றது. கடந்துபோன குறுகிய காலத்துக்குள் தொலைக்காட்சி முதன்மையான தொடர்பாடல் துணையாளனாக மாறியுள்ள மையையே இது விளக்குகிறது.




உரு 4.14 - **இலங்கையில் தற்போது செயற்படுகின்ற அரச, மற்றும் தனியார் தொலைக்காட்சி சேவைகள் சில**

### 4.1.7 தொலைக்காட்சி ஊடகத்தின் இன்றையநிலை

தொலைக்காட்சி ஊடகமானது இதுவரை, உலகின் எல்லா நவீன தொழில்நுட்ப திறன்களின் வளர்ச்சியோடிணைந்துள்ளது. தொலைக்காட்சி, நாளைய தினத்துக்கான முழு ஆயத்தத்துடனுள்ளதொரு ஊடகமாக இனங்காணமுடியும். தொலைக்காட்சி கருவியின் வடிவத்திலிருந்து நிகழ்ச்சிகளின் வடிவமைப்புவரை எல்லாமுமே கடந்த ஐம்பது வருடகாலத்துள் பலமாற்றங்களுக்குள்ளாகியுள்ளன. அம்மாற்றங்களை நாமும் அனுபவித்துக்கொண்டிருக்கிறோம். செய்மதி தொழில்நுட்ப வளர்ச்சி காரணமாக தொலைக்காட்சியானது மிகவும் பிரபலமான ஊடகமாகியுள்ளது. இல்லப்பொருளாகியுள்ள தொலைக்காட்சி கைகளில் கொண்டு செல்லக்கூடிய துணைச்சாதனமாக குறுகிய காலத்தில் மாறியுள்ளது. வீட்டில் எல்லோரும் சேர்ந்து பார்க்கின்ற தொலைக்காட்சி இன்று தனியாள் கண்டுகளிப்பதாகியுள்ளது. இதுபோன்ற நிலைமைகளினால் தொலைக்காட்சி ஊடகமானது கோளமய பொதுசன ஊடகமாக மாறிவிட்டது. தொலைக்காட்சியின் எதிர்காலம் எப்படியிருக்குமென்பதே இன்று நம் எதிரேயுள்ள சவாலாகும்.



உரு 4.15 - **தொலைக்காட்சி ஊடகத்தின் நவீன தொழில்நுட்ப வளர்ச்சிப் போக்கினைக் காட்டுகின்ற படங்களின் வரிசை**

## இலக்கமுறை அல்லது தொலைக்காட்சித் தொழில்நுட்பம் (Digital Television Techonology)




உரு 4.16

உலகின் அனைத்து தொழில்நுட்பக் கருவிகளைப் போலவே தொலைக்காட்சியும் ஒத்திசைத் தொடர் தொழில்நுட்பத்திலிருந்து (Analog) இலக்க முறைத் தொழில்நுட்பத்துக்கு (Digital) மாற்றமடைந்த ஒன்றாகும். இதனூடாக இப்போது மிகவும் அதிகமான தொலைக்காட்சி அலைவரிசைகள் பண்புத் தரத்தில் உயர் நிலையில் ஒளிபரப்புகின்ற திறனைக் கைவசப்படுத்தியுள்ளன. இலக்கமுறை தொழில்நுட்பப் பயன்பாட்டுடன் தொலைக்காட்சியானது கையில் எடுத்துச்செல்லக்கூடியதில் அல்லது கையடக்கத் தொலைபேசியில் கண்டுகளிக்கக்கூடியதான கருவி அளவுக்கு சிறிதாகியுள்ளது. இலங்கையில் இலக்கமுறை தொலைக்காட்சி சேவையை ஆரம்பித்திட அவசியமான அடிப்படை வேலைகள் நடந்து கொண்டிருக்கின்றன. வெகுவிரைவில் தொலைக்காட்சி ஊடகத்தின் இலக்கமுறை ஒளிபரப்பு அனுபவத்தை நீங்களும் கண்டுகளிக்கும் வாய்ப்பு உதயமாகவுள்ளதென்பதில் ஐயமில்லை.

## செயற்கைகோள் தொழில்நுட்ப தொலைக்காட்சி ஒளிபரப்பு



உரு 4.17

செயற்கைகோள் தொழில்நுட்பம் வழியாக தொலைக்காட்சி நிகழ்ச்சி களை ஒளிபரப்புகின்ற முறை இன்று உலகம் முழுவதும் பரவியுள்ளது. இதுவரை தேசியமட்டத்தில் வரையறை செய்யப்பட்டிருந்த தொலைக்காட்சிச் சேவையானது சர்வதேச அளவில் கண்டுகளிக்கக் கூடிய வளர்ச்சி இதன் வழியாக உதயமாகியது. இதன் படி உங்களது தொலைக்காட்சி அலைவரிசைகளில் பெரும்பாலானவற்றிற்கிடையே உங்களுக்குத் தேவையான அலைவரிசையைத் தெரிவுசெய்து கொள்ளும் திறன்

காணப்படுகிறது. இதற்காக தேவையான சேவைகளை வழங்குகிற நிறுவனங்கள் பலவற்றைக் காணமுடிகிறது. புவியியற் தடைகள் காரணமாக ஒளிபரப்புத் தூண்களுக்கு / கோபுரங்களுக்கு அண்மையில் இல்லாத எந்தவொரு பிரதேசத்துக்கும் தெளிவாக காட்சிகளைப் பெறுவதற்குத் துணைசெய்யும் நுட்பமுறையே செயற்கைகோள் தொழில்நுட்பமாகும். புவியியல் ரீதியாக பெருமளவு நாடுகளுக்கு ஒளிபரப்புத் தூண்கள் நிறுவுவதைக்காட்டிலும் மிகவும், பிரயோக ரீதியாகவும் பயனுள்ள நுட்பமுறையாகவும் இதனை அழைக்கமுடியும்.

## முப்பரிமாண தொலைக்காட்சி



உரு 4.18

சினிமா படைப்பொன்று அல்லது தொலைக்காட்சி நிகழ்ச்சியொன்றில் உள்ள தொழில்நுட்பத்தின் கீழ் காட்சிப்படுத்தப்படுவது இரண்டு தளங்கள் கொண்ட அல்லது இரட்டைப் பரிமாண முறையினாலாகும். இருப்பினும் மனிதக் கண்களுக்கு உருவமொன்றின் நீள, அகலம் மற்றும் ஆழம் ஆகிய விதத்தில் மூன்று தளத்தில் அதாவது முப்பரிமாணத்தில் உருவமொன்றைப் பார்க்க முடியும். தொலைக்காட்சியில் முப்பரிமாண விதத்தில் காட்சிகளைப் பெறக்கூடிய திறன் இப்போது வெற்றிகரமாக பயன்படுத்தப்படுகிறது. விசேடமாக தயாரிக்கப்பட்ட கண்ணாடியொன்றை அணிந்து அவ்விசேட நுட்பம் இயைபாக்கப்பட்ட தொலைக்காட்சியைப் பார்க்கும்போது முப்பரிமாண விதத்தில் காட்சிகளை தொலைக்காட்சித் திரையில் காணமுடியும். எதிர்காலத்தில் தொலைக்காட்சித் திரையில்லாமலே முப்பரிமாணக் காட்சிகளை ஆக்குவது தொடர்பாக விஞ்ஞானிகள் பரிசோதனைகளை செய்து வருகின்றனர்.

இவ்விதமாக தொலைக்காட்சி ஊடகத்தின் எதிர்காலப் வளர்ச்சிப்போக்கில் பல விருத்திகள் ஏற்பட்டு வருகின்றன. நிழல் உரு நாடகங்களில் ஆரம்பமான சலன உருவ கனவானது மனிதகுலத்தின் முதன்மையான தொடர்பாடல் சாதனமாக தொலைக்காட்சி வழியாக வளர்ச்சியடைந்து சேவையாற்றிவருகிறது.

தொலைக்காட்சி ஊடகமானது நவீன தொழில்நுட்பத்தின் உன்னத அடையாளமாக, மனிதகுலத்தினை கவர்ந்திழுக்கும் வெகுசன ஊடகமாக விளங்குகின்றது. எதிர் காலத்தில் தொலைக்காட்சி ஊடகம் இன்னும் பல துறைகள் வழியாக முன்னேற்றமடையும். அது தொடர்பாக விழிப்புணர்வோடு இருத்தல், தொடர்பாடல் பாடத்தைக் கற்கும் உங்களுக்கு மிகவும் முக்கியமானதாகும்.

**செயற்பாடு** 1

உங்களது ஆசிரியரின் உதவியோடு தொலைக்காட்சி ஊடகத்தின் நவீன வளர்ச்சிப்போக்கு பற்றிய வேறுபட்ட மூலாதாரங்களை இணையத்தில் தேடியறிக. நீங்கள் கண்டுபிடித்த தகவல்களை சுவர்ப்பத்திரிகையில் அல்லது சுவரொட்டியில் கட்டுரையாக தயாரித்து காட்சிப்படுத்துக.

**பயிற்சிகள்**

1. பாடசாலை வானொலியில் முன்வைப்பதற்காக தொலைக்காட்சி ஊடக வரலாறு பற்றிய சிறிய அறிக்கையொன்றைத் தயாரிக்குக.
2. ''தொலைக்காட்சி பாடசாலை மாணவர்க்கு ஒரு அறிவுக் களஞ்சியமாகும்.'' இக்கூற்றுக்கு ஆதரவாக அல்லது எதிராக உங்களது கருத்துக்களை முன்வைக்குக.
3. தொலைக்காட்சி ஊடகத்தின் நன்மையான மற்றும் தீமையான விளைவுகளை அட்டவணைப்படுத்துக.

## 4.1.8 தொலைக்காட்சி ஊடகத்தின் இயல்புகள்

தொலைக்காட்சி ஊடகத்தில் காணக்கூடிய முக்கிய இயல்பாவது கட்புல செவிப்புல இயல்பாகும். இருப்பினும் நவீன தொலைக்காட்சி ஊடகமானது, மேலும் பல துறைகளினூடாக வளர்ச்சியடைந்துள்ளது. இன்னும் அதிகமாகக் கற்கும்போது அதன் வேறு பல இயல்புகளையும் இனங்கண்டுகொள்ள முடியும்.

### □ தொலைக்காட்சி ஒரு கட்புல செவிப்புல ஊடகமாகும்.

தொலைக்காட்சி பிரபல்யமானதொரு கட்புல செவிப்புல ஊடகமாகும். இரசிகர்களைக் கவரக்கூடிய விதமாக விசித்திரமான வர்ணங்கள், குரல் ஒலிகளை இதில் பயன்படுத்த முடியும். வானொலியின் நிகழ்ச்சிகளைப் போல மனதில் உருவங்களைக் கற்பனை செய்துகொள்ள வேண்டிய தேவையில்லை. அச்சு ஊடகத்தைப்போல ஒரேவிதமான தன்மைகள் இல்லை. வீட்டிலிருந்து கொண்டே பொழுதுபோக்கு மற்றும் தகவல்களைப் பெற்றுக்கொள்ளும் திறன் தொலைக்காட்சி ஊடகம் மூலமாகப் பெறமுடியும்.

### □ தொலைக்காட்சி ஊடகம் ஒரு அண்மித்த ஊடகமாகும்

உலகில் பலபாகங்களிலும் நடைபெறும் சம்பவங்கள் பற்றிய தகவல்களை வீட்டுவரவேற்பறைக்கு உடன் கொண்டுவருகிற நண்பனாக தொலைக்காட்சி ஏனைய எல்லா ஊடகங்களைப் பார்க்கினும் இரசிகர்களின் கவனத்தை ஈர்த்துள்ளது. சினிமா ஊடகத்தைப்போல திரைப்பட அரங்கிற்கு சென்று கண்டுகளிக்கவோ அல்லது நுழைவுச்சீட்டைப் பெற்றுக்கொள்ளவோ இங்கு தேவையில்லை. விருப்பு, வெறுப்பு எண்ணங்களுடனான வாழ்க்கை கோலம் அனைத்திலுமே தாக்கம் விளைவிக்கின்ற ஆற்றல் தொலைக் காட்சிக்கு மட்டுமே உரித்தானதாகும். நவீன தொழில்நுட்ப வளர்ச்சியோடு நவீன தொலைக்காட்சி ஒரு நடமாடும் ஊடகமாக விளங்குகின்றது.

## □ தொலைக்காட்சி ஒரு நேரடி ஊடகமாகும்

நேரடித்தன்மையைக் கொண்ட பிரபல்யமான கேட்டல் பார்த்தல் ஊடகமே தொலைக்காட்சியாகும். உலகின் எந்தவொரு இடத்திலும் நிகழ்கின்ற சம்பவங்களை மிகவும் வேகமாகவும் கவரக்கூடிய விதத்திலும் நமக்குக் கொண்டு வந்து தருகிற ஊடகமே தொலைக்காட்சியாகும்.

## □ தொலைக்காட்சி ஊடகம் ஒரு வெகுசன ஊடகமாகும்

ஒரே தடவையில் நிச்சயமாக அறிந்திராத அதிவிசால இரசிகர்கள் கூட்டத்துக்கு தகவல்களை சொல்லக்கூடியதான தொலைக்காட்சி ஊடகம் ஒரு வெகுசன ஊடகமாக அறியப்படுகின்றது. நம்பிக்கைக்குரியதான தகவல்களைக் கொண்டு வருகின்ற ஆற்றல் தொலைக்காட்சிக்கு இருப்பதன் காரணம் அதன் கட்புல செவிப்புல திறன்களே ஆகும்.

## □ தொலைக்காட்சி ஸ்திரமற்ற ஊடகமாகும்

செய்தித்தாள் அல்லது நூல் ஒன்றினை எமக்குத் தேவையானபோது மீளப் பரிசீலனை செய்யமுடியும். இறுவட்டு ஒன்றின் மூலம் பாடலொன்றை ஓய்வு நேரங்களில் எப்போதும் கருவியிலிட்டு செவிமடுக்கமுடியும். ஆனால் வானொலி மற்றும் தொலைக்காட்சி வழியாக நிகழ்வொன்று ஒலி, ஒளிபரப்பப்பட்டதன் பின்னர் உடன் அதனை மீள இயக்கி இரசிக்க முடியாது. (குறிப்பிட்ட தொழில்நுட்பமுறை வழியாக இதனைச் செய்யமுடிந்தாலும் சாதாரண இரசி கனுக்கு இது இயலாதவிடயமாகும்) இதன் காரணமாக தொலைக்காட்சி, வானொலி ஆகிய ஊடகங்கள் ஸ்திரமற்ற ஊடகங்களென அழைக்கப்படுகின்றன. நிகழ்ச்சி ஒளிபரப்பாகின்றபோதே தொலைக்காட்சியில் அதனைக் கண்டு கேட்டு இரசிக்கலாமேயன்றி காற்றில் கலந்துவிட்டதை மீள இரசிக்கமுடியாது.

## □ தொலைக்காட்சி ஊடகம் அதிகசெலவுடைய ஊடகமாகும்

ஏனைய ஊடகங்களோடு ஒப்பிடும்போது தொலைக்காட்சி ஊடகம் செலவு அதிகமான ஊடகமாகும். தொலைக்காட்சிக்குரிய நிகழ்ச்சிகளைத் தயாரிக்கும்போது பல்துறைசார்ந்த உழைப்பாளிகளின் உதவிகளைப் பெறவேண்டும். தொலைக் காட்சிக் கலையகத்தில் அனைத்துப் பணிகளையும் திறம்பட செயற்படுத்திட ஆக்கபூர்வமான தொழில்நுட்பக் கலைஞர்கள் பலரது உதவி தேவைப்படுகிறது. அதனால் ஒட்டுமொத்தமாக நோக்கும்போது தொலைக்காட்சி ஊடகமானது ஏனைய ஊடகங்களோடு ஒப்பிட்டுப்பார்க்கின், அதிக செலவுடன் கூடிய ஒரு ஊடகமாகக் கருதப்படுகிறது.

நவீன தொலைக்காட்சி கைத்தொழிலை அழகுற வடிவமைத்து நடத்துவதானது குறைந்த உழைப்பு மற்றும் குறைந்த செலவுடன் நிகழ்த்திடும் விதத்திலேயே தங்கியுள்ளது. தொலைக்காட்சி / மெய்மை நிகழ்ச்சிகளின் (Reality show) போது நிகழ்ச்சி பற்றிய எழுத்துப் பிரதி எதுவும் தயாரிக்காமல், தயாரிப்பின் பின்னரான படத் தொகுப்பு

செய்யாமல் அந்நிகழ்ச்சியை பதிவுசெய்ய முடிவது சிறப்பானதாகும். இவ்விதத்தில் தயாரிப்புக்கு முன்னான அல்லது தயாரிப்புக்கு பின்னருள்ள செயற்படிமுறைகளில் ஏதேனும் சில பகுதிகளை நீக்கிவிடுவதன் காரணமாக செலவுகளைக் குறைக்க முடியும்.

## 4.2 தொலைக்காட்சி நிகழ்ச்சிகளின் வகைகள்

தொலைக்காட்சி மக்களிடையே புகழ் பெற்றதோடு, இரசிகர்கள் கூட்டமும் அதிகரித்துள்ளது. பாரியளவு இரசிகர்கள் கூட்டத்தில் பல்வேறு கருத்துக்கள் மற்றும் இரசனைகளுடனான குழுக்கள் பலவற்றைக் காணமுடிகிறது. சிலவேளை அவர்கள் அனைவருக்குமே ஒரு பொது நிகழ்ச்சியில் திருப்தியடைய முடியாதிருக்கலாம். ஆனபடியால், தொலைக்காட்சி ஊடகத்தின் வளர்ச்சியுடன் சேர்ந்து, பல்வித இரசிகர்கள் குழுக்களை இலக்காகக்கொண்டு நிகழ்ச்சிகளும் உருவாகத்தொடங்கின. நிகழ்ச்சிகளைத் தயாரிக்கும்போது இரசிகர்களின் சமூகம், பண்பாடு, அரசியல் ஆகிய பல்தரப்பட்ட தேவைப்பாடுகள் தொடர்பாக கவனம் செலுத்தப்பட்டது. இதேவேளை, குறிப்பிட்ட தொலைக்காட்சி அலைவரிசைகள் ஒரு வகை இரசிகர் குழுவினரை மட்டும் இலக்குவைத்து நிகழ்ச்சிகளை ஒளிபரப்புகின்றன. தேசிய அலைவரிசைகள் மற்றும் பொதுவான இரசிகர் குழுவொன்றை இலக்குவைக்கும் அலைவரிசைகள் தெரிந்தெடுத்த நிகழ்ச்சிகளை நிகழ்ச்சி நிரல் நேர அட்டவணைக்கிணங்க ஒளிபரப்பு செய்கின்றன. ஒளிபரப்பப்படுகிற நிகழ்ச்சிகளின் வகைகளுக்கிணங்க அவைரிசையின் மக்கள் விருப்பமும், இரசிகர் குழுவும் பிரபலமும் தீர்மானிக்கப்படுகின்றன. தொலைக்காட்சி நிகழ்ச்சிகளை பலதரப்பட்டனவாக வகைப்படுத்த முடிவதோடு அவற்றின் முக்கிய வகைகளாக கீழ்வருவனவற்றைக் குறிப்பிடலாம்.

★ செய்திகள்
★ அறிக்கை அல்லது விவரண நிகழ்ச்சிகள்
★ சின்னத்திரை நாடகங்கள்
★ இன, சமய நிகழ்ச்சிகள்
★ கலந்துரையாடல், விவாதங்கள்
★ சஞ்சிகைசார் நிகழ்ச்சிகள்
★ மெய்மை நிகழ்ச்சிகள்
★ நேரடி ஒளிபரப்பு
★ இசை நிகழ்ச்சிகள்

### ☐ செய்திகள் மற்றும் நடப்பு விடயங்கள் நிகழ்ச்சிகள்

உலகின் தொலைக்காட்சி அலைவரிசைகளில் பெரும்பாலானவற்றில் காணக்கூடிய நிகழ்ச்சிகள் இவ்வகையினவாகும். இந்நிகழ்ச்சிகளுக்காக தகவல் திரட்டுவதற்கு ஊடகவியலாளர்களிடையே கடும்போட்டித்தன்மை நிலவுவதைக் காணலாம். செய்தி நிகழ்ச்சியின் பெறுமதியானது, உடனுக்குடன் செய்திகள் இரசிகர்களை அண்மிக்கும் அளவிற்கே அதிகரிக்கின்றது. குறிப்பிட்ட சில செய்திகள்

மற்றும் நடப்புக் கால நிகழ்ச்சிகள் பல்வேறு உப பகுதிகளாக முன்வைக்கப்படுகின்றன. அத்தகைய நிகழ்ச்சிகள் செய்தி மஞ்சரி நிகழ்ச்சிகளென அழைக்கப்படுகின்றன. பெரும்பாலான செய்தி நிகழ்ச்சிகள் நேரடி ஒளிபரப்பாக அல்லது நேரலையாக முன்வைக்கப்படுவதோடு தேவையான காட்சிகள் மட்டும் முன்னரே தயாரித்து ஒளிப்பதிவு செய்து வைக்கப்படுகின்றன. குறிப்பிட்ட சில தொலைக்காட்சி அலைவரிசைகள் நாள்முழுவதும் செய்திகள் நிகழ்ச்சிகளை மட்டும் முன்வைக்கின்றன. அத்தகைய அலைவரிசைகள் இரசிகர்களைக் கவர்வதை அதிகரித்துக்கொள்வதற்காக செய்திக் கருத்துக்களை முதன்மைப்படுத்தும் அல்லது ஆராயும் பல்வேறு நிகழ்ச்சி மாதிரிகளைப் பயன்படுத்துகின்றன. செய்தி கலந்துரையாடல், ஆய்வுரீதியான செய்தி நிகழ்ச்சிகள், செய்தி விமர்சனமும் பகுப்பாய்வும் ஆகியவை அதனிடையே அதிகமாகக் காணமுடியும். தொலைக்காட்சி அலைவரிசையொன்றின் மதிப்பினை கவனத்திற் கொள்ளக்கூடிய பெறுமதியை அதிகரிக்கும் வெற்றிதரும் நிகழ்ச்சிவகைமைகளில் ஒன்றாக செய்திகள் மற்றும் நடப்பு விடயங்கள் (current Affairs) நிகழ்ச்சிகளை எடுத்துக் காட்டமுடியும்.

## □ தொலைக்காட்சி அறிக்கையிடல் நிகழ்ச்சிகள்

சினிமா ஆக்கத்தைப்போல, அல்லது சின்னத்திரை நாடகத்தைப்போல அழகியல்சார் தன்மை, செய்திநிகழ்ச்சிகளைப்போல தகவல்சார் குணாம்சம் ஆகியவற்றுடனானதொரு நிகழ்ச்சியாக அறிக்கை நிகழ்ச்சிகள் அழைக்கப்படுகின்றன. செய்திநிகழ்ச்சிகளை விட அதிக காலநேரத்தைப் பயன்படுத்தி அறிக்கை நிகழ்ச்சி யொன்றை தயாரிக்க முடியும். இவை பெரும்பாலும் பின்னணிப் பேச்சுடன் அல்லது நாடகம்சார் திரைக்காட்சியைப் போல உரையாடலுடன் சுவையூட்டப்படுகின்றன. பெறுமதியான ஏதேனும் தலைப்பு சம்பந்தமாகவே அறிக்கை நிகழ்ச்சி தயாரிக்கப்படுகின்றது. தொல்பொருளியல் பெறுமதி, அபிவிருத்தி சார்ந்த தகவல், அரசியல், பொருளாதார பகுப்பாய்வுகள், கல்வி சமயம் ஆகிய பல்வேறு துறைகள் இதற்காகப் பயன்படுத்தப்படுகின்றன. இவற்றினிடையே செய்தி மற்றும் நடப்பு விவகார நிகழ்வுகளை முதன்மைப்படுத்தும் அறிக்கை நிகழ்ச்சிகள் மக்களால் அதிகம் விரும்பப்படுகின்றன. சில குறிப்பிட்ட அறிக்கை நிகழ்ச்சிகளுக்காக நீண்டகாலம் தொட்டு தகவல்களை திரட்டுவதும் மூலாதாரங்களைத் தேடிப்பெறுதலும் நிகழ்கின்றன.

## □ நாடகம்சார் மற்றும் பல்சுவை நிகழ்ச்சிகள்

தொலைக்காட்சி ஊடகத்தின் ஆரம்பகாலந்தொட்டே விளங்குகின்ற நிகழ்ச்சி வகை இதுவாகும். இரசிகர்களின் பொழுதுபோக்குகளுக்காக தொலைக்காட்சி நாடகம் உருவானது. இவை ஆரம்பகாலத்தில் மேடை நாடகங்களை கலையகத்தில் ஒளிப்பதிவு செய்து ஒளிபரப்பாகின. பல்வித கருப்பொருட்களையடிப்படையாகக் கொண்டு தயாரிக்கப்படும் சின்னத்திரை நாடகங்கள் தெரிந்தெடுக்கப்பட்ட நிகழ்ச்சிநேர அட்டவணைக்கிணங்க ஒளிபரப்பாகின. நம்நாட்டில் முதன்முதலில் ஒளிபரப்பான தொலைக்காட்சி நாடகம் 1984ல் டி.பி.நிகால்சிங்கவினால் தயாரிக்கப்பட்ட 'திமுதுமுது' எனும் நாடகமாகும்.

தொலைக்காட்சி நாடகங்கள் மூன்று வகைப்படும்.

1. ஓரங்க நாடகங்கள் - ஒரு அங்கத்துடன் முடிவுறும்
2. தொடர் நாடகங்கள் - பல அங்கங்களில் முடிவுறும்
3. பல்வித அம்ச நாடகங்கள் - பகுதிபகுதியாக கதையின் கருப்பொருள் வேறுபடும்

இதற்கு மேலதிகமாக தொலைக்காட்சி சின்னத்திரை நாடகக் கலையில் நவீன அத்தியாயமாக, ''மெகாதொடர் ரெலி நாடகங்கள்'' எனும் பெயரில் மற்றுமொரு சின்னத்திரை நாடகவகையினைக் காணலாம். இவை குறைந்தசெலவில் அதிக பகுதிகளைக் கொண்டதாக தயாரிக்கப்படுகின்றன. பெரும்பாலும் ஒளிப்பதிவு செய்தல் நிகழும்போதே அந்த நாடகத்தின் அங்கங்கள் ஒளிபரப்புச் செய்யப்படுதல் இதன் சிறப்பம் சமாகும்.

தொலைக்காட்சி பல்சுவை அம்ச நிகழ்ச்சிகளை பல்வேறு வயதுமட்டத் தினருக்கும் ஏற்றதாக வகைப்படுத்திட முடியும். அதன்படி சிறுவர்களுக்கான பொழுது போக்கு தரும் கார்ட்டூன் கேலிச்சித்திரங்கள், கதைகள் மற்றும் வேறு நிகழ்ச்சிகள் தொலைக்காட்சி பல்சுவை அம்ச நிகழ்ச்சிகள் பிரிவில் அடங்கும். எந்தவொரு வயது மட்டத்தினரும் இத்தகைய பல்சுவை நிகழ்ச்சிகளை தொலைக்காட்சியில் கண்டுகளிக்க முடியும்.

நவீன தொலைக்காட்சியில் மக்களால் மிகவும் விரும்பப்படும் தொலைக் காட்சிப் பல்சுவை நிகழ்ச்சியாக, Reality shows எனும் மெய்மை நிகழ்ச்சிகளைக் குறிப்பிடமுடியும். தொலைக்காட்சி நிகழ்ச்சிகள் தயாரித்தல் செயன்முறையில் இருந்த தொழில்சார் வரையறை மற்றும் அழகியல்சார் நியமங்களை மாற்றி நவீன முறையில் தொலைக்காட்சி நிகழ்ச்சிப் பண்பாடொன்றை அறிமுகப்படுத்தியமை இம்மெய்மை நிகழ்ச்சியின் ஊடாக நிகழ்ந்த ஒரு முக்கிய விடயமாகும். ஏற்றுக்கொள்ளப்பட்ட உருவச்சட்டகம், ஏற்றுக்கொள்ளப்பட்ட தயாரிப்புமுறை ஆகியவற்றுக்குப் பதிலாக மிகவும் வித்தியாசமான முறையில் நிகழ்ச்சிகளை இதனூடாகக் காணமுடிகிறது.

### ☐ இசை நிகழ்ச்சிகள்

தொலைக்காட்சி ஊடகத்தில் மற்றுமொரு ஜனரஞ்சகமான பல்சுவை நிகழ்ச்சி இதுவாகும். இரசிகர்களைக் கவர்ந்திழுக்கும் தன்மைக்கேற்ப உயர்பெறுமதியை இங்கு காணலாம். ஆரம்பகாலங்களில் பாடகர், பாடகிகள் கலையகத்தினுள் வந்து பாடல்களைப் பாடியதோடு பிற்காலத்தில் பாடல்களைப் பாடும்போதே நடிப்பை அல்லது காட்சியையும் முன்வைத்தல் நிகழ்த்தப்பட்டது. இன்று பாடல்களுக்காக பாத்திரங்களை நடிப்பித்தல் ஒரு ஜனரஞ்சக அம்சமாக விளங்குகின்றது. இசை நிகழ்ச்சிகளை,

1. கலையகத் தயாரிப்பு
2. நேரடி ஒளிபரப்பு
3. வெளிவாரி ஒளிப்பதிவு

என மூன்று பிரிவுகளில் அடக்கலாம். பாரம்பரிய இசையைப் போல மக்கள் மத்தியில் பிரபலமான இசையையும் பயன்படுத்தி பல்வித கோலங்களில் இசை நிகழ்ச்சிகளை நவீன தொலைக் காட்சியில் காணலாம்.

**செயற்பாடு 2**

நீங்கள் தொலைக்காட்சியை கண்டு இரசிக்கும் நேரங்களில் ஒளிபரப்பாகிற தொலைக் காட்சி நிகழ்ச்சிகள் ஐந்தினை அட்டவணைக்கேற்ப பிரித்துக்காட்டி தொலைக்காட்சி நிகழ்ச்சிகள் வகைகள் பற்றி மேலும் விளக்கத்தைப் பெற்றுக்கொள்க.

**அறிவுறுத்தல்**

அலைவரிசையின் பெயர் மற்றும் நிகழ்ச்சிகளின் பெயர்களைக் குறிப்பிடுக. அதன்பின்பு கீழ்வரும் அட்டவணையைப் பயன்படுத்தி நிகழ்ச்சிகளின் வகைகளுக்கேற்ப உரிய கூடுகளில் புள்ளடியை இடுக.

| அலைவரிசை | நிகழ்ச்சியின் பெயர் | செய்திகள் மற்றும் நடப்பு விவகார நிகழ்ச்சிகள் | | | | | | கலையம்சம்சார் மற்றும் விமர்சன ரீதியான நிகழ்ச்சிகள் | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 | 11 | 12 | 13 | 14 |
| | | | | | | | | | | | | | | | |
| | | | | | | | | | | | | | | | |
| | | | | | | | | | | | | | | | |
| | | | | | | | | | | | | | | | |
| | | | | | | | | | | | | | | | |

நிகழ்ச்சிகளை தெரிவுசெய்தலுக்கான அட்டவணை

| | | | |
|---|---|---|---|
| 1 | செய்தி ஒளிபரப்பு | 8 | இசைநிகழ்ச்சிகள் |
| 2 | செய்தி கலந்துரையாடல் | 9 | நடப்புவிவகார நிகழ்ச்சிகள் |
| 3 | செய்தி சஞ்சிகை நிகழ்ச்சிகள் | 10 | வாழ்க்கைக் கோல நிகழ்ச்சிகள் |
| 4 | செய்தி விவாதம் | 11 | விளையாட்டு நிகழ்ச்சிகள் |
| 5 | நேரலைசெய்தி பேச்சுகள் | 12 | சமய நிகழ்ச்சிகள் |
| 6 | செய்தி அறிக்கை அல்லது விவரண நிகழ்ச்சிகள் | 13 | சிறுவர் நிகழ்ச்சிகள் |
| 7 | நாடகம்சார் நிகழ்ச்சிகள் | 14 | வேறு பல்சுவை நிகழ்ச்சிகள் |

## 4.3 தொலைக்காட்சி ஊடகப் பாவனை



உரு 4.19

தொலைக்காட்சி ஊடகப் பயன்பாடு சம்பந்தமாக பல்வேறு கருத்துக்கள் மற்றும் விமரிசனங்கள் காணப்படுகின்றன. தொலைக்காட்சி ஊடகம் ஒரு கோளமய ஊடகமாக தகவல்களை திரட்டித் தொகுக்கும் பணிக்கு மேலதிகமாக பண்பாடு, சமூக, அரசியல் செயற்பாடுகளோடும் தொடர்புபட்டுள்ளது. ஆய்வாளர்கள் எடுத்துக் காட்டும் விதப்படி, தொலைக் காட்சியைக் கண்டு இரசித்தலென்பது நாளாந்த வாழ்வின் ஒரு பிரதான நடவடிக்கையாகும் அளவிற்கு அதன் பாதிப்புக்கு மனிதகுலம் உள்ளாகியுள்ளது என்பது உண்மையாகியுள்ளது.

### விழிப்புணர்வோடு தொலைக்காட்சியைப் பயன்படுத்துவோர்

★ எந்தவொரு வெகுசன ஊடகத்தின் வழியாகவும் கிடைக்கப்பெறும் தகவல்களை விமரிசனத்தோடும் மற்றும் விழிப்புணர்வோடும் விசாரித்துப் பார்க்க வேண்டியது இரசிகனின் கடமைப் பொறுப்பாகும். இது ஊடக விளங்கறிவின் அம்சமாகும். தொலைக்காட்சியினூடாக ஒளிபரப்பப்படும் சகல செய்திகளையும் கிரகிக்கவேண்டியது அவசியம் அல்ல. தமது தேவைக்கேற்ப அதற்கு உசிதமான பொருத்தமான நிகழ்ச்சிகளை மட்டும் தெரிவுசெய்துகொள்ளல் எல்லா இரசிகர்களினதும் கடமையாகும். சிறுபிள்ளைகளுக்கு வழிகாட்டுதலைப் பெற்றோர்களால் செய்திடமுடியும். அப்போதுதான் பிள்ளைகளுக்கு வினைத்திறனுடன் தொலைக்காட்சியைப் பயன்படுத்தும் பழக்கம் உண்டாகும்.

★ தொலைக்காட்சியைப் பின்பற்றுதல் அல்லது அது தொடர்பான நம்பிக்கையைக் கட்டியெழுப்புதல் என்பன கவனமாக நிகழ்த்தப்படல் வேண்டும். தொலைக் காட்சி நிகழ்ச்சிகள் சிலசமயங்களில் உண்மையல்லாததாகவே இருக்கக்கூடும். தொலைக்காட்சியில் ஒளிபரப்பாகும் வீரசாகச அல்லது வேறு நிகழ்ச்சிகளைப் பின்பற்றுவதால் விருப்பமில்லாத விளைவுகள் ஏற்படக்கூடும். தகவல் தொடர்பாக அநாவசிய நம்பிக்கைகளை ஏற்படுத்திக்கொள்வதால் சமூகப்பிரச்சினைகள் தோன்றக்கூடும்.

★ சந்தையின் தேவைகளூடாக ஏனைய வெகுசன ஊடகங்களைப் போலவே தொலைக்காட்சியையும் கட்டுப்படுத்துகிற சந்தர்ப்பங்களைக் காணமுடியும். செய்திகளுக்கிடையே விளம்பரதாரர்களதும் அனுசரணையாளர்களதும் விளம்பர வேலைத்திட்ட ஒழுங்குகளும் செயற்படுகின்றன. அத்தகைய சமூக, பண்பாடு மற்றும் அரசியல் தேவைகளுக்கு செவிசாய்க்காமல் விமர்சன ரீதியாக ஊடகப் பாவனை மேற்கொள்ளப்படல் வேண்டும்.

**செயற்பாடு** 3

உங்களது பாடசாலையின் ஊடக கழகத்தின் ஊடாக தொலைக்காட்சிப் பாவணை பற்றிய விரிவுரை ஒன்றை ஒழுங்குபடுத்துக. அதன்பின்பு, அதில் பங்குபற்றுகிற மாணவர்கள் தொலைக்காட்சி நிகழ்ச்சிகளைத் தெரிவு செய்தலில் காட்டும் ஆற்றல் தொடர்பான தகவல்களைத் திரட்டுங்கள்

## 4.4 தொலைக்காட்சி ஊடகத்தின் தாக்கம்



உரு 4.20

உலகம் முழுவதிலும் தொலைக்காட்சி அலைவரிசைகள் 15,000 மட்டில் செயற்படுகின்றன. நாள்தோறும் அவ்வலைவரிசைகளை கண்டு இரசிக்கும் இரசிகர்களின் எண்ணிக்கை 300 கோடியைத் தாண்டியுள்ளது. அவர்களுள் 60% மானோர் உங்களைப் போன்ற இளைஞர்களே. அவர்கள் வாரமொன்றில் 20-30 மணித்தியாலங்கள் தொலைக்காட்சியைப் பார்ப்பதில் செலவழிக்கின்றனர்.

தொலைக்காட்சி பெறுநர் மத்தியில் உணர்வு மற்றும் நடத்தை மாற்றங்களை ஏற்படுத்தக்கூடியது. இது, சமூக ரீதியான தாக்கத்தை உருவாக்கவல்லது. குறிப்பாக, சிறார்களது மத்தியில் காணப்படக்கூடிய சில மறைத்தன்மை வாய்ந்த, எதிர்காலத்துக்கு உகந்ததாக இல்லாத சில நடத்தைகளின் மீது தொலைக்காட்சி அதீத செல்வாக்குச் செலுத்துவது ஆய்வுவழி உறுதிப்படுத்தப்பட்டுள்ளது.

### □ தொலைக்காட்சியின் பண்பாட்டுத் தாக்கம்

நவீன, முன்னேற்றமடைந்த தொடர்பாடல் தொழில்நுட்பம் காரணமாக புவியியல் எல்லைகளிலிருந்து புறம்பாக வெகுசன ஊடகத்தின் பரம்பல் நடைபெறுகிறது. அதனோடிணைந்து பண்பாட்டுப் பல்வகைமையும் தோற்றம் பெறுகிறது. இவையாவுமே இரசிகர் குழுவினரிடையே உணர்வுகள் மற்றும் நடத்தை சார் மாற்றங்களை உருவாக்குவதில் வெற்றிபெறுகின்றன. ஊடகப் பண்பாட்டின் பிரதிபிம்பமானது சமூகரீதியாக தாக்கத்தையுண்டாக்குவதோடு சிறுவர்களின் படைப் பாற்றலுக்கும் பாதிப்பை ஏற்படுத்துகிறதென்பது வெளிப்படுத்தப்பட்டுள்ளது. ஊடகப் பாவனையின்போது, சரியான வழிகாட்டுதல் மூலம் இப்பாதிப்புக்களை கட்டுப்படுத்த முடியும்.

### □ தொலைக்காட்சி ஊடகங்களில் வன்முறைகள்

தொலைக்காட்சி ஊடக நிகழ்ச்சிகளின் உள்ளடக்கத்தின் வழியாக தனியாள் வன்முறைகள் உண்டாகுதல் நடைபெறலாம். பெரும்பாலான நிகழ்ச்சிகளில்

பண்பாட்டுப் பிரச்சினைகள் குற்றச் செயல்கள், போதைப்பொருள் ஊக்குவிப்புக்கள் போன்றவற்றைக் காணமுடிகின்றது. அவற்றினூடாக இரசிகர்களின் மனங்கள் மேலும் திரிவுபடுத்தப்பட்டு வன்முறைச் செயற்பாடுகள் பலவும் நிகழ்கின்றன. மேற்கு நாடுகளில் தயாரிக்கப்பட்ட தொலைக்காட்சி தொடர்களில் பெரும்பாலானவை வன்முறைகளை அடிப் படையாகக் கொண்ட நிகழ்வுகளால் உள்ளடக்கப்பட்டிருத்தலே இத்தகைய நிலைமைகளுக்கு நேரடியாக தாக்கம் செலுத்துபவையாக உள்ளன. மேலைத்தேய நிகழ்ச்சிகளுக்கேற்ப தயாரிக்கப்பட்ட உள்ளூர் நிகழ்ச்சிகளிலும் வன்முறை தாக்கம் செலுத்துவதைக் காணமுடிகிறது.

### □ வர்த்தக விளம்பரங்களின் தவறான பாதிப்புகள்

பெரும்பாலான நாடுகளில் செயற்படுகிற தொலைக்காட்சி அலைவரிசை களில் அதிகளவானவை, வர்த்தக விளம்பர நிறுவனங்களின் அனுசரணையோடுதான் நடத்தப்படுகின்றன. தம்முடைய பண்டங்களையும் சேவைகளையும் விற்பனை செய்வதற்காக, இரசிகர்களை அடிமைப்படுத்துவதற்காக அவர்கள் பல்வேறு தூண்டல்களை நிகழ்த்துகிறார்கள் இதன்காரணமாக சமூகத்துக்கு ஏற்படுகின்ற தவறான தாக்கங்கள் அளவற்றவையாகும். இருப்பினும் ஊடக அலைவரிசைகளின் தேவை பணம் சம்பாதிப்பதாக இருப்பதால் வர்த்தக நிறுவனங்களுக்கு எதிராக செயற்படும் ஆற்றல் ஊடக நிறுவனங்களுக்கு இல்லை. நவீன தொலைக்காட்சிகளில் வர்த்தக விளம்பரங்களின் தாக்கத்திலிருந்து இரசிகர்களை விடுவிப்பது என்பது இயலாததொரு செயலாகி விடுகிறது.

சிறுபிள்ளைகளிடையே போட்டித்தன்மையை உருவாக்குவதற்காக பல்வித பொருள்கள், சேவைகள் பற்றி தவறான புரிதலைப் பெற்றுக்கொடுப்பதில் விளம்பர அறிவித்தல்கள் முக்கிய காரணிகளாக விளங்குகின்றன. அந்நிலைமைகளைக் கட்டுப் படுத்திடும் குறிக்கோளுடன் குழந்தைகள், சிறுபிள்ளைகள் சம்பந்தமான விளம்பர அறிவிப்புகளை கட்டுப்படுத்துகின்ற சட்டதிட்டங்கள் அறிமுகப்படுத்தப்பட்டுள்ளன.

நாளுக்குநாள் விருத்தியடைகின்ற வர்த்தக விளம்பரக்கோட்பாடுகள், நடைமுறை நுட்பங்கள் ஊடாக விருத்திபெறும் பாரியளவு வர்த்தகவிளம்பரங்களின் தாக்கங்களிலிருந்து தொலைக்காட்சி இரசிகர்கள் தப்ப இயலாது. இருப்பினும் தொலைக்காட்சி ஊடகம் தொடர்பான சிறந்த விளக்கமும் விமர்சனத்திறனும் விழிப்புணர்வும் இருப்பின் இத்தகைய தாக்கங்களை இழிவளவாக்கிக் கொள்ள முடியும்.

**செயற்பாடு** 4

'' தொலைக்காட்சி ஊடகம் சிறுவர்களின் உள்ளங்களில் பாதகமான தாக்கங்களை ஏற்படுத்துகின்றன / ஏற்படுத்தவில்லை '' - எனும் தலைப்பில் இரண்டு குழுக்களாகப் பிரிந்து விவாதமொன்றை நிகழ்த்த ஒழுங்குசெய்க.

# 05 படைப்பாக்கம் மிக்க தொடர்பாடல் ஒழுக்கநெறி மற்றும் சட்டம்



## குறிக்கோள்

* தொடர்பாடலானது மனித சமுதாயத்தின் மிக முக்கிய செயற்பாடாகும். தற்காலத்தில் தொடர்பாடல் செயற்பாட்டிற்காக மிக இலகுவான முறையிலிருந்து மிகச் சிக்கலான மற்றும் படைப்பாக்க ரீதியான உபாயங்கள் பாவனையாளர்களைத் திருப்தியடையச் செய்யவும் வணிக நோக்கங்களை நிறைவேற்றிக் கொள்ளவும் பயன்படுத்தப்படுகின்றன.

* தனி மனிதத் தொடர்பாடல்களிலும் ஊடகத் தொடர்பாடலிலும் படைப்பாக்க வழியில் தொடர்பாடலைப் பயன்படுத்துவதென்பது நீண்ட நெடுங் காலமாகவே இனங்காணக்கூடிய ஒன்றாகும். தொடர்பாடல் இலக்குகளை நிறைவேற்றிக் கொள்ளவும் வெற்றிகரமாக்கிக் கொள்ளவும் படைப்பாக்கம் மிக்க தொடர்பாடல் பயன்படுத்தப்படுகின்றது.

* படைப்பாக்க ரீதியான வெளிப்பாடுகளில் பாரம்பரியம், மானுடதர்மம், சட்டம் என்பன முக்கிய இடத்தைப் பெறுகின்றன. சில சமயங்களில் இவை மீறப்படுகின்றமையை அவதானிக்க முடிகின்றது. எனவே, இவற்றைப் பேணுதல் படைப்பாக்க வழித் தொடர்பாடலில் முக்கியமானதாகும்.

★ இப்பாடத்தில் படைப்பாக்கம் மிக்க தொடர்பாடலில் பல்வேறு வகைமைகள் உங்களுக்கு அறிமுகம் செய்யப்படுகின்றன. படைப்பாக்கம் மிக்க தொடர்பாலின் மூலாதாரங்கள், ஒழுக்க நெறிகள், சட்ட நெறிமுறைகள் பற்றிய அடிப்படை விளக்கமும் இப்பாடத்தின் ஊடாக உங்களுக்குக் கிடைக்கப்பெறும்.

## 5.1 படைப்பாக்கம் மிக்க தொடர்பாடல் அறிமுகம்

சாதாரண சமூகத்தில் நடைபெறுகின்ற தொடர்பாடல் மற்றும் வெகுசன ஊடகத்தினூடாக நடைபெறுகின்ற தொடர்பாடல்களில் படைப்பாக்கத் திறனுக்கு அதிக இடம் வழங்கப்படுகிறது. விசேடமாக வெகுசன ஊடகம் மற்றும் நவீன ஊடகங்களில் வணிகநோக்கை நிறைவேற்றவும் இப்படைப்பாக்கம் மிக்க தொடர்பாடல் முறையானது பயன்படுத்தப்படுவதுடன் மட்டுமல்லாது அது தற்போது போட்டித் தன்மையை தூண்டுவதாகவும் மாறியுள்ளது.

வெகுசன ஊடகம் மற்றும் படைப்பாக்கம் மிக்க தொடர்பாடல் என்பன ஒன்றோடு ஒன்று தொடர்புபட்டுள்ளன. பத்திரிகை, வானொலி, தொலைக்காட்சி போன்ற வெகுசன ஊடகங்களும் இணையம், கையடக்கத் தொலைபேசி, கணினி போன்ற நவீன மற்றும் புதிய ஊடகங்களும் படைப்பாக்கம் மிக்க தொடர்பாடலைப் பயன்படுத்துகின்றன. நாடகம், இசை, கவிதை, சிறுகதை, புத்தாக்கக் கதை சொல்லல் என்பவற்றோடு அறிவித்தல், சிறப்புக் கட்டுரைகள், அறிக்கைகள், செய்தி முன்வைப்புக்கள் என்பனவும் படைப்பாக்கம் மிக்க தொடர்பாடல் மூலம் மேற்கொள்ளப்படுகின்றன.

செய்தி நிகழ்ச்சிகளை தொகுத்து வழங்கும்போது படைப்பாக்கம் மிக்க வழியில் அதனைப் பயன்படுத்துமிடத்து, அது குறித்து மிகுந்த கவனமும் வழிநடாத்தலும் அவசியமானதாகும். ஆனாலும், ஊடகத்துறையானது அது செய்தி முன்வைப்பாக இருப்பினும் படைப்பாக்கம் மிக்க வழிமுறைகளை விட்டு விலகுவதென்பது முடியாத காரியமாகும். அதேபோன்று, மானுடத் தொடர்பாடலில் தினமும் மேற்கொள்கின்ற தொடர்பாடலில் தமது கருத்துக்களை நிலைநாட்டவும், வணிகச் செயற்பாட்டுத் தேவைகளுக்காகவும், அரசியல் மற்றும் தொழில் உறவுகளைச் சாதகமாக்கிக் கொள்ளவும் படைப்பாக்க வழிமுறைகள் பயன்படுத்தப்படுவதை நாம் காணமுடியும்.

### 5.1.1 படைப்புக்களும் படைப்பாக்கம் மிக்க தொடர்பாடலும்

படைப்பாக்கத் தயாரிப்பு எனும் எண்ணக்கரு இலகுவாக வரைவிலக்கணப்படுத்தக் கூடிய ஒன்று அல்ல. காரணம் அது பல்வேறு தன்மைகள் கொண்டதாக காணப்படுகிறது. இது தொடர்பில் வெவ்வேறு அறிஞர்கள் வெவ்வேறு கருத்துக்களை வெளிப்படுத்தியுள்ளனர். காவியப்படைப்பு, சித்திரப் படைப்பு, நாடகப் படைப்பு என வெவ்வேறு படைப்பாக்கங்கள் தொடர்பிலும் பல வரைவிலக்கணங்கள் வெளியாகியுள்ளன.

இக் கருத்துக்கள் யாவற்றையும் உள்ளடக்கும் ஒரு வரைவிலக்கணமாக கீழ்வருவதை எடுத்துக் காட்ட முடியும்.

**படைப்பு என்பது**

புதிய, விசேட தன்மை கொண்ட, உபயோகமான, அர்த்தம் கொண்ட கருத்துக்கள் ஊடாக உருவாவது ஆகும். தரமான தொடர்பாடல் செயன்முறையை உருவாக்குவதற்கும் இரசனை உணர்வைத் தூண்டவும் படைப்பாக்கம் உறுதுணையாக வேண்டும்.

ஒருவர் தகவல் தொடர்பாடல் செய்யும் போது பிரதானமான இயலுமைகள் இரண்டினை கொண்டிருத்தல் வேண்டும்.

1. மொழியாற்றல்
2. தொடர்பாடல் ஆற்றல்

மொழியாற்றல், மொழிப் பாவனையோடு தொடர்புடைய ஆற்றலாகும். ஆனால் தொடர்பாடல் ஆற்றல் என்பது பாவனையாளரைத் தூண்டும் விடயமாக அமைதல் வேண்டும். இந்த தொடர்பாடல் ஆற்றலில் படைப்பாக்கத் திறன் முக்கியமானதாகும். ஏதாவது ஒரு தகவலை சரியான முறையில், ஒழுங்கான முறையில் பாவனையாளர் புரிந்துகொள்வதற்கு தொடர்பாடல் ஆற்றல் முக்கியமானதாகும்.

### 5.1.2 படைப்பாக்கமொன்றின் தரத்தை இனங்காணல்

தொடர்பாடல் செயல் முறையில் எழுத்து மூலம் அல்லது வாய்மொழி மூலம் அல்லது வேறு முறைகளில் கருத்து வெளிப்படுத்தப்பட முடியும். ஆனால் செய்தியை இரசனையோடு வெளிப்படுத்துகின்ற தன்மை அங்கு இருத்தல் வேண்டும்.

அந்த இரசனை ஏதாவது புதிய முறையில் தகவலை வழங்குவதால் ஏற்படக் கூடியதாகும். இந்த புதிய முறையில் தொகுத்து வழங்கும் திறன் எல்லோரிடமும் காணப்படுவதில்லை. எல்லோரும் கதைப்பது அல்லது எல்லோரும் எழுதுவது பொதுவானதே. ஆனால் அது படைப்பாக்கம் மிக்க தொடர்பாடலாகாது. அதற்கு படைப்பாக்க வழிமுறைகளைத் தெரிந்துக்கொள்ள வேண்டும்.

படைப்பாக்கமொன்றின் பொதுவான பண்புகள் பின்வருமாறு

- ★ புதுமை
- ★ விசேட இயல்புகள்
- ★ பயன்பாட்டு இயலுமை
- ★ அர்த்தச் செறிவு மிக்க கருத்து
- ★ தரமான தொடர்பாடல்
- ★ உயர் இரசனை
- ★ உணர்வு பூர்வமானது
- ★ உண்மையென ஏற்றுக்கொள்ள கூடியது

மேற்குறிப்பிட்ட பண்புகள் கொண்ட தகவலே படைப்பாக்கம் மிக்கதாகும். அது தொடர்பாடலின் அத்தியாவசியமான இயல்புமாகும். எளிமையான சமுதாயத்திற்கும் மிகவும் சிக்கலான சமுதாயத்திற்கும் படைப்பாக்கத் தன்மை பொருந்துவது போட்டித் தன்மையில் ஆகும். இது சமுதாய பொதுத்தன்மையை ஏற்படுத்துவதாக அமையும்.

### 5.1.3 ஒரே அனுபவத்தை வெவ்வேறு முறைகளில் முன்வைத்தல்

படைப்பானது பல்வேறு வடிவங்களைக் கொண்டதாக இருப்பதோடு அப்படைப்பினை பல்வேறு பரிமாணங்களிலும் விபரிக்க முடியும். ஒரே செய்தி வானொலி, தொலைக்காட்சி, பத்திரிகை, இணையம் முதலிய புதிய ஊடகத்தில் பல வடிவங்களில் முன்வைக்கப்படுகின்றது. சில சமயங்களில் ஒரே ஊடகமாக இருந்தாலும் அவை ஒவ்வொன்றிலும் செய்தியை முன்வைக்கும் விதம் வேறுபடுகின்றது. உதாரணமாக பத்திரிகைகள் ஒவ்வொன்றும் ஒரே செய்தியை வெவ்வேறு விதமாக முன்வைப்பதை இங்கு குறிப்பிடலாம்.

ஒரு ஆக்கம் வானொலிக்காகத் தயாரிக்கப்படுகின்றபோது வானொலி செவிமடுக்கின்ற ஊடகம் என்ற வகையில் செய்தி தயாரிப்பில் மிக அவதானம் செலுத்துதல் வேண்டும். தொலைக்காட்சிக்காக அதே செய்தியைத் தயாரிக்கையில் ஒலி மற்றும் படக்காட்சிகளில் அவதானம் செலுத்துதல் வேண்டும். இவ்வாறு ஒரு விடயத்தை வெவ்வேறு வகை ஊடகங்களில் முன்வைக்கும்போது விசேட கவனம் வேண்டும்.

**செயற்பாடு** 1




மேற்குறிப்பிட்ட உரையாடலை அடிப்படையாகக் கொண்டு தொலைக்காட்சி அல்லது வானொலிக்கு ஒளி அல்லது ஒலி வடிவ எழுத்துருவைத் தயாரித்து அதனை வகுப்பறையில் முன்வையுங்கள்.

### 5.1.4 பிரதேசங்களுக்கேற்ப பல்வகைப்படும் படைப்பாக்கம் மிக்க தொடர்பாடல்

படைப்பாக்கத் தொடர்பாடலில் தனிப்பட்ட அனுபவம், புவியியல் சூழல், பண்பாடு, பழக்கவழக்கம், நம்பிக்கை, நடைமுறைகள் மற்றும் பிரதேச மொழிப் பயன்பாடு என்பன தாக்கம் செலுத்துகின்றன.

உதாரணமாக - ஒரு பிரதேசத்தில் உருவாக்கப்படுகின்ற நடனம் அப்பிரதேச மக்களின் சம்பிரதாயத்தோடும் பழக்கவழக்கத்தோடும் இணைந்ததாக அமையும். கீழைத்தேய நடனம், மேலைத்தேய நடனம் என்பன அவரவரின் பிரதேசத்தில் உருவான சம்பிரதாய அடிப்படையில் அமையும்.

படைப்பாக்கம் மிக்க தொடர்பாடல் செயன்முறையில், கிராமங்களில் வசிக்கும் மக்கள் தமது எண்ணங்களைக் கவிதைகள், பாடல்களாக்கும் போது தமது பிரதேசங் களின் சிறப்புக்களை பல்வகைமையை அடிப்படையாகக் கொள்வர். உதாரணமாக கிராமியப் பின்னணியில் எழும் நாட்டார் பாடல்களில் கிராமங்களுக்கே உரித்தான இயற்கை அழகு, நதி, நீரோடை, வயல்வெளிகள் என்பன அதிகம் இடம்பெறும்.

வேடர்கள் கவிதைகள், பாடல்களைப் புனையும்போது அவர்கள் வாழ்கின்ற பிரதேசங்கள், அவர்கள் பயன்படுத்தும் மொழி அடிப்படையில் கவிதை எழுதுவதாக அமையும். பிரதேசத்தில் நிகழ்கின்ற சம்பிரதாய நடைமுறைகள் தொடர்பான உருவாக்கம் அல்லது தயாரிப்பு எப்போதும் சிறப்புத் தன்மையை பெறுகிறது. ஒரு ஆக்கத்தில் படைப்பாக்கத் தன்மை அதிகரிப்பதற்கு அது சமூகமயமாக்கப்பட்ட விடயமாக அமைவது அவசியமாகிறது. இவ்வாறு பிரதேசத்துக்குப் பிரதேசம் வேறுபாடு மிக்கதாகக் காணப்படும்போது அவ்வவ் பிரதேச மக்களின் தொடர்பாடல் சிறப்பியல்புகளைக் கருத்திற் கொண்டதாக தகவல்களை முன்வைக்கும் உபாயங்களும் வேறுபட்டு அமையும். பிரதேச பத்திரிகைகள், பிரதேச வானொலிகள் உருவாக்கப்பட்டதன் பின்னணி இதுவாகும். ஒரே சம்பவத்தை ஒவ்வொரு பிரதேச பத்திரிகையும் பிரதேச வானொலியும் அவ்வவ் பிரதேச மக்களுக்கு அவர்களின் இரசனைக்கேற்ற வகையில் முன்வைப்புச் செய்யும். இவ்வாறு பிரதேச வேறுபாடுகள், பிரதேச வெகுசன ஊடகங்களின் வேறுபாடுகளுக்குக் காரணமாக அமைகின்றன.

## 5.2. படைப்பாக்கம் மிக்க தொடர்பாடலில் பயன்படுத்தக்கூடிய வெளியீட்டு விதிகள்

தொடர்பாடல் செயன்முறையை மிகவும் சிறப்பான படைப்பாக்கம் மிக்கதாக மேற்கொள்வதற்கு வெவ்வேறுபட்ட வெளியீட்டு விதிகள் பயன்படுத்தப்படுவதை அறியமுடிகிறது. குறிப்பாக ஊடகங்கள் மூலம் நிகழும் தொடர்பாடலில் நாம் அவதானம் செலுத்தினால், இவ்வெளியீட்டு விதிகளை நன்கறிந்து கொள்ளலாம்.

### 5.2.1 மொழிசார் வெளியீட்டு விதிகள்

மொழியை அடிப்படையாகக் கொண்டு நிகழும் தொடர்பாடல் மொழிசார் வெளியீட்டு முறை எனப்படும். இதுவே ஏனைய வெளியீட்டு முறைகளுக்கு அடிப்படையாக அமையும். வெகுசன மற்றும் புதிய ஊடகங்களில் இவையே பயன்படுத்தப்பட்டு வருகின்றன.

இதன்படி, ஒரு சம்பவத்தைக் கவர்ச்சியானதும் தரமானதுமான வகையில் மக்களிடம் கொண்டு சேர்க்கலாம். படைப்பாக்கம் மிக்க தொடர்பாடலில் பயன்படுத்தப்படும் மொழிசார் வெளியீட்டு விதிகளாக உவமை, உருவகம், விடுகதைகள், சிறுகதை, கவிதை, நாவல், நாடகம் என்பன அமையும்.

### 5.2.2 செவிப்புல வெளியீட்டு விதிகள்

செவிப்புலத்தை அடிப்படையாகக் கொண்ட தொடர்பாடல் மற்றுமொரு வெளியீட்டு விதியாகும். மேளச்சத்தம், ஊச்சத்தம் போன்ற பாரம்பரிய ஊடகத்தினூடாக ஆரம்பமான செவிப்புலத் தொடர்பாடல் நிகழ்காலத்தில் மிகவும் வளர்ச்சியடைந்ததாக உள்ளது.

சிறந்த செவிப்புலத் தொடர்பாடல் உருவாகுவதற்கு செய்ய வேண்டிய விடயங்கள் தொடர்பாக வானொலி ஊடகம் எனும் பாடப்பரப்பில் தெளிவுபெற்று இருப்பீர்கள். குரல், இசை, ஒலியின் அடிப்படையில் வானொலி செயற்படுகிறது. அது ஒலியின் அடிப்படையில் மாத்திரம் அமைந்த தொடர்பாடல் முறை அல்ல. அது படைப்பாக்கத் தொடர்பாடல் முறையாகவும் அமைகிறது.

வானொலியில் கற்பனையின் ஊடாக தகவல் செவிமடுக்கப்பட்டு விளங்கிக் கொள்ளப்படுகிறது. அதனால் கற்பனையை வளர்க்கக்கூடிய வகையில் வானொலி மொழி அமைதல் வேண்டும். இது வானொலியில் எந்தவொரு நிகழ்ச்சிக்கும் பொருந்துவதாக அமையும். செய்தியை முன் வைக்கின்றபோது அறிவிப்பாளரின் குரல், வெளிப்படுத்தும் முறை முக்கியமானதாகும். இசையைச் சிறந்த முறையில் பயன்படுத்தியும் வினைத்திறன்மிக்க தொடர்பாடலை நிகழ்த்த முடியும்.

### 5.2.3 கட்புல வெளியீட்டு விதிகள்

இங்கு காட்சி கொண்டு தொடர்பாடல் மேற்கொள்ளப்படுகிறது. ஆதிகால மனிதனால் எளிமையான சமிக்ஞை, எழுத்து, சித்திரங்கள் ஊடாக கட்புலத் தொடர்பாடல் மேற்கொள்ளப்பட்டது. இப்போது இம்முறை மிகவும் பிரபலமடைந்து காணப்படுகிறது. அவ்வாறான விடயங்கள் பின்வருமாறு

1. எழுத்து
2. அபிநயம்
3. படம்
4. சித்திரம்

5. குறியீடுகள்
6. சமிக்ஞை
7. அட்டவணை
8. வரைபடம்

கட்புலத் தொடர்பாடலுக்கு உதாரணமாக அறிவித்தற் பலகைகள், கையேடுகள், குறிகாட்டிகள், சமிக்ஞைகள் என்பவற்றைக் குறிப்பிடலாம்.



உரு 5.1

### 5.2.4 கட்புல, செவிப்புல வெளியீட்டு விதிகள்

ஒலி, ஒளி மூலமாக ஏதாவது தகவல் வெளிப்படுத்தப்படுமாயின் அது கட்புல செவிப்புலத் தொடர்பாடல் எனப்படும். தொலைக்காட்சி, சினிமா எனும் ஊடகங்களில் இம்முறை பயன்படுத்தப்படுகிறது. அதேபோல் கையடக்கத் தொலைபேசி, கணினி மற்றும் இணையம் போன்ற புதிய ஊடகங்கள் வழியிலும் இத்தொடர்பாடல் பயன்படுத்தப்படுகிறது.

ஏனைய தொடர்பாடல் முறைகளிலும் பார்க்க இம்முறை பாவனையாளர்களுக்கு மிகவும் இலகுவாக விளங்கக்கூடிய தன்மையை தருகிறது. இதற்கான காரணம் வழங்கப்படுகின்ற தகவல் செவிக்கும் கண்களுக்கும் விளக்கம் தருவதாகும்.

## 5.3 ஊடகப் பண்பாடு மற்றும் சட்டவாக்கம்



படைப்பாக்கத் தொடர்பாடலில் ஈடுபடுகின்ற ஊடகவியலாளர்களின் சமூக பொறுப்பு என்பதால் விளங்கிக் கொள்வது யாது? அதில் ஊடக ஒழுக்கநெறிகள், நீதி, சட்டம் என்பன பிரதான இடம் வகிக்கின்றன. ஒழுக்கநெறி எளிமையானதாகவும் நீதி, சட்டம் என்பன சிக்கலானதாகவும் காணப்படுகின்றன.

ஒழுக்கநெறிகளை எவரும் மீறுகின்றபோது தண்டனைகள் கிடைப்பதில்லை ஆனால் சட்டங்களை மீறுகின்ற போது தண்டனையிலிருந்து விடுபட முடியாது. ஒழுக்கநெறியை விரும்பினால் கடைப்பிடிக்கலாம், ஆனால் சட்டம் நிச்சயம் கடைப்பிடிக்க வேண்டியதாகும்.

வெவ்வேறுபட்ட ஊடகத்துறையினர் வெவ்வேறுபட்ட ஒழுக்க நெறிகளைப் பின்பற்றுபவராக உள்ளனர். அதேபோல் ஊடகவியலாளர்கள் சுய தணிக்கைகளில் ஈடுபடுபவராகவும் காணப்படுவர். ஏதாவது விடயத்தை ஊடகத்தினூடாக வழங்குகின்றபோது அது முழு சமுதாயத்தையும் பாதிக்கின்ற விடயமாயின் அதனைத் தவிர்த்தல் வேண்டும். இது ஊடகவியலாளருக்குரிய முக்கிய கடமையாகும். சட்டங்கள் மற்றும் ஒழுக்கநெறிகளை விட ஊடகவியலாளர்க்கு சமூக பொறுப்பு அதிகமாக காணப்படுதல் வேண்டும்.

இலங்கை ஊடகத்துறையில் வெவ்வேறுபட்ட ஒழுக்கநெறி விதிமுறைகள் காணப்படுகின்றன. இலங்கை பத்திரிகையாசிரியர் சங்கத்தின் ஒழுக்கநெறிக் கோவை, இலங்கை பத்திரிகை முறையீட்டு ஆணைக்குழுவின் ஒழுக்கநெறிக் கோவை என்பவற்றோடு,

- சர்வதேச ஊடகவியலாளர் சம்மேளன ஒழுக்கநெறிக் கோவை
- சுதந்திர ஊடகவியலாளர் சங்கத்தின் ஒழுக்கநெறிக் கோவை

என்பன ஒழுக்கநெறிமுறைகளை இலங்கை ஊடகவியலாளர்களுக்கு எடுத்தியம்பு கின்றன.

### 5.3.2. ஊடகப் படைப்பாக்கம் மற்றும் சட்டங்கள்

ஏதாவது நாட்டில் தொடர்பாடல் செயற்பாட்டினை ஒழுக்கநெறிகள் மூலம் மாத்திரம் கட்டுப்படுத்த முடியாது. அதற்காக மிகவும் பலமான சட்டங்கள் நடைமுறைப் படுத்தல் வேண்டும். அதற்கு பிரதான காரணம் எந்தவொரு ஜனநாயக நாட்டிலும் ஜனநாயகத்தை மேம்படுத்துவது சட்டத்தின் ஆட்சியும் அவசியமானதினாலாகும். இங்கு சுதந்திரம் காரணமாக சமுதாயத்தில் பலமும் பலவீனமும் ஏற்படலாம். ஊடக பாவனைக்கு தேவையான சுதந்திரம் மேற்குலக நாட்டில் ஆரம்பமாகிய பின் உலகம் முழுவதும் பரவியது. ஜோன் மில்டன், ஜோன் லொக், ஜோன் ஸ்டுவர்ட் மில், தோமஸ் ஜெபர்சன் போன்ற சமூகவாதிகள் ஊடக சுதந்திரத்தைப் பெற்றுக்கொள்ள முன்னின்று உழைத்தனர். அவர்களின் குரல்கள் மூலம் கிடைக்கப்பெற்ற உரிமையானது எந்தவொரு நாட்டிலும் ஊடக சுதந்திரத்திற்கு அரச நிர்வாகிகள் தடைபோட முடியாது என்பதாகும். இதனால் வெகுசன ஊடகங்களுக்கு சுதந்திரமாக தொழிற்பட முடியுமாகவுள்ளது. ஆனால் இவ்வாறான சுதந்திரம் ஒரு வகையில் பாதகமான சில விளைவுகளையும் பிற்காலங்களில் உருவாக்கியதையும் குறிப்பிட வேண்டியதாகிறது. எனவே, ஊடகங்கள் தமது கருத்துச் சுதந்திரத்தையும் வெளியீட்டு உரிமையையும் பாதுகாக்கும் அதேவேளை சுதந்திரத்தின் பேரால் மக்களுக்குத் தீங்கெதுவும் நிகழ்த்தப்படாமலும் காத்துக்கொள்ள வேண்டும். ஊடகங்களுக்கான வெளியீட்டுச் சுதந்திரம் ஒரு நாட்டுக்கு

மாத்திரமன்றி முழு உலகத்திற்கும் பொதுவானதாகும். மனித உரிமைகள் தொடர்பில் உலகில் இதுவரை வெளிவந்த வெளியீடுகளில் மிகவும் தலையாயதான ஐக்கிய நாடுகள் சபையின் மனித உரிமைகள் தொடர்பான சர்வதேச சாசனத்தின் 19 வது சரத்து பின்வருமாறு கூறிநிற்கிறது.

**"தமக்கான கருத்தை சுதந்திரமாகக் கொண்டிருப்பதற்கும் அதனை தடையின்றி வெளிப்படுத்துவதற்கும் அனைவருக்கும் உரிமை உண்டு. பிறரின் தடை ஏதுமின்றி தேச எல்லைகளைக் கடந்து அந்த ஊடகம் வழியாகவும் தகவல்களைப் பெறவும் வழங்கிடவும் அனைவருக்கும் சுதந்திரம் உண்டு"**

இலங்கை ஐக்கிய நாடுகள் தாபனத்தின் அங்கத்துவம் பெற்ற நாடாகும். அதனால் மனித உரிமை தொடர்பாக விசேட கவனம் செலுத்துதல் வேண்டும். இலங்கை குடியரசின் அரசியல் யாப்பில் வெளியிடப்பட்டுள்ள சுதந்திரம் தொடர்பான வெளியீடு பின்வருமாறு.

14 (1) **சகல பிரஜைகளுக்கும்**

(அ) **பேச்சுச் சுதந்திரத்திற்கும் மற்றும் கருத்துத் தெரிவிக்கும் சுதந்திரத்திற்கும் உரிமை உண்டு.**

மேற்குறிப்பிட்டதற்கிணங்க கருத்து வெளியிடுகின்ற சுதந்திரம் உள்ள போதிலும் அது ஓர் எல்லைக்கு உட்பட்டதாக இருப்பது தெரியவருகிறது. இல்லை என்றால், அது சுதந்திர சமூகத்தை பாதிப்பதாக அமையும். இலங்கை அரசின் யாப்பிலும் சுதந்திரத்திற்கான சில வரையறைகள் உள்ளடக்கப்பட்டுள்ளன. 15(2) மற்றும் (7) ஆகிய உபசரத்துக்கள் இந்த பிரதான வரையறைகளைக் கொண்டுள்ளன.

அதேபோல் இலங்கையில் ஊடகங்களின் செயற்பாடுகளை ஒழுங்குபடுத்துவதற்கு சில அமைப்புக்களுக்கு சட்ட ரீதியான அந்தஸ்தும் வழங்கப்பட்டுள்ளது. இலங்கை தொலைத்தொடர்பு ஒழுங்குமுறைப்படுத்தும் ஆணைக்குழு, இலங்கை திரைப்பட தணிக்கைச் சபை ஆகியன அவற்றுள் முக்கியமானவை.

திரைப்படங்களைப் பொறுத்தளவில் திரைப்படங்களை உருவாக்குவோர் தமக்கான சுதந்திரம் தொடர்பில் உரிமைகளைக் கொண்டிருந்தாலும் அது நியமமான விதிகளின் பால் அமைய வேண்டும் என தணிக்கைச் சபை கூறுகிறது. அவ்வாறில்லாவிடில், கட்டற்ற சமூகப் பிறழ்வுகளையும் சீரழிவுகளையும் தூண்டக்கூடிய பாலியல் காட்சிகள், வன்முறைகள், அடிப்படை வாதக் கருத்துக்கள் பரவல் ஆகியவை திரைப்படங்கள் ஊடாக சமூகத்திற்குள் ஊடுருவலாம் எனும் தணிக்கைச் சபை இவற்றைக் கட்டுப்படுத்தி திரைப்படங்களுக்கான திரையீட்டு அனுமதிச் சான்றிதழ்களை வழங்கி வருகிறது.

இணையம் முதலிய புதிய ஊடகங்கள் தற்போது சமூகத்தில் மிகவும் பாதிப்பை ஏற்படுத்துகின்றன. அதனைக் கட்டுப்படுத்துவதற்கு தொலைத்தொடர்பு ஒழுங்கு முறைப்படுத்தும் ஆணைக்குழு நியமிக்கப்பட்டுள்ளது. அண்மைக்காலத்தில்

அதிகளவான இணையத் தளங்கள் இலங்கையில் தடை உத்தரவுக்கு உள்ளாகின. ஆனால், இணைய வழியே சட்டத்தை நிலைநாட்டுவது மிகவும் கடினமான காரியமாக உள்ளது. ஊடக படைப்புக்கள் எனும் போது நாவல், சிறுகதை, கவிதை, போன்ற வெளிப்பாடுகளை கட்டுப்படுத்தும் சட்டங்கள் இலங்கையில் உருவாக்காமை முக்கிய விடயமாகும். எனவே நாவலாசிரியர்கள், சிறுகதையாசிரியர்கள், கவிஞர்களுக்கு முழு சுதந்திரம் வழங்கப்பட்டுள்ளது. அதனால் அவர்கள் சமூகப் பொறுப்புடன் தமது சுதந்திரத்தைப் பயன்படுத்தல் வேண்டும்.

தற்போது வணிக நலனுக்காக நாவல்கள் மற்றும் கட்டுரைகள் என்பன பாலியல் வன்முறையை மற்றும் சமூகச் சீரழிவுகளை தமது கருப்பொருள்களாகக் கொள்கின்றன. ஊடகவியலாளர்களுக்கு பூரண சுதந்திரம் இருந்த போதும் சமூக நலனுக்காக இவை போன்றவற்றை அவர்கள் தவிர்த்துக் கொள்தல் வேண்டும்.

தொலைக்காட்சி, வானொலி மற்றும் பத்திரிகை போன்ற பிரதான வெகுசன ஊடகங்கள் தொடர்பாக கவனம் செலுத்தும் போது, அவற்றை நடாத்தி செல்வதற்கான அனுமதி பெறுதல் முக்கியமானதாகும். அதனூடாக ஊடக பாவனை ஓர் அளவிற்கு கட்டுப்படுத்தப்படுகிறது. ஆனாலும் சில தொலைக்காட்சி நாடகங்கள், வானொலி நாடகங்கள் போன்றன ஏற்றுக்கொள்ளக்கூடிய தரத்தில் இல்லாமை பிரச்சி னையாகியுள்ளது. முற்காலத்தில் வானொலியில் ஒலிபரப்பப்படுகின்ற பாடல்கள் தெரிவு செய்யப்பட்டு ஒலிபரப்பப்பட்டது. ஆனால் இன்று பெரும்பாலான பாடல்கள் குறித்த தரத்தில் இல்லாமை மிகவும் கவலைக்குரியதாகும். இசை, வானொலி நாடகம், தொலைக்காட்சி நாடகம், அறிவித்தல் ஆக்கத்தில் அடிப்படைத் தரம் தொடர்பான சட்டம் இல்லாமையே இதற்குக் காரணமாகும்.

ஆனாலும் ஊடகத்தை அறவே புறந்தள்ளிவிடுதல் முடியாத காரியமாகும். எவ்வளவு தாக்கத்தை ஏற்படுத்தினாலும் கவனமாக அவற்றைப் தேர்ந்தெடுத்து அவற்றை பாவனை செய்தல் மிகவும் சிறப்பானது. ஊடகம் மின் மற்றும் ஆயுதத்திற்கு சமமான ஒன்றாகும். அதனால் அதனை சரியான முறையில் தெரிவு செய்து பிரயோகித்தல் வேண்டும்.

### 5.3.3. ஊடகப் பாவனை

ஊடகம் ஓர் கைத்தொழிலாக மாறியுள்ளது. கைத்தொழில்களின் பிரதான நோக்கம் இலாபம் பெறுதலாகும். அந்த வகையில் நடைமுறையில் ஊடக செயற்பாடு பிரபல வியாபாரமாக மாறியுள்ளது. அதன் ஆரம்பமாக இருப்பது அச்சு ஊடகத்தின் அறிமுகமாகும். குட்டன்பேர்க்கினால் அச்சு ஊடகம் உலகத்திற்கு அறிமுகப்படுத்தப்பட்டதோடு வில்லியம் ஹைக்ஸ்டன் என்பவரால் அச்சுக்கலை ஐரோப்பா முழுவதும் அறிமுகப்படுத்தப்பட்டது. அதன் விளைவாக பிரித்தானிய பாராளுமன்றத்தில் புத்தக வெளியீட்டிற்கான சட்டம் முன்வைக்கப்பட்டது. உலகின் முதல் வெளியீட்டு உரிமைச் சட்டம் 1910 ஏப்பிரல் $10^{ம்}$ திகதி உருவாக்கப்பட்டது. இச்சட்டம் ஆன் அரசியின் சட்டம் (Queen Ann's Statute) என அறிமுகப்படுத்தப்பட்டது. இந்த யாப்பு புத்தகம் சம்பந்தமாக மட்டும் வரையறை செய்யப்பட்டதாகும். இந்த

யாப்பின் பெறுபேறாக படைப்பொன்றின் வெளியீட்டைச் செய்யும் உரிமையை அதன் ஆக்கியோனிடமிருந்து குறிப்பிட்டதொரு கொடுப்பனவைச் செய்து பெற்றுக் கொள்ள வேண்டிய கடப்பாடு வெளியீட்டாளருக்கு ஏற்பட்டது. இந்த வெளியீட்டுச் சட்டம் இன்று அனைத்து ஊடகங்களுக்கும் பொருந்துவது குறிப்பிடத்தக்கது.

படைப்பாற்றலானது ஓர் புலமைச் சொத்தாகும். அவை அனைவரிடமும் காணப்படாத சொத்தாகும். புலமைச் சொத்து இரண்டு வகைப்படும்

1. புதிய கண்டுபிடிப்பு, பண்டப்பெயர், கைத்தொழில் திட்டம் போன்ற கைத்தொழில் தொடர்பான சொத்து
2. இலக்கிய, இசை, சித்திர, நிழற்பட, ஒலி, ஒளி செயற்பாடுகள் தொடர்பான வெளியீட்டுச் சொத்து

அவ்வாறு இரு வகைப்படுத்தப்பட்டாலும். இங்கு கவனம் செலுத்தப்பட வேண்டியது வெளியீட்டு உரிமை தொடர்பிலாகும். ஒரு ஆக்கத்தை சமூகத்தின் முன்வைக்கும் படைப்பாளிக்கு, அச்சமூகம் ஏதேனும் ஒரு வகையில் கொடுப்பனவைச் செய்து, நன்றி பாராட்டுவதோடு அவனை ஊக்கப்படுத்த வேண்டும். அதன் மூலம் அப்படைப்பாளி தன் வாழ்க்கையை முன்கொண்டு செல்வதோடு, அவனது படைப்பிற்கும் நன்மதிப்பு உருவாகும். அக்கொடுப்பனவு, குறித்த படைப்பாளியின் வெளியீடுகளைப் பிரசுரிப்பவர் மூலமாக அல்லது பெறுநர் மூலமாக நிகழும். 1948 ம் ஆண்டின் ஐக்கிய நாடுகள் மனித உரிமைகள் சாசனம் பின்வருமாறு குறிப்பிடுகிறது.

27வது **பிரிவு**

(1) பிரஜைகளின் பண்பாட்டில் பங்குபற்றுவதற்கு, கலைகளை இரசிப்பதற்கு மற்றும் விஞ்ஞான ரீதியான நவீன காரியங்களில் ஈடுபடவும் அவற்றில் இலாபத்தை பங்கீட்டு கொள்வதற்கும் அனைவருக்கும் சுதந்திரமும் உரிமையும் உண்டு.

(2) ஏதாவது விஞ்ஞான, இலக்கிய மற்றும் கலைப்படைப்புக்களின் மூல கர்த்தாவாக இருக்கின்ற ஒருவருக்கு அச்சொத்தை பாதுகாப்பதற்கும் மற்றும் பதிப்புரிமை வழங்கவும் உரிமை உண்டு.

வெளியீட்டு உரிமை உலக அளவில் செயற்படுவதோடு, இலங்கையிலும் வெளியீட்டு உரிமை தொடர்பான சட்டம் உருவாக்கப்பட்டுள்ளது. அது,

1979ம் ஆண்டு 52ம் இலக்க புலமைச் சொத்து சட்டம் ஆகும். அது மறுபரிசீலனை செய்யப்பட்டு, தற்போது 2003ம் ஆண்டு 36 இலக்க புலமைச் சொத்து சட்டம் என பெயர் பெற்றுள்ளது. இதில் 6ம் பிரிவில் 1ல் பின்வருமாறு குறிப்பிடப்பட்டுள்ளது.

6 (1) (இங்கு படைப்புக்கள் ஆக்கம் எனக் குறிக்கப்படும்) விசேடமாக கீழ்க்காணும் இலக்கிய, கலை மற்றும் விஞ்ஞான துறைகளைச் சேர்ந்த அனைத்தும் புலமைச் சொத்துக்களும் இலக்கிய, கலை மற்றும் விஞ்ஞான ஆக்கங்களாகப் பாதுகாக்கப்பட வேண்டும்.

(அ) புத்தகங்கள், பத்திரிகைகள், கட்டுரைகள், கணினி நிகழ்ச்சிகள் மற்றும் ஏனைய எழுத்து ஆக்கங்கள்

(ஆ) பேச்சு, போதனை, அறிவித்தல், தலைமையுரை மற்றும் ஏனைய வாய்மொழி ஆக்கங்கள்

(இ) நாட்டிய, இசை, மற்றும் நாடக ஆக்கங்கள்

(ஈ) சில கருத்துக்களை முன்வைப்பதற்காக, மேடையேற்றுவதற்காக தயாரிக்கப்பட்ட மக்கள் வெளியீடுகள்

(உ) இசையுடன் பாடப்படுகின்ற வசனங்களடங்கிய அல்லது வசனங்கள் இல்லாத இசை சார் படைப்புக்கள்

(ஊ) கட்புல செவிப்புல ஆக்கங்கள்

(எ) கட்டடக்கலை நுட்ப ஆக்கங்கள்

(ஏ) ஓவியம், சிற்பம், குடைவுச் சிற்பம், நிறந்தீட்டல், லித்தோ அச்சிடல், அபூர்வமான பின்னல் வேலைகள் மற்றும் அழகியற்படைப்புக்கள்

(ஐ) நிழற்படக் கலைப் படைப்புக்கள்

(ஒ) ஆற்றுகைக் கலைப் படைப்புக்கள்

(ஓ) புவியியல், வீட்டு நிர்மாண நுட்பக்கலை, விஞ்ஞானம் தொடர்பான தேசப்படக்கலை, தளக்கோலம் மற்றும் முப்பரிமாணப் படைப்புக்கள்

படைப்பாளி புதிய தயாரிப்புகளை அல்லது படைப்புக்களை மேற்கொள்வது தமது அறிவில் ஆகும். புலமைச் சொத்து (அறிவுச்சொத்து) எனும் வகையில் இதன் சிறப்பம்சம் யாதெனில் வேறொருவரால் அதனை மீளச் செய்ய முடியாது என்பதாகும். அதனால் புலமைச் சொத்து தொட்டு உணர முடியாத சொத்தாகும். இதன் உரிமை இரண்டு வகைப்படும்.

(1) பொருளாதார உரிமை
(2) ஒழுக்க உரிமை

ஏதாவது படைப்புகள் தொடர்பாக படைப்பாளிக்குக் கிடைக்க வேண்டிய பொருளாதார நன்மை, பொருளாதார உரிமை இதன்பேறாகும். இதேபோல் படைப்பாளிக்கு தமது படைப்புகளை முழுமையாக விற்பதற்கோ, குத்தகைக்கோ / வாடகைக்கு விடுவதற்கு முழு உரிமை உண்டு. இவ்வாறு வழங்கப்பட்ட படைப்புக்களுக்கு படைப்பாளியினால் விற்பனையாளருக்கு அல்லது விநியோகஸ்தருக்கு எழுத்து மூலமான உரிமை வழங்கப்பட வேண்டும். ஏதேனும் படைப்பொன்றை அல்லது ஆக்கமொன்றை

வெளியீட்டிற்காக வழங்கியதன் பின்னர் அந்த ஆக்கத்தை அடிப்படையாகக் கொண்டு தயாரிக்கப்படும் பிரதிகளின் எண்ணிக்கைகளைப் பொறுத்து கணிசமான அளவு காப்புரிமைப் பங்கினை (Royalty) - 'ரோயல்ட்டி' கோர படைப்பாளிக்கு உரிமை உண்டு.

இலங்கையில் அவ்வாறு படைப்பாளியால் தயாரிக்கப்பட்ட ஆக்கங்களுக்கு உடன் பதிப்புரிமை வழங்கப்படுகிறது. ஆனால், அமெரிக்காவில் அந்த ஆக்கம் பதிவு செய்யப்பட்ட பின்னரே பதிப்புரிமை வழங்கப்படும். இலங்கையில் இவ்வாறு வழங்கப்பட்ட படைப்புகளின் பதிப்புரிமை மூலம் படைப்பாளி தமது வாழ்க்கை காலம் முழுவதும் சுமார் 75 வருடங்களுக்கு செல்லுபடியான பின்னர் அது பொதுச் சொத்தாக கொள்ளப்படும் என புலமை சொத்துக்கள் சட்டம் கூறுகிறது.

ஒழுக்க உரிமை யாதெனில், ஆக்கத்திற்கான படைப்புரிமை என்பதன் அடிப்படையில் படைப்பாளியின் பெயரை ஆக்ககர்த்தா எனக் குறிப்பிடுதலுக்கான உரிமையாகும். பொருளாதார உரிமை போன்று இந்த உரிமை வேறு ஒருவருக்கு கைமாற்றத்தகுந்தது அல்ல. தமது படைப்பின் பொருளாதார உரிமையை படைப்பாளி இன்னொருவருக்குக் கைமாற்றிய பின்னரும், படைப்பாளி ஆக்கியோன் என்ற ரீதியில் தனது பெயரைப் பயன்படுத்துவதற்கு அவருக்கு சட்ட ரீதியான உரித்து இதனால் வழங்கப்படுகிறது.

எந்தவொரு நாட்டிலும் புலமைச் சொத்துக்களை பாதுகாக்கும் நோக்கில்தான் சட்டம் தொழிற்படுகிறது. இது முக்கியமாக படைப்பாளியைப் பாதுகாக்கும் நோக்கம் கொண்டதாகும். இலங்கையில் இவ்வாறு புலமைச்சொத்துக்கள் சட்டம் மீறப்படும் போது குற்றவாளியை நீதவான் முன்நிலையில் நிறுத்தும் போது தண்டனையாக குறைந்தது ரூ. 500,000 அல்லது குறைந்தது 6 மாத சிறை தண்டனையாக அல்லது இரண்டு தண்டனைகளுக்கும் அவர் உள்ளாக வேண்டி வரலாம்.

எந்தவொரு நாட்டிலும் வெளியீட்டு உரிமைகள் தொடர்பான சட்டங்கள் பிறப்பிக்கப்படுவது படைப்பாளிகளின் புலமைச் சொத்துக்களைப் பாதுகாக்கவே ஆகும். அதேபோல், இச் சட்டங்கள் தமது உரிமைகள் காக்கப்படுவதனூடாக படைப்பாளிகளை உற்சாகப் படுத்தவும் செய்யும்.

**செயற்பாடு** 2

1. வெகுசன ஊடகப் பண்பாட்டில் ஒழுக்க நெறிகள் மற்றும் சட்டத்தைப் பாதுகாப்பதன் முக்கியத்துவம் பற்றி 300 - 350 சொற்களில் பத்திரிகையில் வெளியிடுவதற்கான கட்டுரையைத் தயாரிக்க.

2. மேற்குறிப்பிட்ட விடயம் தொடர்பாக ஏற்கனவே வெளியான அல்லது எழுதப்பட்ட கட்டுரைகளை சேகரித்து புத்தகமாக்குங்கள்.

3. வெகுசன ஊடகத்தில் ஒழுக்கநெறிகள் மற்றும் சட்டங்கள் மீறப்படும் சந்தர்ப்பங்கள் தொடர்பாக பத்திரிகை, வானொலி, தொலைக்காட்சி நிகழ்ச்சி களைச் சேகரித்து அவற்றை பட்டியலிடுங்கள்.

# 06 விமர்சனமிக்க பெறுநர்




## குறிக்கோள்

தொடர்பாளன் மற்றும் பெறுநருக்கிடையே இருவழித் தொடர்பு நிலவுகிறது. இத்தொடர்பானது வலுமிக்கதாகும்போது தொடர்பாடல் செயன்முறையும் வெற்றியடைகின்றது. தொடர்பாளனை மட்டும் மையப்படுத்தாது பெறுநனைப் பற்றியும் கவனத்தை செலுத்துவதன் மூலம் தொடர்பாடல் செயன்முறையானது, சனநாயக வடிவத்தைப் பெறுகின்றது. இதன்பொருட்டு தொடர்பாளனுக்கும் பெறுநனுக்குமிடையே சிறந்த புரிந்துணர்வு இருப்பது மிக அவசியமாகும்.

தொடர்பாடலின்போது, தொடர்பாளரிடம் பல்தரப்பட்ட குறிக்கோள்கள் இருக்கக் கூடும். தொடர்பாடலில் வெளிப்படையான குறிக்கோள்களைப் போலவே மறை முகமான குறிக்கோள்களையும் இனங்காண்பது பெறுநரைப் பொறுத்தமட்டில் ஒரு முக்கியமான விடயமாகும். ஊடக நுகர்வின்போது விமர்சனமிக்க பெறுநராக இருப்பதனால் ஊடகத்தால் உண்டாகக்கூடிய எதிர்மறையான தாக்கங்களை இழிவளவாக்கிட முடியும். இதற்காக ஒவ்வொரு ஊடகங்களையும் ஒப்பிட்டு தனித்தனியாக அவை பற்றி கற்றுக் கொள்ளக்கூடிய திறன்களை விருத்தி செய்து கொள்ள வேண்டும். பெறுநர்கள் ஊடகம் தொடர்பாக விழிப்புணர்வுகொள்வதைப் போலவே ஊடகத்துக்கு செயற்திறனோடு துலங்கல்களையும் காட்டுவதன் மூலமாக ஊடகத்தின் வழியாக பொது சமூகக்குறிக்கோள்களை எய்துவதற்கும் வாய்ப்பு உருவாகிறது. ஒவ்வொரு ஊடகமும் கொண்டுள்ள, கல்வியைப் பெற்றுத் தரும் இயலுமையானது பல்தரப்பட்டவையாகும். ஊடக ஆக்கத்திறனைப் போன்றே பொறுப்புணர்வோடு நுகர்வு செய்தலும் விமர்சன மிகு பெறுநருக்குரிய தேர்ச்சி களுக்கு உரித்தான விடயமாகும்.

## 6.1 விமர்சனமிக்க பெறுநரின் பண்புகள்

### 6.1.1 விமர்சனமிக்க பெறுநரின் பண்புகளை இனங்காணல்

தொடர்பாடல் செயன்முறையொன்று வெற்றிகரமாவது, தொடர்பியலாளர் மற்றும் பெறுநர் ஆகிய இருசாராருக்குமிடையேயுள்ள துடிப்பான பங்கேற்றலினாலேயே என்பதை நீங்கள் இப்போது நன்கு விளங்கிக் கொண்டிருப்பீர்கள். வினைத்திறன் மிகு தொடர்பாடலினூடாக தொடர்பாளனின் குறிக்கோள்களைப் போலவே பெறுநரின் குறிக்கோளும் எய்தப்படல் வேண்டும். வெகுசன ஊடக நுகர்வு தொடர்பான இக் கருத்தானது அவ்விதமாகவே இருப்பினும் வெகுசன ஊடகத்தில் அத்தகைய பயன்பாடு எப்போதும் பேணப்படுமாவென்பது பற்றி பெறுநர்கள் கவனமாக இருப்பது முக்கியமானதாகும். விமர்சனமிக்க பெறுநர்கள் தேவைப்படுவது இதனாலேயே ஆகும். ஊடகத்துக்கும் பெறுநர்களுக்குமிடையில் இருவழித் தொடர்பாடல் ஒன்றைக் கட்டியெழுப்புவதில் விமர்சனமிகு பெறுநரின் பண்புகள் மிகவும் முக்கியமானதாகும்.

**விமர்சனமிக்க பெறுநரின் பண்புகள்**

விமர்சனமிக்க பெறுநரின் பண்புகள் என்பது ஊடகத்தினூடாக பெறுநருக்கு அனுப்பப்படுகிற செய்திகளைப் பகுப்பாய்வு செய்திடவும், பொறுப்புணர்வுடன் நுகர்வு செய்திடவும் உள்ள தேர்ச்சியாகும். ஊடகச் செய்திகள் பல்வேறு குறிக்கோள்களை முதலாகக் கொண்டு உருவாக்கப்படுகிறன்றன. சில குறிக்கோள்கள் வெளிப்படையாகக் காணப்படும். எனினும் சில மறைந்துள்ள குறிக்கோள்களை இனங்கண்டு கொள்ளுமளவுக்கு விமர்சனத்திறன் பெறுநருக்கு இருத்தல் வேண்டும். இதற்கு உதாரணமாக தொலைக்காட்சி, வானொலி, செய்தித்தாள், சஞ்சிகைகள், இணையத்தளம் ஆகியவற்றை எடுத்துக் கொள்ளலாம். இங்கு பொறுப்புக் கூறல் என்பதனால் கருதப்படுவது யாதெனில் தமக்கும் சமூகத்துக்கும் எதிர்மறை விளைவை உருவாக்காத விதத்தில் ஊடகத்தை நுகர்வு செய்தலாகும்.

ஊடகத்தை அவநம்பிக்கையுடனும் அல்லது சந்தேகத்துடனும் நோக்குவதன் காரணம் என்ன என்கின்ற பிரச்சினை எவரேனும் ஒருவரிடம் ஏற்படக்கூடும். எந்தவொரு தொடர்பாடல் செயன்முறையின் போதும் தொடர்பியலாளர் குறிக்கப்பட்ட குறிக்கோளில் நின்று செயற்படுகின்றான். அக்குறிக்கோளானது தொடர்பியலாளரது அல்லது பெறுநரது அல்லது சமூகத்தினது பொது நன்மைக்கான அல்லது தீமைக்கான காரணமாக இருக்கக்கூடும்.

விமர்சனமிக்க பெறுநர் எனும் தகுதியைப் பெற்றுக்கொள்ள, இவ்வகையில் பெறுநரால் தொடர்பாடல் குறிக்கோள்கள் இனங்கண்டுகொள்ளப்படுதல் மிக முக்கியமான தாகும்.

## தொடர்பாடல் குறிக்கோள்களை இனங்காணல்

ஆசிரியரின் உதவியோடு வகுப்பறையில் பின்வரும் செயற்பாடுகளில் ஈடுபடுங்கள்.

ஒருவர் வகுப்பில் கடைசியாக அமர்ந்திருக்கும் மாணவனது காதில் எதையாவது இரகசியமாகக் கூறுங்கள். அதன்பின்பு அவ்விரகசியத்தை அமர்ந்திருக்கும் வரிசை ஒழுங்கின்படி ஒருவருக்கொருவராக பரிமாறிக் கொள்ளுங்கள். கடைசி மாணவனுக்கு கேட்கக் கிடைத்த இரகசியத்தை முதலில் இருந்த மாணவனுக்கு கிடைத்த தகவலோடு ஒப்பிட்டுப் பார்க்கவும். முதலில் சொல்லப்பட்ட இரகசியக் கூற்றுக்கு முற்றிலும் வித்தியாசமான கூற்றை இறுதியில் பார்க்க முடியும்.

இங்கு நடந்திருக்கக் கூடியது என்ன?

- கேட்ட செய்தியானது, உடன் ஒருவருக்கு மறந்துபோனதன் காரணமாக அல்லது சரியாக கேட்காது விட்டதனால் கூற்று திரிபடைதல்.
- தனது இரசனைக்கேற்ப யாரேனும் ஒருவரால் தகவல் மாற்றம் பெறுதல்.

ஒருவரால் ஏதேனும் நோக்கங்கள் காரணமாக நினைத்துப் பார்க்காமலே தகவல் திரிபடைதல் போன்ற பல விடயங்கள் நடக்கக்கூடும்.

இதன்படி ஏதேனும் தொடர்பாடல் நடவடிக்கையின் போது, தனக்குக் கிடைக்கின்ற தகவல் ஒன்றினை ஏதேனும் மாற்றத்துக்குள்ளாக்கி முன்வைப்பதற்கான வாய்ப்பு இருக்கின்றதென்பது உங்களுக்குப் புரிகின்றதா?

வகுப்பறையில் இது நகைச்சுவையைத் தோற்றுவிக்கும் விடயமாக இருப்பினும் சமூகத்தில் அத்தகைய நிகழ்வுகள் பாரதூரமான பிரச்சினையை உருவாக்குவதற்கு காரணமாகக் கூடும்.

குறிப்பிட்ட ஒன்றை மூலாதாரமாகக் கொண்ட தகவல்களை இவ்வாறு நினைத்தபடி திரிபுபடுத்த முயற்சி செய்வது ஏன்?

1. ஏதேனும் சந்தர்ப்பமொன்றை தமது நன்மைக்கு ஏற்றப்படி அமைத்துக் கொள்வதற்காக.
2. தாம் ஒரு தவறைச் செய்துவிட்டபோது அதனை மறைப்பதற்கும் அந்தப் பழியை வேறொருவர் மீது சுமத்துவதற்குமாக
3. தமது சாராருக்கு சாதகமாக மனிதர்களை திசை திருப்பிட அல்லது வாதம் செய்து வெற்றி கொள்வதற்கு

ஆகிய காரணங்களாக இருக்கலாம்.

அப்படியானால் வேறொருவர் அல்லது நிறுவனம் அறிக்கையிட்டால்,



நீங்கள் அதை நம்புவீர்களா?



நீங்கள் அதைப் பற்றி வினா எழுப்புவீர்களா?

விமர்சனமிக்க/விழிப்புணர்வுடைய பெறுநர் ஒருவர் தொடர்பியலாளர் தொடர்பாடல் செய்யும் செய்தியைப் பற்றி வினா எழுப்புவார்.

- எனக்கு இந்த செய்தியை முன் வைத்தது ஏன்?
- செய்தியை எனக்கு பகிரங்கமாக பெற்றுத்தர பயன்படுத்திய தந்திரோபாயம் என்ன?
- முன்வைப்பவரின் சமூக, அரசியல், பண்பாட்டுச் சூழல் எத்தகையது?

போன்ற வினாக்களை எழுப்புவதனால் தொடர்பியலாளரின் உண்மையான குறிக் கோள்களை இனங்கண்டு கொள்ள முடியும்.

உதயன் பாடசாலையில் தரம் 11 இல் கல்வி கற்கிறான். அவனது தம்பி படிப்பது 6 ஆம் தரத்திலாகும். உதயன் வீட்டுக்கு வந்த போது தனது சகோதரன் ஜனரஞ்சக மானதொரு தொலைக்காட்சி அலைவரிசையை மிகவும் ஆர்வத்தோடு பார்த்து இரசித்துக்கொண்டிருப்பது தெரிந்தது.

உதயன் : தம்பி, நீ பார்க்கிறது என்ன நிகழ்ச்சி?

தம்பி : அண்ணா, இந்த தொலைக்காட்சி நாடகம் பார்ப்பவர்கள் பணப் பரிசினை வெற்றி கொள்ள முடியும். அதனாலேயே நான் இதைப் பார்த்துக் கொண்டிருக்கிறேன். நாடகத்தைப் பார்க்கும் போதே பணமும் கிடைக் கின்றது.

உதயன் : தம்பி, உங்களைப் போல இரசிகர்கள், ஊடகம் நமக்கு தருகிற எல்லாமுமே எங்களது நன்மைக்காகத் தருவதாகவே நினைக்கிறார்கள். உனக்குப் பணம் கிடைக்கலாம். ஆனால் அந்தப் பணத்துக்காக இன்னும் பல விடயங்களை நாம் இழந்து போகின்றோம். மற்றது நீங்கள் வெற்றி பெறுவீர்களா என்பது யாருக்குத் தெரியும்?

தம்பி : நான் எதை இழந்துபோகிறேன்?

உதயன் : நீ படிப்பதற்குரிய நேரம் இல்லாமல் போகிறது. மற்றது எங்களுடைய ஆசிரியை கூறினார். சிறுவர்கள், சில தொலைக்காட்சி நிகழ்ச்சிகளைப் பார்த்து விட்டு வளர்ந்த பெரியவர்களைப் போல நடந்து கொள்ளப் பழகி விடுகிறார்கள் என்று. சிறு பிள்ளைப் பராயத்தில் நாங்கள் செய்வதற்கு அதிக வேலை இருக்கிறதல்லவா? நாம் அவற்றில் மனதை ஈடுபடுத்த வேண்டும். பார் தம்பி! நீ ஒரு நாளைக்கு நான்கு அல்லது 5 மணித்தியாலங்கள் தொலைக்காட்சிக்கு முன்னே வீணாக்குகிறாய் அல்லவா? அந்த நேரத்தைப் படிப்பதற்கு செலவழித்தால் எவ்வளவு பிரயோசனமாக இருக்கும். இந்த தொலைக்காட்சி நாடகங்களைப் பார்க்க ஆரம்பித்த பிறகு உனது தவணைப் பரீட்சை புள்ளிகள் குறைந்து விட்டதாக அம்மா கூறுவதைக் கேட்டேன். அது மட்டுமா? விளம்பர அறிவித்தல்களில் காண்கிற கண்டபொருள்களை எல்லாம் வாங்கித் தரும்படி அப்பாவுக்கு கரைச்சல் கொடுக்கிறாய். இப்போது நீ நண்பர்களோடு மாலையில் விளையாடப் போவதும் இல்லை. அப்படித்தானே! கொஞ்சம் நாள் போனால் உனக்கு நண்பர்களும் இல்லாமல் போய்விடுவார்கள்!

தம்பி : அண்ணா நேற்று நாங்கள் பார்த்த இயற்கை மரங்கள் பற்றிய நிகழ்ச்சி உங்களது விஞ்ஞான பாடத்துக்கு மிகவும் முக்கியமாக இருந்ததெனக் கூறினீர்கள் அல்லவா?

உதயன் : ஆம் தம்பி! அவ்வாறு நமக்கு பயன்தருகிற விடயங்களும் ஊடகங்களில் ஒளிபரப்பப்படுகின்றன. அவற்றை தெரிந்தெடுத்துக் கொள்ள நமக்கு இயலுமாதல் வேண்டும்.

மேலேயுள்ள கலந்துரையாடலில் உதயனின் சகோதரன் விமர்சன நோக்கில்லாமல் ஊடக நுகர்வு செய்யுமொருவனாக இருப்பதற்கு அவற்றின் தாக்கம் பற்றிய விளக்கம் இல்லாமல் செயற்படுவதே காரணமாகிறது. இருப்பினும் அவன் ஊடகத்தின் மறைமுகத் தாக்கம் மற்றும் ஊடகச் செய்தியை தெரிந்தெடுத்து நுகர்தல் பற்றிய விளக்கமொன்றை தனது சகோதரனின் வழிகாட்டலின் கீழ் பெற்றுக் கொண்டான். உங்களாலும் இது போன்ற வழிகாட்டலை உங்களது அண்மித்தவர்களுக்கு பெற்றுக் கொடுக்க முடியும்.

ஊடகங்கள் பெரும்பாலும் வெளித்தோற்றக் கவர்ச்சிகளைக் காண்பித்து பெறுநர்களை / இரசிகர்களைக் கவர்ந்திழுக்கவே முயற்சி செய்கின்றன. பரிசுகள், பணம், அழகியல் நிறைந்த, புதுமையான சிறிய பொருள்களைப் பெற்றுக் கொடுப்பதன் மூலம் இரசிகர்களை தமக்கு ஏற்றவிதமாக நடத்துவதற்கு ஊடகங்கள் திட்டமிட்டு நடவடிக்கைகளை மேற்கொள்கின்றன. அதன் மூலம் இரசிகனை வைத்து வர்த்தகர்களின் நோக்கங்களை நிறைவேற்றிக் கொள்ளத்தேவையான பின்புலத்தையும் தயாரித்துக் கொடுக்கின்றன.

ஊடகத்தின் வெளிப்புறத்தில் புலப்படாத இந்த உள்ளார்ந்த குறிக்கோள்களை விமர் சனத்திறனுள்ள பெறுநன் மட்டுமே இனங்கண்டு கொள்கிறார்கள். இதன்படி தமக்கு அவசியப்படுகிற பயனுள்ளவைகளை மட்டும் தெரிந்தெடுத்து அவர்கள் செயற்படுவர். அத்தோடு மட்டும் நின்றுவிடாது தமது துலங்கலை ஊடகத்துக்கு எடுத்துக் காட்டி ஊடகச் செயற்பாடுகளில் நன்மையான மாற்றமொன்றை உண்டாக்குவதற்கு விமர்சனத்திறன் மிகு பெறுநர் முயற்சி செய்கிறார். இதற்காக தனிப்பட்ட ரீதியில் ஒழுங்கமைத்துக்கொண்ட சமூகமாகவும் ஊடகத்துக்கு துலங்கலைக் காட்ட அவனால் முடிகின்றது. இதன்படி விமர்சனத்திறன் மிக்க பெறுநர்தன்மையை ஊடகக் கட்டுப்படுத்தலுக்கான ஒரு ஆயுதமாக பயன்படுத்துவதற்கு பெறுநருக்கு இயலுமாயிருத்தல் வேண்டும்.

## விமர்சனத்திறன் மிக்க பெறுநரிடம் இருக்க வேண்டிய தேர்ச்சிகள்

- வெகுசன ஊடகத்தின் வழியாக முன்வைக்கின்ற விடயங்களை சரியாக விளங்கிக்கொள்ளும் திறன்
- ஊடகத்தினூடாக மறைக்கப்படுபவை எவையென்பதை விளங்கிக் கொள்ளும் திறன்
- வெகுசன ஊடகங்கள் எந்த குறிக்கோள்களுடன் செயற்படுகின்றன என்பதை புரிந்துகொள்ளும் திறன்
- வெகுசன ஊடகங்களினால் மேற்கொள்ளப்படும் முயற்சிகள் தன்னை எத்தகைய நபராக ஆக்குகிறது என்பதை நன்கு விளங்கிக் கொள்ளும் ஆற்றல்
- பெறுநரைத் தூண்டுவதற்காக ஊடகங்களினால் மேற்கொள்ளப்படும் தந்திரோபா யங்களை விளங்கிக் கொள்வதற்கான திறன்கள்
- ஊடகங்கள் எவ்வாறான தகவலை வழங்கியபோதும் தமக்கு தேவையானவற்றை மாத்திரம் வடிகட்டிப் பெற்றுக் கொள்ளும் திறன்

- ஊடக செயற்பாடுகள் தொடர்பான தமது வெளிப்பாட்டினை தனிப்பட்ட ரீதியிலும் ஒழுங்கமைப்பு ரீதியாகவும் ஊடகங்களுக்கு முன்வைத்தலூடாக ஊடகங்களுடன் இடைத் தொடர்பினைப் பேணுவதற்குரிய ஆற்றல்கள்

ஊடகத்தைப் பொறுத்தமட்டில், விமர்சனத்திறன் மிக்கதாயிருத்தல் என்பது ஊடக நுகர்வினால் மட்டும் பெற்றுக் கொள்ளக்கூடிய தேர்ச்சி அல்ல. அதற்காக சமூகம் பற்றிய சிறந்த விளக்கத்தைக் கொண்டிருத்தல் வேண்டும்.

- நூல்கள், சஞ்சிகைகள் போன்றவற்றை வாசித்து அறிவை விருத்தி செய்து கொள்ளல்.
- கேட்டுத் தெரிந்து கொள்பவர்களுள்ள இடங்களில் அவர்களோடு பழகுதல்.
- தம்மைச் சூழவுள்ள சமூகத்தில் நடக்கும் விடயங்களைப் பற்றி விழிப்பாக இருத்தல்.
- சமூகத்தில் ஊடக உரிமையாளர்கள் மற்றும் கண்காணிப்பு நடத்துகிற குழுக்களின் நடத்தைகள் தொடர்பாக விளக்கத்துடன் இருத்தல்.
- சந்தைச் செயற்பாடுகள் பற்றிய விளக்கத்தோடு இருத்தல்

ஆகியன விமர்சனத்திறன் மிக்க பெறுநர்களை வலுவூட்டும்.

### 6.1.2 வெகுசன ஊடக விமர்சனம்

வெகுசன ஊடகங்கள் வழியாக நடைபெறுகின்ற தீமையான தாக்கங்களிலிருந்து தப்பித்திருப்பதற்கு பெறுநர் விமர்சனத்திறனுடையவனாதல் அத்தியாவசியமாகும். ஊடகச் செய்திகளை ஊடுருவிப் பார்த்திடும் ஆற்றலானது, ஊடகங்களைப் படிப்பதனால் வரும் அனுபவங்களால் கிடைக்கின்ற ஒன்றாகும். ஊடுருவிப் பார்த்தல் என்பது செய்திகளில் மேலெழுந்தவாரியாக தெரிகின்ற அர்த்தங்களை மட்டுமல்ல மறைந்திருக்கும் அர்த்தங்களையும் இனங்காணுகின்ற ஆற்றலாகும். மிகவும் அழகியல் சார்ந்ததாக பெறுநர் நினைக்கின்ற செய்தியொன்று கூட சமூகத்துக்குப் பாதகமான பாதிப்புகளை ஏற்படுத்த இடமுண்டு. அவ்வாறே ஏதேனும் செய்தியில் நாம் கண்டு கொள்ளாத உட்கருத்து இருக்கக்கூடும். எப்படியிருப்பினும் இதனைப் புரிந்துகொள்ளத் தேவைப்படுவது ஊடகச் செய்தியொன்றினை பல்வேறு கோணங்களில் வைத்துப் பார்க்கும் திறனே ஆகும். இதற்கு பெறுநரின் விமர்சனத்திறன் மிக்க சிந்தனை உதவியாக இருக்கும். சாதாரண பெறுநரின் விமர்சனத் திறன்மிக்க சிந்தனையை விருத்தி செய்திட ஊடக விமர்சகர்களின் பங்களிப்பு முக்கியமானதாகும்.

ஊடக விமர்சனத்தின் போது செய்திகளைத் தனியாக வைத்துக் கவனிக்காது, அதற்குரிய பின்புலத்துக் குரித்தான காரணிகளைப் பற்றிய கற்கையும் அத்தியாவசியமானதாகும். இங்கு ஒவ்வொரு ஊடகம் மற்றும் ஊடகச் செய்திகள் பற்றி தனித்தனியாகவும் ஒன்றுடனொன்றை ஒப்பீட்டு ரீதியிலும் கற்றிட முடியும். செய்திகள் வாயிலாக முன்வைக்கப்படுகின்ற கருத்துக்கள் எவையென்பதைத் தீர்மானித்திட பல காரணிகள் ஏதுவாகின்றன.

- ஊடக நிறுவனத்தின் உரிமைத்துவம்.
- பொருளியல் மற்றும் சமூகக் காரணிகளுக்கும் ஊடகத்திற்குமிடையிலான உறவு.
- உரிய கால கட்டத்தில் நிலவுகின்ற அரசியல் சூழ்நிலைகள்.
- பண்பாட்டுப் பின்னணி.

**ஊடக விமர்சகர்**

ஊடக விமர்சகர் என்பவர் ஊடகத்துக்கும் பெறுநருக்குமிடையிலான தொடர்பினை வலுப்படுத்துபவராவர். ஊடகம் மற்றும் ஊடகச் செய்திகளின் உண்மையியல்புகளை பெறுநருக்கு அறிமுகப்படுத்த வேண்டிய கடமை ஊடகவிமர்சகருக்குரியதாகும். அதிகமான பெறுநர் குழுவினர் ஊடகச் செய்திகளை ஊடுருவிப் பார்க்கின்ற திறன்களிலில்லாதவர்களாக உள்ளனர். ஊடகச் செய்திகளின் உட்கருத்து, அதன் சமூகத் தாக்கம், மற்றும் மறைந்துள்ள அர்த்தங்கள் தொடர்பாக பெறுநரை அறிவுறுத்துவது விமர்சகரினால் செய்யப்பட வேண்டிய பணியாகும். இருப்பினும் பெறுநர் ஊடக விமர்சனம் தொடர்பாக அவதானத்துடன் இருப்பது முக்கியமாகும். செய்தித்தாள், நூல்கள், சஞ்சிகைகள் அல்லது இணைய வலைப்பின்னலில் வெளியாகும் விமர்சனங்களின் துணையோடு ஊடகம் தொடர்பாக தமது பார்வையை விரிவாக்கிக் கொள்வதற்கு பெறுநன் அக்கறை காட்ட வேண்டும்.

**சுய கற்றலுக்காக**

ஒரே நாளின் செய்தித் தாள்கள் இரண்டில் அடங்கியுள்ள செய்திகள் எவையென குறித்துக் கொள்க. இங்கு பிரதான செய்தி மற்றும் முதலாம் பக்கத்தில் இடம் பெறும் செய்திகள் எவையென வெவ்வேறாக குறித்துக் கொள்ளவும். கீழ்வரும் விடயங்களை அவதானமாக நோக்குங்கள்.

- செய்தித் தாள்கள் இரண்டிலுமுள்ள வேறுபடும் செய்திகளைத் தெரிவு செய்த சந்தர்ப்பங்கள்
- பிரதான செய்தி வேறுபட்டு காணப்படும் சந்தர்ப்பங்கள்
- ஒரே செய்தியில் சில வேளைகளில் முக்கிய தகவல்கள் சேர்த்துக் கொள்ளப் படாமலுள்ள சந்தர்ப்பங்கள்
- ஒரே செய்திக்கு ஒரு செய்தித் தாளில் அதிக அவதானிப்பும், மற்றைய செய்தித்தாளில் அதே செய்திக்கு குறைந்த அவதானிப்பும் தரப்பட்டுள்ள சந்தர்ப்பங்கள்

இந்த அவதானிப்பின் போது ஊடக நிறுவனத்தின் உரிமைத்துவம், இலக்கு வைக்கப்பட்ட பெறுநர் குழு, சமகால சமூக, அரசியல் பின்புலம் ஆகியன பற்றி அதிக கவனம் செலுத்தப்படல் வேண்டும். இவ்விதமாக தொலைக்காட்சி அல்லது வானொலி ஊடக அலைவரிசைகள் இரண்டு அல்லது பலவற்றினைப் பற்றி அவதானிக்க வேண்டும்.

படிப்படியாக வெகுசன ஊடக செய்திகளை அவதானிப்பதற்குப் பழக்கப்படுத்துவதன் மூலமாக விமர்சனத்திறன்மிகு பெறுநருக்கான தேர்ச்சிகளை விருத்தி செய்து கொள்ள முடியும். இதற்காக ஊடக நடத்தை தொடர்பான சிறந்த விளக்கத்தோடு அதனைப் பின்பற்ற வேண்டும்.

ஒரே நேரத்தில் இரண்டு தொலைக்காட்சி அலைவரிசைகளில் ஒளிபரப்பாகின்ற நிகழ்ச்சிகள் எவையென்பதை நீங்கள் அவதானித்ததுண்டா? பெரும்பாலும் ஒரே நேரத்தில் போட்டி அலைவரிசைகளினால் ஒரே விதமான நிகழ்ச்சிகள் ஒளிபரப்பப்பட்டு பெறுநர்களைக் கவருகின்ற போட்டியிலீடுபடுவதைக் காணலாம். விழாக்காலங்களில், தேர்தல் முடிவுகள் ஒளிபரப்பாகும் விசேட சந்தர்ப்பங்களில், அதிகமானோர் தொலைக்காட்சியைப் பார்க்கின்ற மாலை நேரங்களில், இந்தப் போட்டி கூர்மையாக செயற்படுவதைக் காணலாம்.

வெகுசனஊடகங்கள்பல்தரப்பட்டதந்திரோபாயங்களைப்பயன்படுத்திபெறுநர்களைக் கவர்ந்திழுத்துக் கொள்கின்றன. பெறுநர்கள் நீண்ட நேரம் தொலைக்காட்சியின் முன்னே அமர்ந்திருப்பர். ஊடகங்களின் மூலம் வழங்கப்படுகின்ற அறிவுறுத்தல்களைப் பின்பற்றுவர். இருந்தபோதும் அக்கால நேரத்துள் பெறுநர்களுக்கு உண்மையாகவே பயன்தரக்கூடிய எதையாவது ஊடகங்கள் பெற்றுக் கொடுத்துள்ளனவா என்பதை விசாரித்துப் பார்க்க வேண்டும். பெரும்பாலும் இதன் வழியாக பெறுநர் தனது காலத்தையும் பணத்தையும் மட்டுமல்ல சுயமாகச் சிந்திப்பதையும் இழந்து போய் விடுகிறார்.

### 6.1.3 ஊடகங்களுக்கான துலங்கலை முன்வைத்தல்



ஊடகத்துக்கான துலங்கலை எக்காரணத்துக்காக முன் வைக்கின்றனர்?

ஊடகம் மற்றும் பெறுநருக்கிடையேயுள்ள செயன்முறை வினைத்திறனுடையதாக மீள் ஒழுங்கு செய்திடும் விருப்பத்தை நிறை வேற்றிக் கொள்வதற்காக

இதன் படி ஊடகத்துக்கான துலங்கலைக் காட்டுவதென்பது செய்தி அபிவிருத்தி சார்ந்ததொரு செயற்பாடாகும். ஊடகம் பெறுநரில் நேயமுள்ளதாக செயற்படுவதற்குத் தூண்டப்படுகின்றதொரு செயலாகும். இது ஒரு விதத்தில் பெறுநர் வழியாக ஊடகத்தைக் கட்டுப்படுத்துதலாகும். எனவே இதற்காக பெறுநர் வலுமிக்கவனாதல் வேண்டும்.

பெறுநர் ஒருவனுக்கு தனியாக அல்லது ஒழுங்குபடுத்தப்பட்ட அமைப்பாக ஊடகத்தைப் பற்றிய துலங்கலை முன் வைத்திட முடியும். பாடசாலை ஊடகச் சங்கத்தின் துலங்கலை கடிதமாக எழுதித் தயாரித்து அதிபரின் அனுமதியின் கீழ் ஊடகச் சங்க செயலாளரின் கையொப்பத்துடன் உரிய ஊடக நிறுவனத்துக்கு அனுப்பமுடியும். அவ்வாறே பெறுநரின் துலங்கலுடன் கடிதமொன்றின் வழியாக பெறுநர் குழுவினது ஒப்பங்களையும் இட்டு முன்வைப்பதனால் அதிக தாக்கத்தை ஏற்படுத்த முடியும்.

**ஊடகத்தின்பால் துலங்கலை எடுத்துக் காட்டும்போது,**

- ஊடகச் செய்தியின் பலமும் பலவீனமும்
- ஊடகச் செய்திகளின் நன்மையான மற்றும் தீமையான இயல்புகள்
- ஆலோசனைகள் மற்றும் முறைப்பாடுகள்
- தமக்கு அல்லது சமூகத்துக்கு ஏற்படுகின்ற தீமையான பாதிப்புகள் ஆகியவற்றை முன்வைக்க முடியும். இதற்காக பலதரப்பட்ட முறைகளைப் பயன்படுத்த முடியும்.

**ஊடகத்தின் மீது துலங்கல்களை முன்வைக்கக்கூடிய முறைகள்**

- அஞ்சலட்டைகள்
- தொலைபேசி அழைப்பு
- மின்னஞ்சல்
- குறுஞ் செய்திகள்
- சமூக வலைப் பின்னல்கள் / இணையத்தளம்
- செய்தித் தாள்களுக்கு கடித ஆக்கங்கள்
- கட்டுரையாக எழுதி துலங்கலைக் காட்டுதல்
- நடை பவனி அல்லது ஆர்ப்பாட்டம் ஒழுங்கு செய்தல்

பெரும்பாலான இலத்திரனியல் ஊடக நிகழ்ச்சிகளில் துலங்கல்களை எழுதி அனுப்புவதற்கான முறைகள் முன்வைக்கப்படுகின்றன. அத்துலங்கல்கள் உரிய நிகழ்ச்சிகளின் தயாரிப்பாளர்களின் அவதானத்துக்கு அனுப்பி வைக்கப்படுகின்றன. அவ்வாறே பத்திரிகைகளின் வாசகர்களுக்கும் தமது கருத்துக்களையும் பிரச்சினைகளையும் வெளியிட என தனியான பக்கம் ஒதுக்கப்பட்டிருப்பதைக் காண

முடியும். ஊடகம் தொடர்பான தமது துலங்கல்களை அப்படியே வெளியிடுவதனால் ஊடகவியலாளர்களதும் மற்றும் ஒட்டுமொத்த சமூகத்தினதும் அவதானத்தை / கவனத்தை அதன்பால் ஈர்த்துக்கொள்ள முடியும்.




உரு 6.1

ஊடக பாதயாத்திரை அல்லது நடைபவனி அல்லது போராட்டம் ஆகியவற்றில் குழப்பம் விளைவிப்பனவாக அல்லாமல் ஊடகங்கள் மீது ஒரு கவனயீர்ப்புத் தாக்கத்தையுண்டாக்கும் குறிக்கோளுடன் சமாதானமான ஒரு கருத்து வெளிப்பாட்டுடன் நிகழ்த்த வேண்டும். ஊடகத்தினதும் பொது மக்களினதும் அவதானத்தை ஈர்ப்பதில் இலகுவாக வெற்றி பெறக்கூடிய ஒரு தந்திரோபாயமாக இம்முறையை அழைக்கலாம்.

பத்திரிகை அறிக்கை அல்லது கட்டுரையொன்றின் வாயிலாக ஒருவருக்கு குறிப்பிட்ட தீங்கொன்று நிகழ்ந்திருந்தால் அது தொடர்பாக நடவடிக்கைகளை எடுத்திட பத்திரிகை முறைப்பாட்டு ஆணைக்குழு நிறுவப்பட்டுள்ளது. அந்த நிறுவனத்துக்கு அத்தகைய நிகழ்வொன்றை அறிவிப்பதனால் பாதிக்கப்பட்ட சாராருக்கு நியாயமொன்றைப் பெற்றுக்கொடுக்க முடியும்.

| **வெகுசன ஊடகங்கள்/ நவீன ஊடகங்கள்** | **புதிய ஊடகங்கள்** |
|---|---|
| செய்தித்தாள், வானொலி, தொலைக்காட்சி, திரைப்படம் | குறுஞ்செய்தி (SMS), சமூக வலைப்பின்னல், (Social Networks) ஏனைய இணையத்தளங்கள் (Web), மின்னஞ்சல் (e-mail), இணையத்தளங்களில் வெளியாகும் செய்தித்தாள்கள், சஞ்சிகைகள் |

## 6.2 வெகுசன ஊடகங்கள், புதிய ஊடகங்கள் மற்றும் பெறுநர்

### 6.2.1 வெகுசன ஊடகங்கள், புதிய ஊடகங்கள் மற்றும் சமூகப் பயன்பாடு

தொழில்நுட்ப அபிவிருத்தியுடன் தொடர்பாடல் துறை கைகோர்த்துக் கொண்ட காரணத்தால் உருவாகிய ஊடக வகைகளாக வெகுசன ஊடகங்களையும் புதிய ஊடகங்களையும் குறிப்பிட முடியும். இவ் ஊடகங்கள் மனிதனின் இயற்கையான தொடர்பாடல் திறன்களை மேலும் அதிகரிக்கச் செய்வதில் வெற்றி கண்டுள்ளன.

மானுடத் தொடர்பாடலுக்கு எல்லைகளிட்டு தடைபோட்ட கோள மயக்காரணிகளை வெற்றிக்கொள்ள தொடர்பாடல் தொழில்நுட்பத்துக்கு இயலுமாயிற்று. இதன் வழியாக தொலைதூரத்திலிருக்கும் ஒருவருடன் இலகுவாகவும் உடனடியாகவும் தகவல்களைப் பரிமாற்றம் செய்து கொள்ள இயலுமாக இருக்கிறது. ஊடகங்களின் பிரபல்ய செயற்பாடானது விரிவானதொரு சமூக மாற்றத்தை உண்டாக்குவதில் வெற்றிபெற்றுள்ளது. அதற்கு வெகுசன ஊடகம் மற்றும் புதிய ஊடகங்களில் காணக்கூடியதாகவுள்ள சிறப்பியல்புகள் தாக்கத்தை ஏற்படுத்தியுள்ளன.

### வெகுசன ஊடகங்களின் சிறப்பியல்புகளும் அவற்றின் தாக்கமும்

செய்தித்தாள்கள், வானொலி மற்றும் தொலைக்காட்சி ஊடகங்கள் வாயிலாக ஒரே தடவையில் ஒட்டுமொத்த சமூகத்துக்கும் செய்திகளைப் பெற்றுக் கொடுக்க முடியும். இதன் வழியாக சமூகத்தின் பெரும்பான்மை மக்களிடையே பொது உணர்வொன்றினை உருவாக்குவதற்கு வெகுசன ஊடகத்துக்கு இயலுமாகியுள்ளது. முன்தினம் இரவு தொலைக்காட்சியின் அல்லது வானொலியின் செய்தியறிக்கையில் உள்ளடக்கப்பட்ட தகவல்கள் பற்றி காலையில் பலரும் சேர்ந்து கதைப்பது இதன் காரணமாகவே ஆகும். அவ்வாறே செய்தித்தாள்கள் பெரும்பாலானவை. ஒரே செய்தியை முதன்மைப்படுத்திக் கொண்டு பிரதான தலைப்புகளைத் துலாபாரமாக்கி அதன் மீது அனைத்து வாசகர்களது கவனத்தையும் செலுத்தும்படி செய்கின்றன. இது தொடர்பாக மேலும் விளக்கத்தைப் பெற்றுக் கொள்ள வெகுசன தொடர்பாடல் ஊடகம் பற்றி 10 ஆம் தரத்தில் கற்று முடித்த விடயங்கள் துணையாக இருக்கும்.

வெகுசன ஊடகத்தின் பொதுத் தகவல்களை உள்வாக்கிக் கொண்டு சமூகத்தின் பல்வேறு தனியாட்கள் ஒரே விதமாகச் செயற்படுவதைக் காண முடிகிறது. தனியாட்களின் தொழில் வயது, கல்வி மட்டம், ஆண் பெண் வேறுபாடு, சமூக அந்தஸ்து ஆகியவை வேறுபட்ட போதும் அவர்களது இரசனையும், வாழ்வியற் கோலங்களும் சமமாக இருத்தல் வெகுசன ஊடகம் முதன்மைப்படுத்திக் கொண்ட சமூகப் பண்பியல்புகளாகும்.

- பெரும்பாலானோரின் விருப்பப் பாடலாக இருப்பது உரிய கால கட்டத்தில் அதிக தடவைகள் வெகுசன ஊடகங்களில் ஒளி/ஒலிபரப்பான பாடலே ஆகும்.
- பெரும்பாலானோரின் விருப்பத்துக்குரிய விளையாட்டு எதுவெனில் வெகுசன ஊடகங்களில் அதிக இடம் ஒதுக்கீடு செய்யப்பட்டு, அடிக்கடி கேட்கவும், பார்க்கவும் கூடியதாகவுள்ள விளையாட்டு ஆகும்.
- அதிகமானோர் நுகர்வு செய்வது வெகுசன ஊடகங்களில் அதிக அளவில் வெளிப்படுத்திக் காட்டப்படுகின்ற பண்டங்கள் மற்றும் சேவைகளே ஆகும்.

எதுவாயிருப்பினும் இன்று சமூகத்துக்கு ஊடகங்களுக்குப் புறம்பாக எதுவும் செய்திட முடியாது. ஊடகமானது மக்களின் நாளாந்த வாழ்க்கையின் இன்றியமையாத தேவையாக மாறிவிட்டது. அன்றாட பொழுதுபோக்கு, சூழவுள்ள உலகம் பற்றிய

தகவல்கள், கல்வி, பண்பாடு போன்றவற்றை பகிர்ந்து வளர்ப்பதற்கு ஊடகங்கள் தேவைப்படுகின்றன.

**புதிய ஊடகங்களின் சிறப்பியல்புகளும் அவற்றின் தாக்கமும்**

அண்மைக் காலங்களில் உருவான புரட்சிகரமான தொழில்நுட்பமாகிய இலக்க முறைத் தொழில்நுட்பத்தை (Digital Technology) அடிப்படையாகக் கொண்டு புதிய ஊடகங்கள் தோற்றம் பெற்றன. புதிய ஊடகங்களின் பிரதான இயல்பாவது தனியாளாக நுகர்வதற்குரிய ஆற்றலைக் கொண்டிருப்பது ஆகும்.

> **புதிய ஊடகங்களின் இயல்புகள்**
>
> - கோளமய வரையறை இல்லாமை
> - பெறுநனின் விருப்பத்துக்கேற்ப செய்திகளைத் தெரிவு செய்திட இயலுமாதல்
> - கணினி, கைத்தொலைபேசி போன்ற பல்லூடகக் கருவிகளின் துணையோடு பயன்பெற வாய்ப்பு கிட்டுதல்
> - எந்தவொரு சந்தர்ப்பத்திலும் எந்த ஒரு இடத்திலும் இருந்து பயன்படுத்த முடியுமாயிருத்தல்
> - கோள ரீதியாக பரவுதல் நிகழ்ந்தமை
> - தொடர்புபடும் சகலருக்கும் இடைவினையாகத் தகவல்களை பரிமாற்றம் செய்து கொள்வதற்கும் மற்றும் வெட்டித் தொகுப்பதற்கும் (Editing) உள்ள ஆற்றல்

வெகுசன ஊடகங்களில் உருவான தாக்கத்துக்கு மாறானதொரு நிலைமை புதிய ஊடகங்களின் வழியாக சமூகத்தில் உண்டாகியது. வெகுசன ஊடகங்களினூடாக சமூகத்தில் பொது உணர்வொன்று உண்டாக்கப்பட்ட போதிலும் புதிய ஊடகங்கள் வழியாக சமூக உறுப்பினர்களிடையே தனிமைப் படுத்தல் உண்டாக்கப்பட்டது. அவ்வாறே தமது இரசனைக்கேற்ப வெவ்வேறாக தகவல்களை நுகர்வதற்கான ஆற்றலும் வசதியும் கிட்டின. கணினி, டெப்லற் கணினி, கைத்தொலைபேசி இலக்கமுறை தொலைக்காட்சி மற்றும் இலக்கமுறை வானொலி போன்ற ஊடகங்கள் சமூகத்துக்கு இது போன்ற பாதிப்புக்களை உண்டாக்குகின்றன.

### 6.2.2 ஊடகப் பெறுநர்களின் பல்வகைமை

செய்தித்தாள், வானொலி மற்றும் தொலைக்காட்சி போன்ற பல்விதமான வெகுசன ஊடகநுகர்வின் போது பெறுநர்கள் செய்திகள் தொடர்பாக துலங்கல்களைக் காட்டும் விதமானது பல்வேறுபட்டதாகும். அதற்கிணங்க பெறுநர்களின்

- வயது மட்டம்
- பண்பாடு
- கல்வி
- இரசனையின் இயல்பு
- அறிவு மற்றும் விளக்கம்
- விமர்சனத் திறன்

போன்ற காரணிகளை அடிப்படையாகக் கொண்டு இந்த பெறுநர்களின் பல்வகைமை உருவாகின்றன. பெறுநர்களை ஊடகச் செய்திகள் தொடர்பாக அவர்கள் செயற் படுகின்ற விதங்களுக்கிணங்க இரண்டு தொகுதிகளாகப் பிரித்துக் காட்ட முடியும்.

- இயக்கமற்ற / செயற்படாத பெறுநர்கள்
- இயக்கமுள்ள / செயற்படுகின்ற பெறுநர்கள்

## இயக்கமற்ற / செயற்படாத பெறுநர்கள்

ஊடகங்களிலிருந்து வரும் செய்திகளை எதுவித விமர்சனமுமின்றி ஏற்றுக் கொள்வதற்கு தயாராகவிருப்பவர்களே இயக்கமற்ற பெறுநர்கள் ஆவார்கள். இத்தகைய குழுவினர் சமூகத்தின் பெரும்பான்மை மக்கள் குழுவினர் ஆவர். ஊடக வர்த்தக அனுசரனை யினால் தமக்குத் தேவையான சமூக அபிப்பிராயங்களைக் கட்டியெழுப்புவதற்காக பெரும்பாலும் இந்த பெறுநர் கூட்டமானது பயன்படுத்தப்படுகிறது. இக்குழுவினர் ஊடகங்களோடு நிலையான தொடர்பினை வைத்திருப்பார்கள். அவ்வாறே ஊடகங்கள் மீது வரையறையற்ற நம்பிக்கையும் கொண்டிருப்பர். இலத்திரனியல் ஊடகங்களுக்கு அடிக்கடி தொலைபேசி அழைப்புகளைப் பெற்று கோரல்களை முன்வைத்தல், குறுஞ்செய்திகள், தபால் அட்டைகள் ஆகியவற்றினூடாக நிகழ்ச்சிகள், ஊடகவிய லாளர்கள் பற்றி விமர்சனத் திறனற்ற புகழ்மாலைகளை முன்வைத்தல் ஆகியவற்றைச் செய்பவர்கள் இந்த இயக்கமற்ற பெறுநர் குழுவினரே ஆவர். இவ்வாறு துலங்கல் களைக் காட்டாவிடினும் ஊடகங்களிலிருந்து வரும் நிகழ்ச்சிகள், கடிதங்கள் ஆகிய பல்தரப்பட்ட செய்திகளுக்கிணங்க தமது நாளாந்த நடவடிக்கைகளை அமைத்துக் கொண்டு செல்வது இயக்கமற்ற பெறுநர்களின் இயல்புகளாகும்.

## இயக்கமுள்ள / செயற்படுகின்ற பெறுநர்கள்

இயக்கமுள்ள பெறுநர் ஊடகச் செய்திகளின் நன்மை தீமையான தாக்கங்களைப் பற்றிய நல்ல விளக்கத்தோடு செயற்படுவர். அவ்வாறே ஊடகத்தில் முன்வைக்கப்படுகின்ற விடயங்களை தமது தேவைப்பாட்டுக்கிணங்க தெரிந்தெடுத்து நுகர்வு செய்கின்ற திறன் அவர்களிடம் காணப்படும். ஊடகங்களுக்கு இயக்கமுடன் துலங்கல்களைக் காட்டுவதற்கும் பெறுநர் சமூகத்தை அறிவுறுத்தல் செய்து ஊடக மற்றும் பெறுநர் தொடர்பினை வலுவூட்டச் செய்வதற்கும் அவர்கள் மேலும் சில நடவடிக்கைகளை மேற்கொள்வர். இத்தகைய பெறுநர்கள் ஊடகத்தின் மீது தாக்கம் விளைவிப்பதில் வெற்றியடைவதோடு அதன் வழியாக ஊடக மற்றும் பெறுநர்க்கிடையிலான உறவினை மிகவும் வினைதிறனுடையதாக்கிட வழிசமைப்பர். இதன்படி பெறுநர் தேவைகளுக்கேற்ப ஊடகத்தை வடிவமைத்திட இயக்கமுள்ள பெறுநர்களின் தலையீடு அவசியமாகிறது. கீழேயுள்ள விபரங்களில் 'தீட்சண்யன்' எனும் மாணவன் இயக்கமுள்ள பெறுநராகச் செயற்பட்டுள்ளமையைக் காணலாம்.

தீட்சண்யன் 11 ஆம் தரத்தில் கல்வி பயிலும் ஒரு மாணவன். ஒரு நாள் அவன் தொலைக்காட்சியில் பார்த்த வர்த்தக விளம்பரமொன்றின் காரணமாக கிளர்ச்சிக் குள்ளானான். மிக ருசியான உணவொன்றை தனது தாயாருக்கு தெரியாமல் களவாக உண்பதற்கு முயன்ற ஒரு சிறுபிள்ளை பற்றி அதில் காட்டப்பட்டது.

இதன் வாயிலாக சிறுபிள்ளைகளுக்கு பிழையான முன் மாதிரியொன்றைத் திணிப்பதாக தீட்சண்யன், பாடசாலை ஊடக சங்கத்தில் ஆற்றிய உரையொன்றில் வெளியிட்டிருந்தான். அவ் விளம்பரத்தை ஒளிபரப்பிய தொலைக்காட்சி அலை வரிசைக்கு இது பற்றி எதிர்ப்பு தெரிவித்து அறிவித்தல் ஒன்றை அனுப்ப வேண்டுமென்ற தீட்சண்யனின் முன்மொழிவிற்கு சங்கத்தின் உறுப்பினர்கள் சகலரும் உடன்பட்டனர்.

இதற்கிணங்க ஊடகச் சங்கத்தின் செயலாளர் உரிய விடயம் தொடர்பாக கடித மொன்றைத் தயாரித்து தொலைக்காட்சி நிறுவனத்துக்கு அனுப்பி வைத்தார்.

### 6.2.3 வெகுசன ஊடக குறிக்கோள்களும் பெறுநர்களின் குறிக்கோள்களும்

வெகுசன ஊடக இருப்பு தீர்மானிக்கப்படுவது பெறுநர் குழுவினராலேயே ஆகும். எனவே ஊடக நிறுவனங்கள் பெறுநரது குறிக்கோள்களை நிறைவேற்றுவதில் அதிக அக்கறை காட்ட வேண்டும். இருப்பினும் ஊடக நிறுவனங்களை நிர்வகித்து நடத்திச் செல்லத்தேவையான நிதி மூலதனத்தைப் பெற்றுக் கொள்வதிலும் அவதானம் செலுத்த வேண்டியுள்ளது. மேலும் ஊடக உரிமையாளர்களுக்கு பல்வேறு தனிப்பட்ட நிகழ்ச்சி நிரல்களும் இருக்கக் கூடும். அவற்றில் சில சமூக நன்மைக்காகவும் சில தனிப்பட்ட விருப்பங்களை நிறைவேற்றுவதற்காகவும் இருக்க முடியும்.

ஊடகங்களை நடத்திச் செல்வதானது இரு பிரதான குறிக்கோள்களை நோக்கியதாக அமைந்திட முடியும்.

- பொதுமக்கள் சேவையாக ஊடகங்களை நடத்திச் செல்லல்
- வர்த்தக நோக்கத்தில் ஊடகங்களை நடத்துதல்

பொது மக்களுக்கு இரசனையோடு கல்வியையும் மற்றும் அபிவிருத்தி சார்ந்ததான தகவல்களையும் பெற்றுக் கொடுப்பது மக்கள் சேவை ஊடகங்களின் குறிக்கோளாகும். ஆரம்பகாலப் பகுதியில் இலங்கை அரசுக்கு சொந்தமான வானொலி, தொலைக்காட்சி ஊடகங்கள் பொதுமக்கள் மையமாகக் கொண்டு செயல்பட்டன. ஊடக நிறுவனங்கள் வர்த்தக நோக்கில் செயலாற்றும்போது போட்டித் தன்மையாக அதிக பெறுநர் குழுவினரை வைத்துக் கொள்வதற்கு பெரும் முயற்சிகளை எடுத்தன. இங்கு பொதுமக்களுக்கு சேவையொன்றைப் பெற்றுக் கொடுப்பதற்கு மாறாக, தெரிந்தெடுத்த குழுவினருக்கு தெரிவு செய்த நிகழ்ச்சிகளை முன்வைப்பதனூடாக மக்கள் விருப்பினை ஊடகங்கள் தக்கவைத்துக் கொள்ள முயற்சிக்கின்றன.

**ஊடகம் என்பது ஒரு கைத்தொழிலாகும்.**

தகவல்களை சந்தைப்படுத்தல் இன்றைய உலகில் மிகவும் உயர் பெறுமதியைக் கொண்ட வர்த்தகப் பிரிவில் இணைக்கப்பட்டுள்ளது. ஊடகம் என்பது தகவல்கள் சந்தைப்படுத்தலை அடிப்படையாகக் கொண்டதொரு வர்த்தகமாகும். உயர் பெறுமதி கிடைப்பது அதிகமாக சந்தைப்படுத்தக் கூடிய தகவல்களுக்கேயாகும். அதிக இலாபத்தை எதிர்பார்க்கும் போது தொடர்பாடலில் சமூக நன்மைகள் கீழ் தள்ளப்படுவது ஊடகக் கைத்தொழிலில் காணக்கூடியதொரு இயல்பாகும்.

இன்று ஊடகக் கைத்தொழிலினுள்ளே கூர்மையான போட்டித் தன்மைகள் காணப் படுகின்றன. ஊடக நிறுவன உரிமையாளர்கள் போட்டியில் வெற்றி பெறுவதற்காக பல்வேறு பிரயோகங்களைக் கையாளுகின்றனர்.

செயற்பாடு 1

**ஊடகக் குறிக்கோள்களை இனங்காண்பதற்கான செயற்பாடு**

ஒரே நாளில் வெளியிடப்படுகின்ற வெவ்வேறான செய்தித்தாள்களில் அல்லது மின் ஊடகங்களில் ஒரே செய்தியானது வேறுபட்ட விதங்களில் அறிக்கையிடப்பட்டுள்ள விதத்தைக் காண முடியும்.

**பேரூந்து லொறி மோதியதில் மூவர் காயம்**

**அதிக வேகத்துடன் வந்த பஸ் வண்டி லொறியுடன் மோதி மூவருக்குக் காயத்தை ஏற்படுத்தியது.**

இவ்விரு அறிக்கைகளும் ஒரே சம்பவத்தை இரண்டு விதமாக விளங்கிக் கொண்டுள்ளதை நீங்கள் அவதானிக்க முடியும். முதலாவது அறிக்கையில் சம்பவம் நடுநிலைமையில் அறிக்கையிடப்பட்டுள்ளது. ஆனால் இரண்டாம் அறிக்கையில் குற்றம் பஸ் வண்டியை செலுத்திய சாரதி மீது சுமத்தப்பட்டுள்ளது.

இவ்விதம் பல்வேறு முறைகளில் அர்த்தம் கற்பிப்பதினூடாக எதிர்பார்க்கப்படுவது யாது ?

- எதையாவது மறைத்தல்
- ஒன்றை வெளிப்படுத்துதல்
- இல்லாத ஒன்றை ஆக்குதல்

ஆகியவற்றுள் ஒன்றாக அது இருக்கக்கூடும். தொலைக்காட்சி அலைவரிசை, மற்றும் வானொலி அலை வரிசை பலவற்றை இவ்விதமாக ஒப்பிட்டுப் படித்து பார்க்கவும். ஒவ்வொரு ஊடக நிறுவனங்களுடைய குறிக்கோள்கள் வேறுபடும் போது தாக்கம் செலுத்தும் பிரதான காரணிகளாவன ஊடக உரிமைத்துவமும் வர்த்தக அனுசரணையும் ஆகும்.

ஊடகங்களை செவிமடுக்கும் பெறுநர்கள் ஊடக பயன்பாட்டின்போது எதிர்பார்க்கின்ற குறிக்கோள்கள் பல இருக்கக்கூடும்.

செயற்பாடு 2

**பெறுநர் குறிக்கோள்களை இனங்காண்பதற்கான எளிமையான செயற்பாடு**

கீழ்வரும் வினாக்களுள் ஒன்றை உங்களது நண்பர்கள் பத்துப்பேருக்கு கொடுத்து அவர்கள் அளிக்கின்ற விடைகளைக் குறித்துக் கொள்ளவும்.

- நீங்கள் ஏன் செய்தித்தாள்களை வாசிக்கிறீர்கள்?
- வானொலியைச் செவிமடுப்பது ஏன்?
- தொலைக்காட்சியைப் பார்ப்பது ஏன்?

| | |
|---|---|
| அறிவைப் பெற்றுக் கொள்ளல் | உதாரணம் - வினா விடை நிகழ்ச்சிகளைக் கேட்டல் |
| தகவல்களை அறிந்து கொள்ளல் | |
| பொழுதுபோக்கினைப் பெற்றுக் கொள்ளல் | |

மேலேயுள்ள செயற்பாடுகளின் துணையோடு நீங்கள் வெகுசன ஊடகத்தை செவிமடுக்கும் பெறுநர்களின் குறிக்கோள்களை இனங்கண்டு கொண்டிருப்பீர்கள். தனது சாதாரண வாழ்க்கை நடவடிக்கைகளை நல்ல முறையில் பேணி நடத்திட வெகுசன ஊடகத்தின் உதவி கிடைக்கும் என்ற நம்பிக்கை. அவர்களிடம் காணப்படுவதை நீங்கள் புரிந்து கொண்டிருப்பீர்கள்.

பொதுசன ஊடகக் குறிக்கோள்கள் மற்றும் பெறுநர் குறிக்கோள்களுக்கிடையே உடன்பாடு மற்றும் எதிரெதிர்தன்மை இருப்பதை இதுவரை நீங்கள் பகுப்பாய்வு செய்து கொண்டிருப்பீர்கள். பொதுமக்கள் சேவையாக நடத்தப்பட்டு வருகின்ற ஒரு ஊடக நிறுவனம் பெறுநர் குறிக்கோள் மீது அதிக கவனம் செலுத்த வேண்டியுள்ளது. இருந்த போதும் இன்று பெருமளவில் காணக்கூடியதாக இருப்பது, வர்த்தக நோக்கில் செயல்படுகின்ற ஊடக நிறுவனங்களையே. இலாபத்தைக் குறிக்கோளாகக் கொள்வதன் காரணமாக ஊடக நோக்கங்கள் மற்றும் பெறுநரின் சமூக நோக்கங்களுக்கிடையே எதிரெதிர்த்தன்மைகளை அதிகளவில் காணமுடிகின்றது. இதன்படி பெறுநர்கள் எதிர்பார்க்கிற விதத்தில் சமூகத்தின் மீதான பொறுப்புணர்வுடன் செயற்படுதல் ஊடகங்கள் வாயிலாக நிறைவேற்றப்படுகின்றனவாவென்பது ஒரு பிரச்சினையான விடயமாகும்.

### 6.2.4 ஊடகம் மற்றும் பெறுநருக்கிடையிலான இடைத்தொடர்புகள்

பொதுவாக தொடர்பியலாளன் பெறுநர் மீதும் பெறுநன் தொடர்பியலாளன் மீதும் சமமான பாதிப்புகளை ஏற்படுத்தும் நிலையிலேயே வெற்றிகரமானதொரு தொடர்பாடல் நிகழ்கின்றது. ஊடகம் மற்றும் ஊடகப் பெறுநர் இடையே அவ்விதமான தொடர்பொன்றே எதிர்பார்க்கப்படுகின்றது. இங்கு ஊடகம் என்பதனால் அழைக்கப்படுவது வெகுசன ஊடகங்களும் புதிய ஊடகங்களுமேயாகும். இருப்பினும் இன்றைய ஊடகச் செயற்பாடுகளில் ஊடகம் மற்றும் பெறுநருக்கிடையே அத்தகைய இருவழி இடைத்தொடர்பு ஒன்றை காணமுடியுமாவென்பது பரிசீலனை செய்ய வேண்டிய ஒன்றாகும்.

ஊடகம் வழியாக பெறுநர்களின் வாழ்க்கையில் பலதுறைகள் மீதும் பாதிப்பு நிகழ்த்தப்படுவது பரகசியமான விடயமாகும். தற்போதைய சமூகத்தில், மக்கள் வாழ்க்கையில் நிகழ்கின்ற மாற்றங்கள் பெரும்பாலும் ஊடகங்களை அடிப்படையாகக் கொண்டு நிகழுவனவாகும்.

- **ஊடகம் வாயிலாக பெறுநனின் நடத்தை மாற்றப்படுகின்றது**

பிரபலமான ஆடை, அலங்காரம், விருப்பமான உணவு, பேசுகின்ற மொழி, பயன்படுத்துகிற கருவிகள் ஆகியவை ஊடகத் தகவல்களினால் அறிமுகப்படுத்தப் படுபவையாகும்.

- **ஊடகத்தால் தனியாட்களின் நாளாந்த நிகழ்ச்சி நிரல் தீர்மானிக்கப்படுகின்றன.**

உதாரணம் - காலையில் எழுதல், படித்தல், உணவு உண்ணல், ஓய்வெடுத்தல் போன்ற நாளாந்த நடவடிக்கைகள் திட்டமிடப்படுவது ஊடக நிகழ்ச்சிகளின் நேர அட்டவணைக்கேற்ப ஆகும்.

- **பெறுநனின் எண்ணங்கள், மனப்பாங்குகள் ஊடகத்தாலேயே வழி நடத்தப் படுகின்றன.**

நல்லது - கெட்டது, நன்மை - தீமை, ஒழுக்கம், எதிர்கால எதிர்பார்ப்புகள், கலாரசனை போன்ற உள அடிப்படையிலான காரணிகளிலும் கூட ஊடகத்தின் தாக்கம் செல்வாக்கு செலுத்துகிறது.

**ஊடகங்கள் மீது பெறுநர்களின் தாக்கம்**

ஊடகங்கள் நடத்தப்படுவது பெறுநர்களுக்காகவே ஆகும். அதன் கருத்து யாதெனில் பெறுநர்கள் இல்லாமல் ஊடகங்களுக்கு இருப்பு இல்லை என்பதாகும். அப்படியாயின் ஊடகங்கள் மீது தாக்கம் ஏற்படுத்திட பெறுநருக்கு இயலும். ஏதேனும் ஊடகச் செய்திகளை பெறுநர் புறக்கணிப்பாராயின் மேலும் அச்செய்தியால் ஊடகத்துக்குப் பலனேதும் இல்லை.

ஊடகங்களும் பெறுநர்களின் துலங்கல் பற்றி அவதானமெடுப்பதைக் காண முடிகிறது. அச்சு ஊடகங்களைப் போன்றே இலத்திரனியல் ஊடகங்களும் கடிதங்கள், தபால்

அட்டைகள், மின்னஞ்சல்கள், குறுஞ்செய்திகள், சமூக வலைத் தளங்கள், இணையத் தளங்கள் ஆகியவற்றைப் பயன்படுத்தி பெறுநர்களின் துலங்கல்களைப் பெற்றுக் கொள்கின்றன. பெருமளவு இலத்திரனியல் ஊடகங்கள் நிகழ்ச்சிகளின் முடிவில் தமது நிகழ்ச்சிகள் தொடர்பான அபிப்பிராயங்கள், முறைப்பாடுகளை முன்வைக்கும்படி பெறுநர்களிடம் கேட்டுக் கொள்கின்றன. ஆயினும் இது போன்ற நிகழ்ச்சிகளுக்கு பெறுநர் துலங்கலை முன்வைக்கும்போது நிகழ்ச்சிகளைப் பாராட்டி எழுதியனுப்பும் துலங்கல்களை மட்டுமே பெருமளவு காண முடிகின்றது. இதன் மூலம் ஊடகங்கள் தமது நிகழ்ச்சி பற்றி பாராட்டும் துலங்கல்களை மட்டும் அனுப்பும்படி பெறுநர்கள் மீது வக்கிரமான தாக்கத்தை உண்டாக்குவதையும் காணலாம். இதன்படி நடப்பது யாதெனில் பெறுநர்களின் துலங்கல்களுக்கு ஊடகங்கள் இசைவாக்கம் அடைவதிலும் பார்க்க, ஊடகங்களுக்குத் தேவைப்படும் துலங்கல்களை பெறுநர்களைக் கொண்டு பெற்றுக் கொள்வதேயாகும்.

பெறுநர்களின் உண்மையான துலங்கல்களுக்கு ஊடகக் கைத்தொழிலில் குறைந்த பெறுமானமே வழங்கப்படுவதை இங்கு காணலாம். பெரும்பாலான பெறுநர்கள் ஊடகங்களுக்குத் தேவைப்படும் விதத்தில் செயற்படுகிறார்களேயன்றி தமது உண்மையான தேவைகள் பற்றி போதிய விளக்கத்துடன் செயற்படுவதைக் காண முடிவதில்லை. இங்கு தேவைப்படுவது யாதெனில், பெறுநர்கள் சரியான முறையில் துலங்கல்களைக் காட்டி தமது தேவைகளுக்கேற்றவாறு ஊடகங்களை வடிவமைத்துக் கொள்வதே ஆகும்.

### ஒப்படைகள்

1. வெகுசன ஊடகங்களால் நமக்கு கிடைக்கின்ற நன்மைகளின் பட்டியலொன்றைத் தயாரிக்க.
2. புதிய ஊடகங்கள் மூலம் நமக்கு கிடைக்கின்ற நன்மைகளின் பட்டியலொன்றைத் தயாரிக்குக.
3. வெகுசன ஊடகங்களால் ஏற்படுகின்ற தீமைகளின் பட்டியலொன்றைத் தயாரிக்குக.
4. புதிய ஊடகங்களால் ஏற்படுகின்ற தீமைகளின் பட்டியலொன்றைத் தயாரிக்குக.
5. செய்தித்தாள்கள், வானொலி அலைவரிசை, தொலைக்காட்சி அலைவரிசை ஆகிய ஒவ்வொன்றுக்கும் இரண்டு உதாரணங்கள் தந்து; அவற்றின் உரிமையாளர்கள் யாரென்பது பற்றிய தகவல்களைக் கண்டறியுங்கள். (இதன்பொருட்டு பல்வேறு தகவல் மூலாதாரங்களைப் பயன்படுத்த வேண்டியேற்படும்.) அவ் ஊடக உரிமையாளர்களின் சமூகச் செயற்பாடுகள் மற்றும் உரிய ஊடகங்களின் நடத்தை ஆகியவற்றுக்கிடையே தொடர்பு உள்ளதாவென்பதை அவதானித்துப் பாருங்கள். இது தொடர்பாக வகுப்பில் சக பாடிகளுடன் கலந்துரையாடுக.

## 6.3 சிறுவர்களும் ஊடகங்களும்

### 6.3.1 சிறுவர்களும் ஊடகப் பயன்பாடும்

செய்தித்தாள்கள், வானொலி, தொலைக்காட்சி, கணினி, கைத்தொலைபேசி, இணைய வலைப்பின்னல் ஆகியவற்றை மனிதர்கள் தமது தகவல் தேவைகளை நிறைவேற்றிக் கொள்வதற்காகப் பயன்படுத்துகின்றனர். அவர்கள் ஒவ்வொரு ஊடகத்தையும் பயன்படுத்தும் விதம் வித்தியாசப்படுகிறது. அவற்றைப் பயன்படுத்த தேவைப்படும் அறிவும் வேறுபடுகின்றது. அவ்வாறே ஒவ்வொரு ஊடகப் பயன்பாட்டிலிருந்து பெறப்படும் இரசனையும் வேறுபடுகின்றது. ஆகவே, ஒவ்வொரு பெறுநரும் பல்வேறு ஊடகங்களைப் பயன்படுத்தும் போதும் காட்டுகின்ற ஆர்வங்கள் வேறுபடுகின்றன.

இன்று சிறுவர்கள் ஊடகப் பயன்பாடு தொடர்பாகக் கவனத்தில் கொள்ளத்தக்க பங்களிப்பை நல்குகின்றனர். பெரும்பாலான ஊடகங்கள் சிறுவர்களை இலக்கு வைத்து செய்திகளைத் தயாரிக்கின்றன. ஏனைய வளர்ந்தோரான பெறுநர்கள் குழுக்களைப் பார்க்கிலும் ஊடக உள்ளடக்கமானது சிறுவர்களுக்காக ஒதுக்கப்பட்டிருப்பதைக் காண முடிகின்றது. பெறுநர்களான சிறுவர்களை இலக்கு வைத்து தொலைக்காட்சி நிகழ்ச்சிகள், நாடகங்கள், கார்ட்டூன் மற்றும் வேறு திரைப்படங்கள், விளம்பர அறிவித்தல்கள், செய்தித்தாள் பக்கங்கள் தயாரிக்கப்படுவதைக் காணமுடிகின்றது. பாடசாலை விடுமுறை காலம் ஆரம்பிக்கப்படுவதோடு இணைந்து பெரும்பாலான தொலைக்காட்சி அலைவரிசைகளில் வார நாட்களில் நிகழ்ச்சிகள் வரிசைப்படுத்தப்படுவதானது சிறுவர்களைக் கவர்வதற்காகவே என்பதை உங்களால் அவதானித்து அறிந்து கொள்ள முடியும்.

சிறுவர்கள் தமது குடும்பத்தில், பாடசாலையில் அல்லது சமய நிறுவனத்தின் துணையோடு பெறுகின்ற பாதிப்பைவிட அதிக தாக்கத்தை ஊடகம் விளைவிக்கின்றது. சிறுவர்கள் மீது அதிக தாக்கத்தை ஏற்படுத்துவது அவர்கள் அதிகமாகப் பயன்படுத்தப் படுகின்ற ஊடகமேயாகும். சிறுவர்கள் அதிகமான ஆர்வத்துடன் இரசிப்பது எந்த ஊடகத்தினை என்பதைத் தேடியறிய முடியும்.

சிறுவர்களின் ஊடகப் பயன்பாடு குறித்து சிறியதொரு ஆய்வு மூலம் விளங்கிக் கொள்ள முடியும். மாணவர்கள் 20 பேரிடம் அவர்கள் ஊடகத்தைப் பயன்படுத்துகின்ற விதம் பற்றி விசாரித்து கீழ்வரும் அட்டவணையை பூரணப்படுத்துக. உண்மைத் தகவல்களையே குறிக்க வேண்டியது முக்கியமாகும்.

| | பெயர் | தொலைக்காட்சி பார்க்கும் நேரம் (மணி) | | வானொலியைக் கேட்கும் நேரம் (மணி) | | செய்தித்தாள் வாசிக்கும் விதம் (விடைக்குரிய கூட்டில் ✓ அடையாளமிடுக) | | | | கணினி அல்லது கைத்தொலைபேசி பயன்படுத்துகின்ற தடவைகளின் எண்ணிக்கை | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | நாளொன்றுக்கு | வாரமொன்றுக்கு | நாளொன்றுக்கு | வாரமொன்றுக்கு | நாள் தோறும் | வாரம் தோறும் | இடைக் கிடை | எப்போதுமே வாசிப்ப தில்லை | நாளொன்றுக்கு | வாரமொன்றுக்கு |
| 1 | | | | | | | | | | | |
| 2 | | | | | | | | | | | |
| 3 | | | | | | | | | | | |
| 4 | | | | | | | | | | | |
| 5 | | | | | | | | | | | |

திரட்டிய தகவல்களை கீழேயுள்ள அட்டவணைகளில் நிரப்புக. அதிகமாக பயன்படுத்திய ஊடகத்தைக் கண்டறியுங்கள். சில ஊடகங்கள் அதிகம் பயன்படுத்தப் படுவதற்கும் சில ஊடகங்கள் குறைவாகப் பயன்படுத்துவதற்குமான காரணங்களை நண்பர்களுடன் கலந்துரையாடுங்கள்.

| நாளொன்றுக்கு தொலைக்காட்சி பார்க்கும் காலம் (மணி) | மாணவர் தொகை | வாரமொன்றிக்கு தொலைக்காட்சி பார்க்கும் காலம் (மணி) | மாணவர் தொகை |
|---|---|---|---|
| 1 இற்கு குறைய | | 1 இற்கு குறைய | |
| 1-5 இடைப்பட்ட | | 1-5 இடைப்பட்ட | |
| 5 இற்கு அதிகமாக | | 5 இற்கு அதிகமாக | |

| நாளொன்றுக்கு வானொலி கேட்கும் காலம் (மணி) | மாணவர் தொகை | வாரமொன்றிக்கு வானொலி கேட்கும் காலம் (மணி) | மாணவர் தொகை |
|---|---|---|---|
| 1 இற்கு குறைய | | 1 இற்கு குறைய | |
| 1-5 இடைப்பட்ட | | 1-5 இடைப்பட்ட | |
| 5 இற்கு அதிகமாக | | 5 இற்கு அதிகமாக | |

| செய்தித்தாளை நாள்தோறும் வாசிக்கும் மாணவர் எண்ணிக்கை | செய்தித்தாள் வாரம்தோறும் வாசிப்போர் தொகை | எப்பொழுதாவது செய்தித்தாள் வாசிப்போர் தொகை | எப்போதுமே செய்தித்தாள் வாசிக் காதோர் தொகை |
|---|---|---|---|
| | | | |

### 6.3.2 சிறுவர்கள் நுகர்வோர்களாக

ஊடகங்களின் பிரதான எதிர்பார்ப்பாக இருப்பது பெறுநர்களை வென்றெடுப்பதேயாகும். தொலைக்காட்சி அலைவரிசை, வானொலி அலைவரிசை, செய்தித்தாள்கள் யாவுமே தமது பெறுநர்களின் கூட்டத்தை விரிவாக்கிட பல்வேறுபட்ட வழிமுறைகளைக் கையாளுகின்றன. பெறுநர்களின் இரசனை விருப்பங்களைக் கண்டறிந்து அவர்களைக் கவர்வதற்கு இயலுமான விதத்தில் ஊடக நிகழ்ச்சிகளைத் தயாரிப்பதில் ஊக்கமெடுக்கின்றன. ஊடகப் பெறுநர்கள் தொடர்பாக ஊடகங்கள் அத்துணை அக்கறை காட்டுவது ஏன் என்பது பற்றி நீங்கள் என்றைக்காவது வினாவெழுப்பியுள்ளீர்களா?

ஊடகங்களுக்கு பெறுநர்கள் என்போர் வள ஊற்றுக்கள் ஆவர். ஊடகக் கைத்தொழிலின் வெற்றிகரமான இருப்புக்கு பெறுநர்களின் நுகர்வுப்பெறுமானமே அடிப்படையாகின்றது. பொதுசன ஊடகத்துக்கு அதிகளவு வர்த்தக அனுசரணையாளர்களைப் பெற்றுக்கொள்ள இயலுமாயிருப்பது பெறுநர்கள் குழுக்களின் விரிவாக்கத்திலேயே தங்கியுள்ளது.

வர்த்தக அனுசரணையாளர்கள், ஊடக பெறுநர்களை நுகர்வோராகவே எண்ணுகின்றார்கள். அவர்களின் தேவைக்கேற்ப பெறுநர்களை சந்தையில் உள்ள பண்டங்களைக் கொள்வனவு செய்வதற்குத் தூண்டுவது ஊடகங்களேயாகும். ஊடகத்தைப் பயன்படுத்துகின்ற சகல பெறுநர் குழுக்களின் கொள்வனவு செய்தல் தேவை வேறுபடுகின்றது. இந்த ஒவ்வொரு குழுக்களையும் குறிவைத்து ஊடக விளம்பரங்கள் பல்வேறுபட்டவைகளை கொள்வனவு செய்ய முன்மொழிவு செய்கின்றன.

இதனிடையே சிறுவர்களுக்கு தனியான நுகர்வுப்பெறுமதியொன்றுள்ளது. நேரடியாக பணம் செலவழித்திட சிறுவர்களுக்கு இயலாத போதும் தமது பெற்றோரைக் கொண்டு தேவையானவற்றை விலைக்கு வாங்கிட அவர்களால் முடியும். இங்கு ஊடகமும் வர்த்தகர்களும் அதிகமாக சிறுவர்களை இலக்கு வைப்பதன் காரணம் அவர்களை இலகுவாகத் தூண்ட முடியுமென்பதுவேயாகும்.

| பெறுநர் குழு | இலக்காகக் கொண்டு முன்வைக்கின்ற செய்தி | முன்மொழியும் விலைக்கு வாங்குதல் |
|---|---|---|
| சிறுவர்கள் | கார்ட்டூன் திரைப்படம், சிறுவர் கதைகள், கல்வி நிகழ்ச்சிகள், அறிவுசார் நிகழ்ச்சிகள், பொழுதுபோக்கு விளையாட்டு | இனிப்பு, குடிபானங்கள், உடன் உணவுகள், விளையாட்டு உபகரணங்கள், விளையாட்டுப் பொருட்கள் |
| இளைஞர், யுவதிகள் | திரைப்படம், இசை நிகழ்ச்சிகள், ஜனரஞ்சக நிகழ்ச்சிகள் | கைத்தொலைபேசி, நவீன அலங்காரப் பாதணி, ஆடை அணிகள், அழகு பொருள்கள், உல்லாச சேவை |

| | | |
|---|---|---|
| வயது வந்தவர்கள் | செய்திகள், நடப்பு விவகாரம், சமூக விளக்கம்சார் செய்திகள், விவாதங்கள் | காப்புறுதி, வங்கி மற்றும் சுகநல சேவைகள் |
| இல்லத் தரசிகள் | மகளிர் நிகழ்ச்சிகள், ஜோதிடம் குடும்ப ஆரோக்கியம் பற்றிய நிகழ்ச்சிகள், காப்புறுதி பற்றிய செய்திகள் | பிள்ளைகளுக்கான உற்பத்திப் பொருள்கள், போஷாக்கு தொடர்பான தயாரிப்புகள், வீட்டு உபகரணம் |

ஊடகத்துக்குப் பெறுநர்கள் முக்கியமாவது தமக்கு அனுசரணை காட்டுகின்ற வர்த்தகர்களின் தயாரிப்புகளைக் கொள்வனவு செய்வதன் காரணமாகவேயாகும். இதனால் அதிகமாகக் கொள்வனவு செய்கின்ற நுகர்வோருக்கு ஊடகத்தில் அதிக பெறுமதி உரித்தாகின்றது. குறிப்பிட்ட வர்த்தக அனுசரணையின் கீழ் அச்சு மற்றும் இலத்திரனியல் ஊடகம் வழியாக பெற்றுத்தரப்படும் பரிசுகள் உரித்தாகுவதும், போட்டிகளில் வெற்றி பெறுவதும் அதிகமாகக் கொள்வனவு செய்யும் பெறுநர்களே ஆவர். ஊடக உள்ளடக்கத்துக்குள் அதிகமாகக் காணமுடிவது இளைஞர் மற்றும் சிறுவர்களை இலக்கு வைத்த நிகழ்ச்சிகளே ஆகும். இவ்விரு குழுக்களையும் இலகுவாகக் கொள்வனவு செய்ய வைக்கமுடியும் என்பதே அதற்குக் காரணமாகும்.

## செயற்பாடு 3

இலங்கையில் அதிகமானோர் தொலைக்காட்சியைப் பார்க்கின்ற மாலை 6.30 மணி தொடக்கம் இரவு 9.30 மணிவரையிலான காலப்பகுதியில் தொலைக்காட்சி அலைவரிசைகள் மூன்றினை மணித்தியாலத்திற்கு ஒன்றுவீதம் தனித்தனியாகப் பார்வையிடவும். அவற்றில் ஒளிபரப்பாகும் வர்த்தக விளம்பர அறிவிப்புகளைக் கீழ்வரும் அட்டவணையில் குறிக்கவும். அவை இலக்குவைக்கும் பெறுநர் குழு எதுவென்பதை கண்டறியுங்கள். உதாரணம் தரப்பட்டுள்ளது.

| நிகழ்ச்சி/விளம்பரத்தின் பெயர் | இலக்குவைத்த பெறுநர்குழு |
|---|---|
| பிஸ்கட் வர்த்தக விளம்பரம் | சிறுவர்கள் |
| | |
| | |

### 6.3.3 ஊடகம் சிறுவர் மீது செலுத்தும் தாக்கம்

அரங்கன் : அமுதன், நீ நேற்று 'பென்ரென்' (BenTen) கார்ட்டூன் பார்த்தாயா?

அமுதன் : ஆமாம், அதிலுள்ள சண்டைக்காட்சியையே நான் மிகவும் விரும்புகிறேன். 'பென்ரென்' னை யாராலும் தோற்கடிக்க முடியாது.

அரங்கன் : நான் அப்பாவிடம் சொல்லி 'பென்ரென்' தொப்பி ஒன்றையும், கடிகாரத்தையும், சப்பாத்தையும் வாங்கினேன்.

தாரணி : நான் அடுத்ததாகப் பார்ப்பது ''மியுசிக் ரிக் வெஸ்ற்'' நிகழ்ச்சியை. அதன் 'பிளே லிஸ்ற்' இல் அழகான 'மியுசிக் வீடியோஸ்' உள்ளன.

அமுதன் : ஆம்,'ஹிந்தி மூவிசோங்ஸ்' களும் இருக்கிறது. புதிய பாடல் கள் எவையென்பதை நான் அதன்மூலமே அறிந்துகொண்டேன்.

அரங்கன் : ரீவியில் புதிதாகக் காட்டப்படுகிற வர்த்தக விளம்பரத்திலுள்ள பிஸ்கற் வகையை நான் இன்று வாங்கி வந்தேனே!

தாரணி : அந்த விளம்பரத்தில் வருகிற சிறுவன் அணிந்திருக்கிற ஆடை 'பென்ரென்'னின் தோற்றம் மாதிரியானது.

அமுதன் : ஓ.. இன்று அரங்கனும் சரியா 'பென்ரென்' ஐப் போல இருக்கிறான்.

அரங்கன் : கார்ட்டூனையும், மியுசிக் ரிக்வெஸ்றையும் பார்த்து விட்டுத்தான் நான் படிக்க ஆரம்பிப்பேன்.

அமுதன் : ஏன், நீங்கள் ஊரும் உலகமும் நிகழ்ச்சி பார்ப்பதில்லையா? பாடசாலை விஞ்ஞானத்துக்கும், புவியியலுக்கும் சம்பந்தமான பல விடயங்களை அந்நிகழ்ச்சியில் அறிந்துகொள்ளலாம்.

மேலேயுள்ளது, சிறுவர்கள் சிலர் தாம் விரும்பும் தொலைக்காட்சி நிகழ்ச்சிகள் பலவற்றைப் பற்றிப் பேசுகின்ற உரையாடலாகும். அந்த தொலைக்காட்சி நிகழ்ச்சி களின் உள்ளடக்கம் சிறுவர் மீது ஏற்படுத்துகின்ற நன்மையானதும் தீமையானதுமான தாக்கங்களை கீழ்வரும் காரணிகளின் துணையோடு விசாரித்துப் பாருங்கள்.

- அவர்களது நவநாகரீகம் மீது
- இரசனையை வடிவமைப்பதன் மீது
- நாளாந்த நடவடிக்கைகளை திட்டமிடுதல் மீது
- பேசுகின்ற மொழி நடை மீது
- அவர்களது கல்வி மீது

***ஊடகம் வழியாக சமூகத்துக்கு இலக்கு வைக்கப்படும் தாக்கம் பற்றி பிரதான இரு அம்சங்கள் உள்ளன.***

1. *ஊடகம் வழியாக சமூகத்துக்கு நன்மையான தாக்கம் உண்டாகின்றது.*
2. *ஊடகம் வழியாக சமூகத்துக்கு தீமையான தாக்கம் ஏற்படுகின்றது.*

*எந்தவொரு சமூகத்திலும் முக்கியத்துவம் வாய்ந்த பிரசைகளாகக் கணிக்கப்படுவது சிறுவர்களே ஆகும். சிறுவன் விருப்பமான சுற்றாடலில் சுதந்திரமாக வளர்வதற்கு இடமளிப்பது வளர்ந்தோர் சமூகத்தின் கடமையும் பொறுப்புமாகும் இருப்பினும் தற்கால ஊடகப் பயன்பாட்டில் சிறுவர் சம்பந்தமாக அவை செயற்படும் விதம் பற்றி திருப்தியடைய முடிவதில்லை. ஊடகத்தின் செயற்பாடு சிறுவரின் சாதாரண வளர்ச்சியில் தீமையான தாக்கத்தையே குறிவைக்கிறது. சம்பிரதாய பூர்வமாக சிறுவர்கள் சமூகத்தில் வாழ்வதற்குரிய வழியை வளர்ந்தவர்களே வடிவமைத்துக் கொடுக்கிறார்கள். இன்று இப்பணியைச் செய்வது வெகுசன ஊடகமேயாகும்.*

- ***பாரம்பரியமான மொழி நடை மாற்றமடைதல்***

*தொலைக்காட்சி, வானொலி, நிகழ்ச்சிகளில் பயன்படுத்தப்படுகின்ற தமிழ் மொழியும் ஆங்கிலமும் கலந்த கலப்புமொழியைப் பயன்படுத்த பெறுநர்கள் பழகிக் கொள்ளுதல்.*

- ***மேலைத்தேச இரசனைக்குப் பழக்கப்படல்***

*அநாவசியமான பாலுணர்ச்சியை கிளர்ந்தெழச்செய்கின்ற, எளிய உல்லாசத்தை மட்டும் கொண்டு வந்து தருகின்ற ஊடக நிகழ்ச்சிகள் வழியாக சிறுவர்களின் இரசனை ஆற்றலும், புத்தியும் மழுங்கடிக்கப்படுகின்றன.*

- ***ஊடக நிகழ்ச்சிகளினால் நடித்துக்காட்டப்படும் பாத்திரங்கள் சிறுவர்களின் வீரதீரர்களாக உருவாக்கப்படல்***

*கார்ட்டூன், திரைப்படம், தொலைக்காட்சி நாடகங்கள் என்பனவற்றினூடாக உருவாக்கப்படுகின்ற வீரர் பாத்திரங்கள் சிறுவர்களின் முன்மாதிரிகளாக்கப்படுகின்றன. அப்பாத்திரங்களைப் பயன்படுத்தி நிகழ்த்தப்படுகின்ற வர்த்தக ஒளிபரப்புக்கு சிறுவர்கள் இலகுவாக ஈர்க்கப்படுதல் இதன் எதிர்மறையான பெறுபேறாகும்.*

- ***எங்களது சமூக பண்பாட்டுக்குப் பொருந்தாத நாகரிகங்களிலீடுபடல்***

*ஊடகம் வாயிலாக அதிகளவில் முன்வைக்கப்படுவது மேலைத்தேச பண்பாட்டுக்குப் பொருத்தமான அம்சங்களே ஆகும். அவற்றில் காணப்படும் கவர்ச்சி காரணமாக சுதேச கலாசார அம்சங்கள் புறக்கணிக்கப்படுகின்றன.*

- ***ஊடகங்கள் வாயிலாக வன்முறைசார்ந்த நிகழ்ச்சிகளை அடிக்கடி பார்ப்ப தனாலும் வாசிப்பதனாலும் சிறுவர்கள் வன்முறைக்குத் தூண்டப்படல்***

*பத்திரிகை, தொலைக்காட்சி, இணையத்தளங்கள் ஆகிய ஊடகங்களில் வரும் செய்திகளில்/ நிகழ்ச்சிகளில் வன்முறைகள் உள்ளடங்கிய தகவல்கள் அதிகளவில் காணப்படுகின்றன. அவற்றை எப்போதும் நுகர்வதால் சிறுவர்கள் வன்முறைகளுக்குப் பழக்கப்படுதல் ஒரு எதிர்மறை தாக்கமாகும்.*

*வன்முறைக் காட்சிகளடங்கிய கார்ட்டூன் திரைப்படங்கள்.

*குற்றங்கள், சாகசச் செயல்கள் மற்றும் மோதல் சம்பவங்கள் பற்றிய செய்திகள்

*வன்முறைச் சம்பவங்களை அறிக்கையிடும் வீடியோ காட்சிகள் மற்றும் நிழற் படங்கள்

*குறிப்பிட்ட சில திரைப்படங்கள்

*மோதல்களை சித்திரிக்கும் சின்னத்திரை நாடகங்கள்

*வன்முறைகளடங்கிய விளையாட்டு நிகழ்ச்சிகள் (மல்யுத்தம்)

*குறிப்பிட்ட சில கணினி விளையாட்டுக்கள்.

- **வினைதிறனற்ற பழக்கவழக்கங்களில் ஈடுபடுவதன் காரணமாக தமது காலத்தையும் பணத்தையும் வீணாக செலவழித்தல்**

அதிகளவில் தொலைக்காட்சி நிகழ்ச்சிகளைப் பார்ப்பதற்கு அடிமையாதல். கணினி விளையாட்டுகளுக்கு அடிமையாதல், வர்த்தக விளம்பரங்களில் முன்வைக்கப் படுகின்ற பல்தரப்பட்ட பிரயோசனமற்ற உணவுவகைகளை பெறுவதற்குப் பழக்கப்படுதல் ஆகிய வினைதிறனற்ற பழக்கவழக்கங்கள் பல உள்ளன. பொதுவாக நாளொன்றுக்கு 5 - 6 மணித்தியாலயங்கள் வரையிலான காலத்தை தொலைக்காட்சி பார்ப்பதில் செலவழிப்பதாக ஆய்வுகள் கூறுகின்றன. தொலைக்காட்சியானது சிறுவர்களை விளையாட்டு மைதானத்திலிருந்து தூர தள்ளி வைத்துள்ளன. உடற்பயிற்சி அப்பியா சங்கள் போதுமான அளவு கிடைக்காதபடியால் சிறுவர்களிடையே தொற்றாத நோய்கள் பல காணப்படுவதாக அறிக்கைகள் கூறுகின்றன. இந்நிலைமைகளுக்கு அநாவசிய உணவுப் பழக்கங்களே காரணமாகியுள்ளன.

- **ஊடகங்கள் வழியாக உயர்வாகக் கருதப்படுகின்ற ஆனால் தம்மால் நிறைவேற்றிக் கொள்ள இயலாத பயனுறுதியற்ற விருப்பங்களின் பின்னே அவற்றைத் துரத்திச் செல்வதன் காரணமாக வாழ்க்கை தோல்விக்குள்ளாதல்**

ஊடகங்கள் வழியாக பெறுநர்களிடையே பல்வித உயர் விருப்பங்கள், எதிர்பார்ப்புகள் உருவாக்கப்படுகின்றன. இவற்றுள் பல சிறுவர்களை தன்னிடம் இழுத்துப் பிடித்து வைத்துக் கொள்வதற்காக எடுக்கின்ற தந்திரோபாயங்கள் என்பதை பல பெறுநர்கள் விளங்கிக் கொள்வதில்லை. பரிசுகளைப் பெற்றுக்கொடுத்தல், மீயுயர் நட்சத் திரங்களை உருவாக்குதல் போன்ற பிரயோகங்கள் பெறுநர்களைப் பிணைத்து வைத்துக்கொள்ளும் தந்திரங்களாகும். பலர் இதுபற்றிய எதிர்பார்ப்பை வைத்துக் கொண்டு ஊடகத்துடனேயே வாழ்கின்றனர். எனினும் அத்தகைய சந்தர்ப்பங்கள் உரித்தாவது மிகக்குறைந்தளவிலேயே என்பதையும் தமது காலத்தையும் பணத்தையும் காரணமின்றி வீணாக்குவதையும் அப்பெறுநர்கள் புரிந்து கொள்வதில்லை.

ஊடகங்களால் சமூகத்துக்கு ஏற்படுவது தீமையான தாக்கங்கள் மட்டுமல்ல - தனியாள் மற்றும் சமூகத்தின் அபிவிருத்தியின் மீது ஊடகங்களினால் செய்யக்கூடிய தாக்கமும் பற்றி கவனத்தில் கொள்ளவேண்டியுள்ளன. கல்வியைப் பெற்றுக் கொடுப்பதற்காக

ஊடகங்களை வினைதிறனுடன் பயன்படுத்தல் தொடர்பாக இன்று சமூகத்தின் கவனம் திருப்பப்படுதல் வேண்டும்.

### 6.3.4 ஊடகங்கள் வழியாகக் கற்றல்

ஊடகங்களினால் சமூகத்துக்கு ஏற்படுத்தக்கூடிய தாக்கங்களை கருத்தில் கொள்ளும் போது அவற்றைக் கல்விக்காக வினைதிறனுடன் பயன்படுத்த முடியுமென்பது தெரிகின்றது. அதற்குத்தேவைப்படுவது புத்திகூர்மையுடன் ஊடகத்தைப் பயன் படுத்துதல் / நுகர்தல் ஆகும். ஒவ்வொரு ஊடகப்பயன்பாட்டிலும் சிறுவர் பெற்றுக் கொள்ளக்கூடிய கற்றல் வாய்ப்பு யாதென்பதை இனங்காண்போம்.

**பத்திரிகைகள் வாயிலாக,**

- வாசிக்கக் கற்றுக்கொள்ளல்.
- பேச்சு / சொற்களஞ்சியத்தை விரிவாக்குதல்.
- வசனங்களை/வடிவங்களை உருவாக்கிடக் கற்றுக்கொள்ளல்.
- பல்வித கருத்துக்கள், தகவல்கள், செய்திகளை தமது அறிவுத் தொகுதியோடு சேர்த்துக் கொள்ளல்.
- பல்வித கருத்துக்களைப் படித்து உள்ளத்தில் கற்பனைகளை உருவாக்கும் பலத்தை மேலும் விருத்தி செய்தல்.
- மனோரீதியான ஓய்வோடு செயற்பட பழகுதல்.
- இரசனையுணர்வைப் பெற்றுக்கொள்ளல்.

**வானொலி மூலமாக,**

- செவிமடுக்கப் பழகுதல்.
- பல்வித சொற்கள் மற்றும் வாக்கிய கோலங்களைக் கற்றல்.
- பல்வேறு பேச்சுப் பாணிகளைக் கற்றல்.
- கற்பனா சக்தியை வளர்த்துக்கொள்ளல்.
- அழகியல்சார் எண்ணங்கள் ஊட்டம் பெறுதல்.
- இசைக்கு, பாடுவதற்கு, இரசிப்பதற்குப் பழகுதல்.

**தொலைக்காட்சி வாயிலாக,**

- பலவற்றைக் கண்களால் பார்த்திட பழகுதல்.
- இரசனையுணர்வு விருத்தியடைதல்.
- பழக்கவழக்கங்களைக் கற்பிக்கின்றது.
- இரசிப்பதற்கு கற்றுத் தருகின்றது.

- கல்வியை விருப்பமானதாக்குதல்.
- கலாசாரத்தைக் கற்றுத்தருகின்றது.

***கணினி, இணையதளங்கள் வழியாக,***

- நண்பர்களோடு, அறிவு, தகவல்களை பரிமாறிக்கொள்தல்.
- தேசிய, உலகளாவிய ரீதியில் அறிவையும் தகவல்களையும் பரிமாறிக் கொள்ளுதல்.
- பல்லூடகப் பயன்பாடு வழியாக புலன்களின் இயக்கம் விருத்தியடைதல்.
- உலகம் பற்றிய விளக்கத்தைப் பெற இயலுமாதல்.
- பல்வித மக்கள் குழுவினர், பண்பாடுகள் பற்றி கற்றுக் கொள்ளமுடியுமாதல்.
- பல்வேறு விடயங்களுக்குரிய தகவல்களைத் திரட்ட முடியுமாதல்.
- கல்வி ஜனரஞ்சகமாதல்.
- ஏனைய மொழிகளைக் கற்றல் இலகுவாதல்.

***ஒப்படைகள்***

1. உங்களது தாய்மொழி தவிர்ந்த வேறொரு மொழியில் (சிங்களம் அல்லது ஆங்கிலம்) வெளிவந்த செய்தித்தாளொன்றை எடுத்து அதில் உங்களுக்குத் தெரியாத புதிய சொற்களைத் தெரிந்து அவற்றின் பொருளையும் கண்டறியுங்கள்.
2. ஆசிரியர்களின், வளர்ந்தோரின், நண்பர்களின் மற்றும் உங்களது கருத்தையும் ஒன்று திரட்டி, பல்வேறு தொலைக்காட்சி அலைவரிசைகளில் ஒளிபரப்பாகின்ற சிறுவர்களுக்கு கல்விசார் பெறுமதியுடைய நிகழ்ச்சிகளின் பட்டியலொன்றைத் தயாரிக்குக.

## 6.4 விமர்சனத் தன்மையும் புதிய ஊடக ஒழுக்கநெறியும்

ஊடகங்களை வழி நடத்துகின்ற ஊடகவியலாளருக்கு ஒழுக்கநெறித் தொகுதியொன்று இருக்கவேண்டுமென்பதை இதுவரை நீங்கள் விளங்கிக் கொண்டிருப்பீர்கள். ஒழுக்கநெறி வழியாக நிரூபணமாவது ஊடகவியலாளர் சமூகத்தின் மீது காட்டுகின்ற பொறுப்புடைமையாகும். சிறந்த ஊடக பண்பாடொன்று நிலவுகின்ற சமூகத்தில் ஊடகவியலாளர்கள் தாம் வாழுகின்ற சமூகத்தினது நன்மை மற்றும் பாதுகாப்புக்காக ஊடகத்தைப் பயன்படுத்துகின்றனர். ஊடகவியலாளர்கள் ஒழுக்கசீலத்தைப் பேணிப் பாதுகாத்தல் மீது அக்கறை காட்டுவார்களேயானால் பெறுநர்களுக்கு தமது சமூக வாழ்க்கையை சிறப்பாகக் கொண்டு சென்றிடும் வாய்ப்பு கிட்டுகின்றது.

அவ்வாறே சமூகத்தின் சிறந்த இருப்பினைப் பாதுகாத்தல் மீது பெறுநர்களுக்கும் பெரும் பொறுப்பு உள்ளது. ஊடகப் பெறுநர்களின் ஒழுக்க சீலத்தைப் பேணுகின்றமை

முக்கியத்துவம் பெறுவது அதனாலேயே ஆகும். ஊடகத்துக்கு சரியான துலங்கலைக் காட்டி விமர்சனரீதியாக செயற்படுவது ஊடகப் பெறுநர்களது கடமைப் பொறுப் பாகின்றது. புதிய ஊடகப் பயன்பாட்டில் அதனுடைய பாதிப்பு பிரபல்யமாகக் காணப்படுகின்ற இக்காலத்தில் கவனத்தோடு புதிய ஊடகங்களைப் பயன்படுத்துதல் தொடர்பாக கூடிய கவனம் செலுத்த வேண்டியுள்ளது.

### 6.4.1 கணினி ஒழுக்கநெறிகள்

கணினி இன்று சமூகத்தின் சகலருக்கும் சமீபமாகி விட்டதொரு கருவியாகும். எல்லாத் துறைகளுடனும் கணினி தொடர்புபடுத்தப்பட்டு செயற்பாடுகள் இலகுவாக் கப்பட்டுள்ளன. கணினி வழியாக பலவிடயங்கள் செய்யமுடியுமாதலால் அதன் மூலம் நன்மையான விளைவுகளுடன் தீமையான விளைவுகளும் ஏற்படுவதைக் காணமுடிகின்றன. பொறுப்புணர்வின்றி கணினியைப் பயன்படுத்துவதால் உங்களுக்கும் உங்களைச் சூழவுள்ள சமூகத்தில் வாழ்வோருக்கும் முறையற்றவைகளே நிகழ்கின்றன. கணினியைப் பயன்படுத்தும்போது கீழ்வரும் ஒழுக்க நெறிகளைப் பின்பற்றுதல் பொருத்தமானதாகும்.

**கணினி ஒழுக்கநெறிகள்**

1. பிறருக்கு தீங்கு தரும் கணினிப் பயன்பாட்டை தவிர்த்தல்.
2. பிறருடைய கணினி தரவுகள், கடிதக்கோப்பு ஆகியவற்றைப் பயன்படுத்து வதிலிருந்து தவிர்த்தல்.
3. நேர்மையற்ற செயற்பாடுகளுக்காக கணினியைப் பயன்படுத்தாமை.
4. அனுமதியற்ற மென்பொருள் பயன்பாட்டைத் தவிர்த்தல்.
5. தமக்கு உரித்தல்லாத கணினி வலைப்பின்னலினுள் அனுமதியின்றி உள்நுழை தலைத் தவிர்த்தல்.
6. ஒழுக்க விரோத மற்றும் சட்டவிரோதமான செயற்பாடுகளுக்காக கணினியை பயன்படுத்துவதைத் தவிர்த்தல்.
7. கணினி விளையாட்டுக்கள், சமூக வலைப்பின்னல்கள் மற்றும் வேறு இணையத்தளங்களுக்கு அடிமையாகி தமது அன்றாட நடவடிக்கைகளுக்கும் மற்றும் உளம் சார்ந்த சமநிலைக்கும் தீங்கு ஏற்படும் விதத்தில் கணினியைப் பயன்படுத்துவதைத் தவிர்த்தல்.

### 6.4.2 கைத்தொலைபேசி ஒழுக்கநெறிகள்

அண்மைக்காலங்களில் பயன்பாட்டுக்கு வந்த மிக முன்னேற்றமடைந்ததொரு தொடர்பாடல் கருவியாக கைத்தொலைபேசி மிகவும் பிரபல்யமாகியுள்ளது. அது தனிப்பட்ட வாழ்க்கைச் செயற்பாடுகளை இலகுபடுத்துவதன் காரணமாக இன்று கைத்தொலைபேசி எல்லோரினதும் தனிப்பட்டதொரு கருவியாக விளங்குகின்றது.

இருப்பினும் முறையான ஒழுக்கநெறியொன்றைப் பயன்படுத்தாமை காரணமாக கைத் தொலைபேசியினூடாக நிகழ்கின்ற சமூக முறைகேடான செயற்பாடுகள் அதிகரித்துச் செல்கின்றன.

கைத்தொலைபேசியை நற்பண்புடன் பயன்படுத்துதல் முன்னேற்றமடைந்த சமூகத்தின் இலட்சணமாகும். அதனால் கீழ்வரும் கைத்தொலைபேசி ஒழுக்கநெறிகள் உங்களுக்கு ஒரு வழிகாட்டலைப் பெற்றுத்தரும்.

**கைத்தொலைபேசி ஒழுக்கநெறிகள்**

1. பிறரை ஏமாற்றுவதற்காகப் பயன்படுத்தக்கூடாது.
2. பிறரை வேலைச்சுமைகளிலிருக்கும்போது, நித்திரை அல்லது ஓய்வெடுக்கும் சந்தர்ப்பங்களின்போது தொல்லைப்படுத்துவதற்கு பயன்படுத்தக்கூடாது.
3. அழைப்பினை மேற்கொள்ளும்போதும் அல்லது பெற்றுக்கொள்ளும்போதும் ஒழுக்கநெறியுடன் பேசுதல்.
4. மற்றவர்களுக்கு இடையூறு விளைவிக்கும் விதத்தில் சத்தத்தையெழுப்பி கைத்தொலைபேசியில் பேசாதிருத்தல்.
5. திரையரங்கு, நூல் நிலையம், கூட்டங்கள் போன்ற பொது இடங்களில் கைத்தொலைபேசியை செயல் இழக்கச்செய்து அல்லது நிசப்தமாக்கி வைத்தல்.
6. கைத்தொலைபேசி ஊடாக வருகின்ற அறிந்திராதோர் அழைப்புகள் அல்லது குறுஞ்செய்திகளுக்கு துலங்கல் காட்டாதிருத்தல்.
7. மற்றவர்களது கைத்தொலைபேசிகளில் உள்ளடங்கியுள்ள தகவல்களைப் பயன்படுத்துவதைத் தவிர்த்துக்கொள்ளல்.

### 6.4.3 சமூக ஊடகங்களது ஒழுக்கநெறிகள்

புதிய தொடர்பாடல் ஊடகங்களின் முன்னேற்றம் காரணமாக உலகமுழுவதையுமே தொடர்புபடுத்தி உருவாகிய ஆட்களிடையிலான தொடர்பாடல் சாதனமாக சமூக இணையதள வலைப்பின்னல் காணப்படுகின்றது. Facebook எனும் முகநூல், Twitter ஆகியன இன்று ஜனரஞ்சகமான சமூக ஊடக வலைப்பின்னல் தளங்களாக விளங்குகின்றன. சமூக ஊடகங்கள், மனித சமூகம் இதுவரை கொண்டிராத தொடர் பாடல் அனுபவங்களைப் பெற்றுக் கொடுப்பதில் அவை வெற்றி கண்டுள்ளன.

சமூக ஊடகம் மானுடத் தொடர்பாடல் எல்லைகளைத் தாண்டிச்செல்வது நன்மைகளைத் தருவதுபோலவே தீமையான பாதிப்புகளையும் ஏற்படுத்திவிடக் காரணமாகின்றன. அவற்றை பொறுப்புணர்வுடன் பயன்படுத்தாவிட்டால் அவை தனிப்பட்ட முறையில் ஒவ்வொருவருக்கும் பொது வாழ்வில் சமூகத்துக்கும் தீங்கை விளைவிக்கவல்லன.

**சமூக ஊடகங்களின் ஒழுக்கநெறி**

1. தம்மைப் பற்றிய உண்மைத்தகவல்களை மறைத்துவிட்டு மற்றவர்களை ஏமாற்றுவதை தவிர்த்துக் கொள்ளல்.
2. பிழையான உண்மையற்ற தகவல்களை வலைப்பின்னலுக்குள் சேர்த்துக் கொள்வதைத் தவிர்த்துக் கொள்ளல்.
3. தன்னைப் பற்றிய தகவல்களை முன்பின் அறிமுகமில்லாதவர்களுக்கு வழங்காதிருத்தல்.
4. சமூக ஒழுக்கத்திற்கு பங்கம் விளைவிக்காதிருத்தல்.
5. மற்றையவர்களின் தனிப்பட்ட விடயங்களில் தலையிடாதிருத்தல்.

மனிதன் மூலமாக முன்னேற்றகரமான தகவல்களைத் தொடர்பாடல் ஊடகங்களூடாக உருவாக்கிக்கொண்டமையானது தமது தொடர்பாடல் நடவடிக்கைகளை இலகுவாக்கிக் கொள்வதற்காகவேயாகும். ஆனால் இன்று தொடர்பாடல் ஊடகங்கள் மனித வாழ்க்கையின் மீது பலவிதத்திலும் பாதிப்புகளை ஏற்படுத்துகின்ற பிரபல்யமான காரணிகளாக விளங்குகின்றன. மனித அறிவின் மகிமையால் உருவான தொடர்பாடல் ஊடகங்களை வினைதிறன் மிக்கனவாகப்பயன்படுத்துவதால் அறிவு பூர்வமாக வழிநடத்தி நிகழ்த்தவேண்டிய பலவற்றைச் செய்யலாமென்பதை இங்கு கவனத்தில் கொள்ளவேண்டியது அவசியம்.

**பயிற்சிகள்**

உங்களுக்கு விருப்பமான ஊடக செய்தியொன்றைத் தெரிவு செய்யுங்கள். அச்செய்தி பற்றி பின்வரும் வினாக்கள் மூலமாக பகுப்பாய்வு செய்யுங்கள்.

1. செய்தியை முன்வைப்பவர் யார்?
2. செய்தி வழியாக இலக்கு வைக்கப்படும் பெறுநர் யார்?
3. செய்தியை முன்வைப்பதன் நோக்கம் யாது?
4. செய்தியின் மீது பெறுநரின் கவனத்தைப் பெற்றுக் கொள்ள பயன்படுத்தப்பட்ட தந்திரோபயம் யாது?
5. செய்தியினூடாக நேரடியாக சொல்லப்படாத மறைந்துள்ள விடயங்கள் எவை?
6. செய்திகாரணமாக பெறுநரிடம் ஏற்படுகின்ற மாற்றம் யாது?

    i. பகுப்பாய்வு மூலம் கண்டறிந்த விடயங்களை வகுப்பில் முன் வைக்குக.
    ii. அதன் துணையோடு கடிதமொன்றைத் தயாரித்து பாடசாலை சுவர்ப் பத்திரிகையில் வெளியிடுங்கள்.
    iii. அக்கடிதத்தை தேசியசெய்தித்தாளில் வெளியிடுவதற்காக அனுப்பி வையுங்கள்.